
கல்கி
KALKI
6.5.2001
ரூ. 5.00
அடிபட்ட
வேங்கை!
வி.ஐ.பி. தொகுதி ரவுண்ட்–அப்!

# Now Air-India at your fingertips!

Introducing www.airindia.com

Flight information? Reservations? Meal requests? Seat preferences? Just click on our site at www.airindia.com. And we'll take care of everything. Sounds convenient? That's cyber travel for you - a reality of the 21st century!



एअर-इंडिया
AIR-INDIA

HTA.2086.200






2001 மே 6
விஷு சித்திரை 23
மலர் : 59
இதழ் : 40

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# ஜெயலலிதா: அடிபட்ட வேங்கை!

ஒரு வேட்பாளர் இரண்டு தொகுதிகளில் வேட்பு மனு தாக்கல் செய்வதே அவரது அவநம்பிக்கையின் அடையாளம்தான். ஒரு தொகுதியில் தோற்றாலும் மற்றதில் ஜெயிக்கலாம் என்கிற கணக்கே பயத்தின் அறிகுறிதான். வெற்றி குறித்த சந்தேகத்தின் காரணமாக, ஆண்டிப்பட்டி, கிருஷ்ணகிரி என்று இரு தொகுதிகளில் வேட்புமனுத்தாக்கல் செய்த ஜெயலலிதா, அவை ஏற்கப்படாது என்கிற சந்தேகம் வலுத்துப் போய், கடைசி நிமிடத்தில் புதுக்கோட்டையிலும் புவனகிரியிலும் வேறு வேட்பு மனுக்கள் தாக்கல் செய்தார்! இத்தனைக்கும், இரண்டு இடங்களுக்கு மேல் ஒருவர் வேட்புமனு தாக்கல் செய்யலாகாது என்பது தேர்தல் விதி! இவ்விதி மீறப்பட்டால் வேட்புமனுக்கள் நிராகரிக்கப்படும் அபாயம். அப்படியிருந்தும், இருவேறு இடங்களுக்கு அவசரமாக ஆள் அனுப்பி, வேட்புமனுக்களை அவர் சமர்ப்பிக்க, அதைச் சம்பந்தப்பட்ட தேர்தல் அதிகாரிகளும் பரிசீலனைக்கு ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்!

ஜெயலலிதாவின் இந்த அர்த்தமற்ற நடவடிக்கையே அவரது மனநிலையின் கலவரத்தைத்தான் எடுத்துக்காட்டுகிறது.

பரிசீலனைக்குப் பிறகு நான்கு வேட்புமனுக்களும் நிராகரிக்கப்பட்டுவிட்டன! டான்ஸி வழக்கில் 'ஜெ' குற்றவாளி என்று தீர்ப்பளிக்கப்பட்டிருப்பதால் அவர் தேர்தலில் நிற்கலாகாது என்று தேர்தல் கமிஷன் தனது அதிகாரிகள் மூலமாக முடிவு கூறியிருக்கிறது. நான்கு தொகுதிகளில் வேட்புமனு தாக்கல் செய்த காரணத்தாலும் 'ஜெ' வேட்பாளராகும் தகுதியை இழந்துவிட்டதாகச் சொல்கின்றனர் சம்பந்தப்பட்ட தொகுதிகளின் தேர்தல் அதிகாரிகள்.




ஆனால், இது பாதி கிணறு தாண்டிய கதைதான்! ஜெயலலிதா, தமிழகத்தின் அடுத்த முதல்வர் தாம்தான் என்று சத்தியம் செய்யாத குறையாகத் தொடர்ந்து பேசி வருகிறார்! நான்கு வேட்பு மனுக்களும் நிராகரிக்கப்பட்ட கணம் முதலாக, அ.தி.மு.க. அணி தம்மைத்தான் முதல்வராக முன்நிறுத்தும் என்று முழங்கி வருகிறார்!

இது சாத்தியமும் கூட. அ.தி.மு.க. பெரும்பான்மை பெற்று விட்டால், ஜெயலலிதாவை முதல்வராக முன்நிறுத்தி, ஆறு மாதங்களுக்குள் அவர் சட்டமன்றத்தில் இடம்பிடிக்கத் திட்டமிட முடியும். அக் கட்சியின் அனைத்து முயற்சிகளும் இந்த இலக்கு நோக்கியே இருக்கும். ஜெயலலிதாவை முன்நிறுத்தி அ.தி.மு.க. அணி தமிழகத்தில் ஒரு பிரும்மாண்டமான அனுதாப அலையை உருவாக்கி, வாக்குகளை அடித்துச் செல்ல முயற்சி செய்யும். இதற்கான நடவடிக்கைகள் ஏற்கெனவே ஆரம்பித்து விட்டன. தாமே முதல்வர் என்று முழங்கும் அ.தி.மு.க. தலைவிக்கு ஒத்து ஊதுகிறார் வீரமணி. நான்கு தொகுதிகளில் ஜெ. வேட்புமனு நிராகரிக்கப்பட்டதால் இப்போது அவர் 234 தொகுதிகளிலும் போட்டியிடுவதாகச் சொல்கிறார். கம்யூனிஸ்ட் தலைவர் சங்கரய்யா, "மதச்சார்பற்ற கூட்டணியின் தேர்தல் இயக்கத்துக்கு எவ்வித பாதிப்பும் ஏற்படாது" என்று பேசுகிறார். மூப்பனார், வேட்புமனுக்கள் நிராகரிக்கப்பட்டது "துரதிர்ஷ்டவசமானது" என்று வருத்தம் தெரிவிக்கிறார்.

ஜெயலலிதாவின் சிவகங்கை அறிக்கைதான் எல்லாவற்றையும் தூக்கிச் சாப்பிடுகிறது! வேட்பு மனுக்கள் நிராகரிக்கப்பட்டது கருணாநிதியின் சூழ்ச்சியினால்தான் என்று ஆரம்பித்து, தி.மு.க.வினர் தங்கள் பேச்சால் தேர்தல் அதிகாரிகளின் முடிவைத் திசைதிருப்பி விட்டனர் என்று குற்றம்சாட்டி, கிளைமேக்ஸாக, "தருமத்தின் வாழ்வுதனைச் சூது கவ்வும்; தருமம் ஒருநாள் வெல்லும்!" என்ற அமர வரிகளை எடுத்துச் சொல்லி மகாகவியையே கேவலப்படுத்துகிறார்.

ஜெயலலிதாவின் வேட்பு மனுக்கள் ஏற்கப்படுமா என்ற கேள்வியும் விவாதமும் தேர்தல் தேதி அறிவிக்கப்படுவதற்கு முன்பிருந்தே கூட அரசியல் வட்டாரங்களிலும் பத்திரிகை வட்டாரங்களிலும் சட்டத் துறையினரிடையேயும் பொதுமக்களிடையேயும் உலவி வந்தன. எனவே அவற்றைத் தேர்தல் கமிஷன் நிராகரித்திருப்பது தி.மு.க.வோ முதல்வரோ கொடுத்த அழுத்தத்தினால் அல்ல என்பது தெளிவு. தேர்தல் கமிஷன் அப்படி வளைந்து கொடுக்கக்கூடியது அல்ல.




ஆனால், ஜெயலலிதா மேடைதோறும் அரங்கேற்றும் நாடகங்கள் இந்தத் தர்க்கவாதங்களை மூழ்கடித்து விடக்கூடும். தேர்தல் பிரசாரம் முடியும் வரை குற்றச்சாட்டுகளும் நீலிக்கண்ணீரும் நிரம்பிய 'அரசியல் மெகா தொடரை', மறுபடியும் மறுபடியும் மேடையேற்றி மக்களை மூளைச் சலவை செய்து விடுவார் ஜெயலலிதா. இந்தக் கலையில் அவர் வல்லவர் என்பதைக் கடந்த கால அனுபவங்கள் நமக்கு உணர்த்தியிருக்கின்றன.

விஷயம் அறிந்த வாக்காளர்கள் இந்த நாடகத்துக்குப் பலியாகாவிட்டாலும் பாமர மக்கள் உணர்ச்சிபூர்வமாக பாதிக்கப்பட்டு, தங்கள் வாக்குகளை, அனுதாப அலையில் மிதக்கும் 'ஜெ'வுக்கு அளிக்கும் வாய்ப்புகள் மிக அதிகம்.

இதனாலேயே எதிரணியின் பணி மிகவும் சிக்கலாகிறது. ஜெயலலிதாவின் ஊழல்களைச் சொல்லி, தங்கள் சாதனைகளைப் பட்டியலிட்டு, வோட்டு கேட்பதற்கு முன் அவ்வணியினர் முதலில் ஜெயலலிதா செய்வது துஷ்பிரசாரம் - ஏமாற்று வேலை - என்பதை மக்களுக்கு உணர்த்தியாக வேண்டும். அவர்களுடைய பணி இரட்டிப்பாகிறது; நேரம் பாதியாகக் குறைகிறது!

மே பத்தாம் தேதி தேர்தல். இவ்விதழ் வெளியாகும் தினத்தில் பிரசாரம் முடிவதற்கு ஒருசில தினங்களே மிச்சமிருக்கும்.

தி.மு.க.வும் அதன் கூட்டணி சகாக்களும் உயிரைக் கொடுத்து உழைத்தாலன்றி தமிழக வாக்காளர்கள் திசை தவறிப் போய்த் தங்களுக்குத் தீமையைத் தேடிக் கொள்வார்கள்.

ஜெயலலிதாவை எதிர்த்துச் செய்யப்படும் பிரசாரத்தில் தனிநபர் விரோதம் தலைகாட்டக் கூடாது என்பது மிகவும் முக்கியம். அப்படிப்பட்ட பிரசாரத்தை உடனே தனக்கு மேலும் சாதகமாக்கிக் கொண்டு விடுவார் ஜெ.

தமது நான்கு வேட்புமனுக்களுள் ஏதேனும் ஒன்று நிச்சயமாக ஏற்கப்படும் என்ற எதிர்பார்ப்பு ஜெயலலிதாவுக்கு இருந்திருக்கிறது என்பதும் நான்குமே நிராகரிக்கப்பட்ட ஏமாற்றத்தை அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை என்பதும் அவருடைய பேச்சுக்கள் மூலம் தெளிவாகத் தெரிகிறது.

அடிபட்ட வேங்கை ஆபத்தானது; எதற்கும் துணியக்கூடியது. அதை எதிர்கொள்ள பலமான ஆயுதம் வேண்டும். கூட்டணி ஒற்றுமை என்ற குண்டுகள் தி.மு.க. அணியின் பிரசார பீரங்கிகளுக்கு வலுசேர்த்தாக வேண்டும். ○

## பீரில் பூச்சி!

பீர் வைத்திருந்த மக்கில் ஒரு பூச்சி விழுந்து விட்டது. ஆங்கிலேயன்–மக்கைத் தூக்கி எறிந்து விட்டுப் போனான். இந்தியன்–பூச்சியைத் தூர எறிந்து விட்டு பீரைக் குடித்தான். சைனாக்காரன்–பூச்சியைத் தின்று விட்டு பீரைக் கீழே கொட்டினான். அமெரிக்கன்–இந்தியனுக்குப் பீரை விற்றான். பூச்சியைச் சைனாக்காரனுக்கு விற்றான். புதிதாக வேறு ஒரு மக் பீர் வாங்கிக் கொண்டான்.

– கலா



## கணக்குப் பார்ட்டி!

பிரபல அமெரிக்கக் கோடீஸ்வரர் ராக்பெல்லர் துல்லியமாகக் கணக்குப் பார்க்கும் ஆசாமி என்பது எத்தனை பேருக்குத் தெரியும்? அமெரிக்காவின் முக்கால்வாசி எண்ணெய் நிறுவனத்துக்கு அவர் அதிபதியாக இருந்தும், தன்னிடமிருக்கும் ஸ்டாக்குகளைக் கணக்குப் பிரகாரம் பரிசோதிப்பாராம். எண்ணெய்ப் பீப்பாய்களில் ஓட்டைகளை அடைக்கப் பயன்படும் மூடிகள் கூட கணக்குப்படி சரியாய் இருக்கின்றனவா என்று பார்ப்பாராம்!

– 'நம்ப முடியாத உண்மைகள்' நூலில் இருந்து ஜி.கே.எஸ். மூர்த்தி



## தவிடு அபிஷேகம்!

கேரளத்தில் கொடுங்கல்லூர் பகவதி அம்மன் கோவிலில் உள்ள சண்டிகேஸ்வரிக்குத் 'தவிடு' அபிஷேகம் செய்கிறார்கள். காசநோய் உள்ளவர்கள் பிரார்த்தித்து நோய் தீர்ந்ததும் இவ்விடம் வந்து இந்த அபிஷேகத்தைச் செயல்படுத்துகிறார்கள்.

– என்.எஸ். மணிமாறன்



இந்தியாவின் தேசிய விளையாட்டு 'ஹாக்கி.' இதைப் போல் மற்ற நாடுகளுக்கும் 'அங்கீகரிக்கப்பட்ட தேசிய விளையாட்டுகள் உள்ளன. அவற்றில் சில இதோ உங்கள் கவனத்திற்கு:

கிரிக்கெட் - இங்கிலாந்து
ஜூடோ - ஜப்பான்
பேஸ்பால் - அமெரிக்கா
ரக்பி, கால்பந்து - ஸ்காட்லாந்து
எருதுச் சண்டை - ஸ்பெயின்

- 'அரிய அறிவுத் துளிகள்' நூலிலிருந்து:
இரா. கண்ணம்மாள்



## மலரும் மணியும்!

பண்டைக்கால மக்கள், மலர்கள் மலரும் நேரங்களைப் பார்த்து நேரத்தை அறிந்து கொண்டனர். அந்தி மந்தாரை போன்ற மலர்கள் மலர்ந்தால் மாலை மணி 6 ஆகும். மல்லிகை மலர்ந்தால் மாலை 7 மணி. பாரிஜாதம் மலர்ந்தால் இரவு 8 மணி. மாதவி புஷ்பம் மலர்ந்தால் 9 மணி. நன்றாக இருட்டு ஆட்சி செய்யும் போது இரவு 12 மணிக்கு மலரும் புஷ்பம் இருவாட்சி ஆகும். காலை 6 மணிக்குச் சூரியன் உதிக்க அத்துடன் மலர்வது தாமரை.

தகவல்: முத்து. இரத்தினம்

## பேப்பர் டவல் பிறந்த கதை!

ஒருமுறை டாய்லெட் பேப்பர் தயாரிக்கும் தொழிற்சாலையில் இயந்திரக் கோளாறு ஏற்பட்டு, டாய்லெட் பேப்பர்களைக் கெட்டியாகவும், அகலமாகவும் வெட்டிவிட்டது. அவ்வாறு வெட்டியதைக் குப்பையில் கொட்ட மனமின்றி நிர்வாகத்தினர் விளம்பரக் கம்பெனிகளைக் கூப்பிட்டு ஐடியா கேட்க, அதை பேப்பர் டவலாக மாற்றிவிடலாம் என்று அவர்கள் சொல்ல, கை துடைக்கும் பேப்பர் டவல் உருவானது. இப்படி உருவான பேப்பர் டவலே தற்பொழுது அமெரிக்காவுக்கு நூறு கோடி டாலருக்குமேல் ஈட்டித் தருகிறது என்றால் அந்தத் தொழிலின் வளர்ச்சியை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்.

– இரா. கணேசன்



தேன் கூடு

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2001

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

**முதல் பரிசு – ரூ. 5000**
**இரண்டாம் பரிசு – ரூ. 3000**
**மூன்றாம் பரிசு – ரூ. 2000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!



***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2001'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 5 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

— ஆசிரியர்



உண்மையில் வள்ளி டிரைவிங் ஸ்கூலில் டிரைவிங் பயிற்சி பெற வருகிறவர்களைப் பார்த்தால், இப்படித்தான் எண்ணத் தோன்றுகிறது. ஏனெனில் அனைவரும் கையில் டிபன் கேரியருடன் வாட்டர் பாட்டிலுடன் தங்கள் குடும்பத்தினருடன் ஏதோ பிக்னிக் ஸ்பாட்டிற்கு செல்வதைப் போல திருமதி. வள்ளியுடனும், அவரது கணவர் திரு. வள்ளியப்பன் அவர்களுடன் மிக இயல்பாகப் பழகி கேஷுவலாக டிரைவிங் வெகு விரைவில் கற்றுக் கொள்கிறார்கள். இதற்கு உறுதுணையாக திருமதி. நளினி பாக்யா அவர்களும் உடன் இருக்கிறார்கள்.

## டிரைவிங் ஸ்கூலா? பிக்னிக் ஸ்பாட்டா?



டீன்ஏஜ் முதல் 50 வயது வரை. சான்ட்ரோ, மாருதி, ஸ்கூட்டி, கைனடிக் ஹோண்டா இவைகள் பெண்களுக்கு மட்டுமல்ல. ஆண்களுக்கும் பயிற்றுவிக்கப்படுகிறது.

நீங்கள் விரைவாக எளிதாகப் பாதுகாப்பாக வாகனங்களை இயக்க கற்றுக் கொடுப்பது எப்படி?

முதல் நாள் அவர்களுக்கு மனப்பயிற்சி கொடுப்போம். அதன் மூலம் தன்னம்பிக்கை, உடல் வலு, புரிந்து கொள்ளும் தன்மை அதிகப்படும். பிறகு அவர்கள் இயக்க விரும்பும் வாகனம் பற்றி விளக்குகிறோம். அடுத்ததுதான் அவர்களுக்கு வாகனம் இயக்கக் கற்றுத் தருகிறோம். அவர்களின் மனதைப் பக்குவப்படுத்தி விடுவதால் எளிதாகப் புரிந்து சில நாட்களிலேயே கற்றுக் கொள்கிறார்கள் என்கிறார்கள் வள்ளியும் அவரது கணவன் வள்ளியப்பனும்.

கணவன் – மனைவி இருவரும் ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? கார் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? நீங்கள் உடனே தயங்காமல் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

## வள்ளி டிரைவிங் ஸ்கூல்

(அரசு அங்கீகாரம் பெற்றது)



புது எண். 13 (ப.எண்.7)
தண்டபாணி தெரு,
தி. நகர், சென்னை - 17.
(பனகல் பார்க் அருகில்,வெங்கட்நாராயணா ரோடு எதிரில்; வேளாங்கன்னி பள்ளி அருகில்)
ஃபோன் : Off : 436 4815
Res : 484 2466
பேஜர் : 9628445790.
செல் : 9840043648

அலுவலக நேரம் :
காலை 7.00 மணி முதல்
மாலை 7.00 மணி வரை

குறிப்பு : பெண்களுக்குக் கற்றுத்தர பெண் பயிற்சியாளர்கள் உண்டு.

# அழைக்கிறது அமெரிக்கா!

## கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்

குவிஸ் கூப்பன் – 26

### அடேடே..... இவ்ளோ தானா?

அப்பாடா... ஒரு வழியாய் இந்த வாரத்துடன் போட்டி முடிவடைகிறது. இதுவரை நீங்கள் பூர்த்தி செய்து வைத்திருந்த கூப்பன்களை இந்தக் கூப்பனோடு சேர்த்து வரும் 15.5.2001ம் தேதிக்குள் எங்களுக்கு அனுப்புங்கள். இதில் மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியான பதில் எழுதும் ஒரு நபருக்கு

**அமெரிக்கப் பயணம் பரிசு!**

**ஐரோப்பா பயணம்**

**இரண்டாவது பரிசு!**

**மலேஷியா–சிங்கப்பூர் பயணம்**

**மூன்றாவது பரிசு!**

இந்த மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் சரியான பதிலை எழுதியிருந்தால் இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை! பயணப் பரிசு பெறாதவர்களுக்கு அமரர் கல்கியின் நூல்கள் உண்டு.

ஆசிரியர் தீர்ப்புதான் இறுதி!

பரிசு பெறும் நபர்களுக்கு முன்கூட்டியே வாழ்த்துகள்.

அதோடு சில நிபந்தனைகளும் கூட:

இப்போட்டியில் பங்கேற்போர் சர்வதேச பாஸ்போர்ட் வைத் துள்ள, பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட ஓர் இந்தியராக இருக்க வேண்டும்.

பாஸ்போர்ட் இல்லையெனில் விண்ணப்பித்து வாங்கி வைத்துக் கொள்ளுங்கள்.

பயணத்துக்கான தேதியும் டிக்கெட்டுகளும் போட்டியை ஸ்பான்ஸர் செய்யும் நிறுவனங்களின் முடிவுக்கு ஏற்ப அமையும். வெற்றி பெற்றவரின் சௌகரியமும் கருத்தில் கொள்ளப்படும். எனினும் எங்கள் முடிவே இறுதியானது.

எக்காரணம் கொண்டும் டிக்கெட்டை வேறு விமானப் பயண நிறுவனத்துக்கு மாற்றவோ, காசாக்கவோ அனுமதி இல்லை.

வெற்றி பெற்றவரிடத்தில் வேறு நபர் பயணம் செய்ய அனுமதி இல்லை. வெற்றி பெற்றவர், நாங்கள் குறிப்பிடும் காலக்கெடுவுக்குள் பயணத்தை மேற்கொள்ள இயலாது போனால்

..





## முக்கிய குறிப்பு:

குவிஸ் போட்டி – 1 கூப்பனில் புகழ்பெற்று வரும் கர்நாடக இசையுலக சகோதரிகளுள் ஒருவர் ஹரிப்ரியா; மற்றவர் யார்...? என்ற கேள்வி இடம் பெற்றுள்ளது. இந்தக் கேள்விக்கு ஒன்றுக்கு மேற்பட்ட விடைகள் இருப்பதால் இக்கேள்வி மட்டும் போட்டியிலிருந்து நீக்கப்படுகிறது. வாசகர்கள் இதற்கான பதிலை எழுதியிருந்தாலும் பரவாயில்லை; போட்டியில் அந்த பதில் மட்டும் பரிசீலனைக்கு உட்படாது.

– ஆர்.

பரிசை இழந்தவராகிறார்.

பயணத்துக்குரிய வரிகளை (விமான நிலைய வரி, அவ்வப்போது எழக்கூடிய சர்விஸ் டாக்ஸ் போன்றவை) பரிசு பெறுபவர்தான் செலுத்த வேண்டும்.

விசா பெறுவதற்கானக் கட்டணமும் பரிசு பெறும் நபர்களே செலுத்த வேண்டும்.

எக்காரணம் கொண்டாவது பாஸ்போர்ட் அல்லது விசா பெற இயலாது போனாலோ, இமிக்ரேஷன், கஸ்டம்ஸ் முதலான சோதனைகளின் விளைவாகப் பயணம் தடைப்பட்டாலோ கல்கியோ அல்லது ஸ்பான்ஸர் நிறுவனங்களோ பொறுப்பல்ல.

பரிசுக்குரியவர், எகானமி பிரிவில்தான் பயணம் செய்யலாம். டிக்கெட்டை மாற்றிக் கொள்ள முடியாது.

பரிசுத் திட்டத்தில் நிகழக்கூடிய மாற்றங்களை எதிர்த்து சட்டரீதியான நடவடிக்கைகள் எடுப்பது செல்லுபடியாகாது.

அயல்நாட்டில் சுற்றுலா ஏற்பாடுகளும் தங்கும் வசதியும் கல்கி–ஸ்பான்ஸர் நிறுவனங்களின் பொறுப்பு. எனினும் நாங்கள் செய்கிற ஏற்பாடுகளுக்கு உட்பட்டு ஒத்துழைக்க வேண்டியது பரிசுபெறுபவரின் பொறுப்பு. எந்த ஒரு வசதியையோ பயண ஏற்பாடையோ ரத்து செய்து காசாக்கிக் கொள்ள உரிமை தரப்பட மாட்டாது.

*நிபந்தனைகளைக் கண்டு மிரண்டு கூப்பன்களை அனுப்பாம இருந்துடாதீங்க. உங்கள் பயண ஏற்பாடுகளைச் செய்துகொள்ள கல்கி இயன்ற அளவு துணை நிற்கும்.*

*வெற்றி பெற்ற மூன்று நபர்களின் முத்தான பயண அனுபவங்கள் கல்கியில் வெளியாகும்!*

## குவிஸ் கூப்பன் – 26

1) 'ஆயிரம் பொற்காசு' என்றவுடன் நினைவுக்கு வரும் நாகேஷ் ஏற்ற பாத்திரத்தின் பெயர் என்ன?

2) செஸ் விளையாட்டில் பெண் கிராண்ட்மாஸ்டர் என்ற பட்டத்தைப் பெற்ற முதல் இந்தியர் யார்?

3) அமெரிக்க நீதிமன்றத்திலேயே மிக அதிக நேரடி நஷ்டஈடான 33.3 கோடி டாலரை வென்ற பெண்மணியின் பெயர் என்ன? (அவரது கதைதான் அவரது பெயரிலேயே திரைப்படமாகி ஜூலியா ராபர்ட்ஸுக்கு ஆஸ்கார் விருது வாங்கிக் கொடுத்தது)

4) பாட்மின்டன் விளையாட்டில் 'ஆல் இங்கிலாந்து' கோப்பையைச் சமீபத்தில் வென்ற இந்தியர் யார்?

5) 1526ல் யாரை வென்று இந்தியாவில் முகலாயப் பேரரசை பாபர் நிறுவினார்?

6) அமிதாப் நடத்தும் குரோர்பதி நிகழ்ச்சியில் முதலில் கோடீஸ்வரனானவரின் பெயர் என்ன?

### விடைகள்:

1) ..........

2) ..........

3) ..........

4) ..........

5) ..........

6) ..........

# நடக்குமென்பார் நடக்கும்!



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

நீங்க உண்டு உங்க பக்தி உண்டுன்னு ஆன்மிகக் காரியத்திலே ஈடுபட்டுக்கிட்டு சிவனேன்னு இருப்பீங்க. பலன் இல்லாமலா? – கோக் விளம்பரத்திலே வர்ற விஜய் மாதிரி உற்சாகம் பொங்கும். லீவு நாளும் அதுவுமா குஷியா இருக்கிற வாண்டுங்க வேறே உங்களையும் குஷிப்படுத்துவாங்க. டப்புக்குப் பிரச்னை லேதண்டி. ஆனா உடம்பைக் கொஞ்சம் ஜரூரா பார்த்துக்கங்க – மக்கர் பண்ணலாம். எதையும் எடுத்தோம், கவிழ்த்தோம்னு உணர்ச்சி வசப்பட்டுச் செய்யாம, நிதானமா யோசிச்சு செய்யுங்க, அம்புடுதேன், மத்தபடி பிரச்னை இல்லை!



**ரிஷபம்** : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

இது 'லேடீஸ் ஸ்பெஷல்' வாரம். அவங்களுக்குப் படு ஷோக்கான பலன்கள் ஏற்படப் போகுது. டஸர் சில்க், அபூர்வா சில்க்ன்னு ஒரு பக்கமும் ஜேடு, கார்னட்ன்னு இன்னொரு பக்கமும் ஜமாய்க்கப் போறாங்க. ஆண்களுக்குக் கொஞ்சம் பிரச்னையான வாரம்தாங்க. வீண் செலவு, அலைச்சல், மனத்தில் சங்கடம், ஏன், சின்ன விபத்து கூட ஏற்படலாம் - ஜாக்கிரதை. எல்லார்கிட்டேயும் சுமூகமா பழகி அனாவசியமான விஷயங்களில் மூக்கை நுழைக்காமல் இருந்தீங்கன்னா ஓரளவு சமாளிக்கலாம்னு வைச்சுக்கங்களேன்!



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்க திறமையும் சாமர்த்தியமும் எல்லார் கண்ணையும் உறுத்தப் போகுது. திருஷ்டி சுற்றிப் போட்டுக்கங்க. வி.ஐ.பி.ங்க, 'டப்பு' பார்ட்டிங்க, தோஸ்துங்க, சொந்தக்காரங்க எல்லாரும் ஓடி ஓடி வந்து உதவுவாங்க. உங்க மன உறுதியைப் பார்த்து நீங்களே ஆச்சர்யப்பட்டுப் போவீங்க. ஆனா, கணவன்–மனைவிக்குள்ளே டிஷ்யூம் – டிஷ்யூம் வந்துக்கிட்டே இருக்கும், விட்டுக் கொடுத்துப் போறதைத் தவிர வேறு வழியே இல்லை. எடுத்த காரியத்தை முடிக்க முடியாம குறுக்கீடுகள் வந்துக்கிட்டே இருக்கும். தீய எண்ணங்களுக்கு மனசுக்குள்ளே 'நோ–என்ட்ரி' போர்டு மாட்டி எல்லார்கிட்டேயும் அன்பா நிதானமா நடந்துக்கங்க.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

வெற்றி உங்களைத் துரத்தி துரத்தி வரும். எதிரிகள் எல்லாம் எங்கே போவார்களோ தெரியாது. வேலையில்லாதவர்களுக்கு அப்பாயின்ட்மெண்ட் ஆர்டர் கூரியர்லே வந்துக்கிட்டே இருக்கு. உத்தியோகஸ்தர்களுக்கு இன்கிரிமெண்ட், பிரமோஷன் எல்லாம் எம்.டி. ரூமில் சாங்ஷன் ஆயிட்டே இருக்கு. உங்களுடைய திட்டங்களை உடனடியா நிறைவேத்துங்க, எல்லாரும் எழுந்து நின்னு வரவேற்பு கொடுப்பாங்க. குடும்பத்திலே மகிழ்ச்சிப் புயல்தான் போங்க. எதுக்கும் பணத்தை ரெடி பண்ணுங்க, சுப காரியம் ஒண்ணு நடக்கப் போகுது!



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உடல் ஆரோக்கியத்தைப் பொறுத்தவரை நோ ப்ராப்ளம். ஆனா மனசிலே குழப்பம், சஞ்சலம் இருந்துக்கிட்டே இருக்கும். ஆறுதல் தேடுறேன் பேர்வழின்னு கெட்ட பழக்க வழக்கங்களுக்கு இடம் தந்திடாதீங்க. வேகத்துக்குப் பதிலா விவேகத்தோடு காரியம் செய்யுறது முக்கியம். பெரியவங்க பேச்சைக் கேட்டு அதன்படி நடந்தீங்கன்னா தெனாலிகாவை விட பெரிய பிரச்னையைக் கூடச் சமாளிக்கலாம்!



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

'அட, இவ்வளவு சாமர்த்திய சாலியா?' அப்படீன்னு எல்லாரும் உங்களைப் பார்த்து புருவத்தை உயர்த்தப் போறாங்க. பணத்தைப் பொறுத்தவரை, தேர்தல் நேரத்து சாராயம் கணக்கா புழங்கும், கவலையில்லை. வேலைக்காக வெளிநாடு போக அப்ளை பண்ணியிருக்கீங்களா, விசா இதோ வந்துக்

**அக்னிசர்மா பக்கம்**

கிட்டே இருக்கு. அம்மாவாலேயோ அம்மா வழி சொந்தக்காரங்களாலேயோ பிரச்னை ஏற்படலாம். விட்டுத் தள்ளுங்க. அடிக்கிற கைதானே அணைக்கும்! மனசிலே ஒண்ணு வைச்சு வெளியிலே ஒண்ணு பேசாம வெளிப்படையா பேசுங்க. பிரச்னையை எல்லாம் 'ப்பூ!'ன்னு ஊதித் தள்ளிடலாம்!



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

உங்க மனசில் எங்கிருந்துதான் அவ்வளவு துணிவும் தன்னம்பிக்கையும் வருமோ, எதிரிகளை எல்லாம் ஷோழாவரம் ரேஸ் டிராக்கில் ஓவர்டேக் பண்ணுகிற மாதிரி ஓவர்டேக் பண்ணிக்கிட்டே போய்டு வீங்க. தாத்தா காலத்து கேஸ் எல்லாம் உங்களுக்குச் சாதகமா தீர்ப்பாகப் போகுது. நிலம், வீடு, வாகனம் ஏதாவது ஒரு பெரீ...ய்ய பர்சேஸ் உண்டு! மூப்பனார் மாதிரி கூட்டாளிகளை நம்பி மோசம் போக சான்ஸ் இருக்கு. உஷார்! பெரியவங்களையும் நல்லவங்களையும் அவமதிக்காம அவங்க உங்களை மெச்சும்படி நடந்துக்கிட்டீங்கன்னா, நன்மை உங்களுக்குத் தான்!



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்க திறமையும் புத்திசாலித்தனமும் 70 எம்.எம் ஸ்கிரீனில் தெரியப் போகுது. எடுத்த காரியத்திலே எல்லாம் வெற்றியைத் தவிர எதையுமே பார்க்க முடியாது. மனசிலே உற்சாகத்துக்கு கேட்கவா வேணும்? தனலட்சுமி ஒரு வாரம் உங்க வீட்டிலேதான் காம்ப், பணம் தாராளமாய்ப் புரளும். ஆனால் காஸ் அடுப்பு, கத்தி, கத்திரிகோல் இதை எல்லாம் கொஞ்சம் ஜாக்கிரதையா கையாளுங்க. சின்னச் சின்னப் பிரச்னைகள் வரும், ஆனா உங்க மதிப்பும் அந்தஸ்தும் பாதிக்காத வகையிலே சமாளிச்சிடுவீங்க!



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

குட்டி குட்டியா பிரச்னைகள் முளைச்ச வண்ணம் இருக்கும், ஆனால் நண்பர்களோட உதவியாலே ஈஸியா சமாளிச்சிடுவீங்க. விருந்து, கெஸ்ட், டூர்னு ஒரே 'ஹாலிடே மூட்'டில் இருப்பீங்க. அதிர்ஷ்டம் உங்க வீட்டு காலிங்பெல்லை அடிச்சிக்கிட்டே இருக்கும். நீங்க ஆசைப்பட்ட பதவி, பட்டம் எல்லாம் கிடைக்கிற நேரம் வந்தாச்சு. ஆனா உடம்பு விஷயத்திலேயும் பணம் விஷயத்திலேயும் கொஞ்சம் உஷாரா இருங்க.



**மிதுன ராசிக்காரரான நெப்போலியனுக்கு 'டப்பு' பார்ட்டிங்க ஓடி வந்து உதவுவாங்களாம்!**



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

உங்க முக வசீகரத்தாலும் பேச்சாற்றலாலும் தூள் கிளப்பப் போறீங்க. துணிமணி, நகை நட்டுனு வேறே குவியப் போகுது. பணம் – அதைப் பத்தி எல்லாம் நீங்க கவலைப்படவே வேண்டாம். ஒரு குட் நியூஸ் வருது, ட்ரீட் கொடுக்க ரெடி ஆகுங்க. ஆனால் கொஞ்சம் அலைச்சல் ஜாஸ்தியாகும். எதுக்கும் கைப்பொருள்களைப் பத்திரமா பார்த்துக்கங்க, கண் கெட்ட பின் சூரிய நமஸ்காரம் கதை ஆயிடப் போகுது!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

சினிமா ஹீரோ மாதிரி எதிரிகளை எல்லாம் ஒரே ஆளா ஊதித்தள்ளிட்டு வெற்றி நடை போடப் போறீங்க. புகழ், பதவி எல்லாம் போதும் போதும்ங்கற அளவுக்குக் கிடைக்கப் போகுது. வீடு, நிலம் வாங்க சான்ஸ் இருக்கு. அரசாங்கத்தை எதிர்பார்த்துக்கிட்டு இருந்த காரியமெல்லாம் கிடுகிடுன்னு முடிஞ்சிடும். ஆனா கொஞ்சம் அதிகமா உழைக்க வேண்டி வரும். அதுக்காக குறுக்கு வழியிலே போயிடாதீங்க. அதே மாதிரி, அகலக்கால் வைச்சிடாதீங்க, சறுக்கிடப் போகுது.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

எடுத்த காரியத்தைத் தலைகீழ் நின்னாவது முடிச்சிடுவீங்க. நயினாவால் ஒரு அனுகூலம் ஏற்படப் போகுது. பெண்களுக்குக் குறிப்பா, இது உற்சாகம், ஸ்பெண்டன் கணக்கா பீறிடும். கணவன், மனைவி இரண்டு பேரும் வள்ளுவன் – வாசுகியா வளைய வருவாங்க. வருமானத்துக்கு ஏத்த மாதிரி சொத்து சேர்ப்பீங்க. இரண்டு விஷயத்தில் கவனமா இருங்க. ஒண்ணு, தாயார் உடல்நலம், இரண்டு, பேச்சில் இனிமை. ○

**மே 2 முதல் 8 வரை**

## நீங்கள் கேட்டவை — தராசு

● இரா. பார்த்திபன், சேத்துப்பட்டு

*? சமீபத்தில் ரசித்த ஜோக்..?*

! எண்ணி பதினைந்து இடங்களில் போட்டியிடும் பண்ருட்டியாரின் மக்கள் நல உரிமைக் கழகம் தனது தேர்தல் அறிக்கையில், 'தமிழ்நாட்டிலுள்ள அத்தனை ஏழை குடும்பங்களுக்கும் மாதம் இருநூறு ரூபாய் வீதம் ஆதார வருமானம் அளிக்கப்படும்' என்று வாக்குறுதி தந்திருப்பதுதான்.

● சு. பிரபு, அரக்கோணம் - 5 ★

*? இதுவரை நட்பு நாடாக விளங்கிய பங்களாதேஷ்கூட தற்பொழுது இந்திய எல்லையில் உள்ள நம் வீரர்களைச் சுட்டுத் தள்ளுவது குறித்து...?*

! பங்களாதேஷ் அரசு, இது தங்கள் அனுமதியின்றி நடந்தது என்று கூறி வருந்துகிறது. அப்படியானால் 1. ஹஸினா அரசு பலவீனமாக உள்ளது; 2. ஹஸினாவின் அரசியல் எதிரிகள் ராணுவத்தில் ஊடுருவி அவருக்கு அவப்பெயர் தேடித்தரும் நடவடிக்கைகளில் இறங்கியுள்ளார்கள். இரண்டுமே நமக்கு ஆபத்து. இந்நிலையில் இந்தியாதான் உஷாராக இருக்க வேண்டும். உளவுத் துறை மேம்பட வேண்டும்.

● நகை. கி. மகாராஜன், கடமலைக் குண்டு

*? 'வாக்களிப்பதும் வாக்களிக்காமல் இருப்பதும் அவரவர் உரிமை' என்று இந்திய அரசமைப்புச் சட்டமே சொல்கிறதாமே?*

! கடமையை ஆற்றுவதும் ஆற்றாமல் இருப்பதும் அவரவர் உரிமைதான்.

● மல்லிகை மன்னன், மதுரை - 17

*? 'தமது மகனுக்கு மகுடம் சூட்டிப் பார்க்கத்தான் ம.தி.மு.க.வைக் கூட்டணியிலிருந்து கருணாநிதி கழற்றி விட்டிருக்கிறார்' என்று வைகோ கூறும் திடீர் குற்றச்சாட்டு நியாயம்தானா தலைவா...?*

! ஸ்டாலினுக்கு மகுடம் சூட்டுவதும் சூட்டாததும் தி.மு.க.வின் உட்கட்சி ஜனநாயக விவகாரம். இதில் ம.தி.மு.க. தலைவருக்கு என்ன பங்கு..? அபத்தமான குற்றச்சாட்டு.

● ஏ.பி. ராஜு, கல்பாக்கம்

*? ஜெயா டி.வி.யில் செய்திகள் ஒருதலைபட்சமாக இருக்கிறதே...?*

! செய்திகளை விடுங்கள்! அரசியல் நிகழ்ச்சிகளில் பேட்டி காண்பவர்கள், தாங்கள் பெற விரும்பும் பதிலை உள்ளடக்கி கேள்வியைக் கேட்பதும் பதில் சொல்பவர் அப்படியே ஒத்து ஊதுவதுமாக, சகிக்க முடியாத சிறுபிள்ளைத்தனம்.




# 'ஜெ'வை மக்கள் மன்னித்தால்

● கீதா, சென்னை - 4 ❑

*? ஏழைகளுக்கு இலவசமாக கேஸ் கனெக்ஷன் வழங்கப்படும் என்று அ.தி.மு.க. தனது தேர்தல் அறிக்கையில் கூறியுள்ளதே..? கட்டுப்படியாகுமா..?*

! ரொம்ப நாளைக்கு முன்னால் லக்ஷ்மி காந்தன் நாடகத்தில், "எவ்வளவுடா வாடகை பேசியிருக்கே?" என்று அவன் நண்பனைக் கேட்க, "ஐயாயிரம் ரூபாய்" என்பான் நண்பன். "ஐயோ ஐயாயிரமா!" என்று லக்ஷ்மிகாந்தன் திகைக்க, "நாம் என்ன கொடுக்கவா போறோம்!" என்பான் நண்பன். அப்படித்தான் 'ஜெ'யின் தேர்தல் அறிக்கை, வாக்குறுதிகள்.

● வே. ஆறுமுகம், கள்ளக்குறிச்சி

*? கருணாநிதியின் ஆட்சி மினரல் வாட்*

டர் என்றும் ஜெ. ஆட்சி சாக்கடை நீர் என்றும் ப. சிதம்பரம் வர்ணித்துள்ளது குறித்து..?

! தமிழனின் எதிர்காலம் கானல் நீர் ஆகிவிடாமலிருந்தால் சரி!

● ஷ்யாமளா சுவாமிநாதன், திருவனந்தபுரம்

? இந்தியாவிலேயே நான்காவது பெரிய பணக்காரர்களில் ஒருவராக முரசொலி மாறன் இருக்கிறார் என்று கணித்திருப்பது உண்மையானால், இனிமேல் நாட்டுப் பற்றாவது மக்கள் சேவையாவது! வி.ஆர். எஸ். கொடுத்துவிட்டு அரசியலிலிருந்து விலகுவது சரிதானே..?

! பணக்காரர்களுக்கு நாட்டுப்பற்று இருக்காது! இருக்கக்கூடாது என்று யார் சொன்னது? பணம் எப்படி சம்பாதிக்கப்பட்டது என்பதுதான் முக்கியம். தப்பு தண்டாவாகச் சம்பாதித்ததாக ஏதாவது தகவல் இருந்தால் சொல்லுங்கள்.

● எம். பாக்கியலட்சுமி, திருச்சி

? மைக்ரோ - மாக்ரோ பார்ப்பதுண்டா...?

! 'சரியுமில்லை, தப்புமில்லை' தொடரை யதேச்சையாகப் பார்க்க நேர்ந்தது. ஃபோர்டி பிளஸ்ஸில் இருக்கும் பேராசிரியை சித்ராவும் இசைக் கலைஞர் மால்குடி மாதவனும் (மோகன்ராம்) காதல் வயப்படுகிறார்கள். இதில் என்ன சுவாரஸ்யம் என்றால்

# போதுமா?

மேற்படி 'இளஞ்'ஜோடியின் மகனும் மகளும் ஏற்கெனவே காதலர்கள்! மேலோட்டமாகப் பார்த்தால் கதை முடிக்க தரக்குறைவானதாகத் தோன்றினாலும் ட்ரீட்மெண்டில் கொஞ்சமும் ஆபாசமில்லை. என்ஜாயபிள் காமெடி!

● பால. கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்

? ஜெயலலிதாவை மக்கள் மன்னித்துவிட்டால் போதுமா...?

! மக்கள் மன்னித்துவிட்டார்கள் என்று யார் சொன்னது? அதை மே 13ம் தேதி முடிவு செய்வோம்.

● நல்லகண்ணு, பாளையங்கோட்டை

? பாராளுமன்றத்தில் ரயில்வே பட்ஜெட் குரல் வாக்கெடுப்பு மூலம் நிறைவேற்றப்பட்டது குறித்து...?

! ஒழுங்காக விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளாமல் 'ரப்சர்' பண்ணிய எதிர்க்கட்சியின் பிடிவாதத்தால் நிகழ்ந்த விளைவு இது. நிதி நிலை அறிக்கையும் இந்தக் கேலிக்கூத்துக்கு உள்ளாகக் கூடாது என்று கண்டிப்பு காட்டி பிரதமர் - சோனியா விடையே சமரசம் செய்து வைத்துள்ள சபாநாயகருக்கு ஹாட்ஸ் ஆஃப்!

● ந. சத்தியநாராயணன், அயன்புரம்

? நகைகளை மீட்டு ஏழைகளுக்குக் கொடுப்பேன் என்று ஜெ. கூறுவது பற்றி..?

! அப்படி ஒரு வேலை நடக்குமானால் அது தமிழக ஏழைகளை ஏமாற்றி, கொள்ளையடித்துச் சம்பாதித்தது. திரும்ப அவர்களிடமே போய்ச் சேர்ந்த மாதிரிதான்.

● தேன்மொழி மன்னவன், கோனாபட்டு

? அரசு அலுவலகங்கள் எல்லாவற்றிலும் (டெஹல்கா உபயோகித்த) ரகசிய வீடியோ காமெரா இணைத்துவிட்டால், லஞ்ச பேரங்களை டீ.வியில் எல்லோரும் பார்த்துக் கொள்ளலாம் அல்லவா...?

! இதற்கு ஏராளமாய் வரிப்பணம் செலவாகும். லஞ்ச - பேரம் நடக்கும் இடம் மாறும். ரகசிய காமெரா எல்லா அரசு ஊழியர்களுக்கும் 'மிஸ்டர் க்ளீன்' சான்றிதழ் வழங்கும்.

❑ ரூ.50 பரிசு பெறுபவர் : கீதா, பிளாக் 9ஏ, சாந்தி அபார்ட்மெண்ட்ஸ், 46, ரோஸரி சர்ச் சாலை, சென்னை - 600 004.

★ ரூ.25 பரிசு பெறுபவர் : சு. பிரபு, 243, எஸ்.வி.ஆர். நகர், விண்டர்பேட்டை, அரக்கோணம் - 5

• இரட்டைப் பலவீனம்

• வீண்கோபம்!

• 'ஜோக்'குமுதி!

• சமரசநாயகர்!

• விலகல் விவகாரம்!



# ஜனணம் தாணம்

"நைனா, லொட் லொட்னு எம்மா அடிச் சாலும் கொயாவுல தண்ணி வர்றல."

"அத்தபோட்டு ஏன் தாக்கற? சட்டில இருந்தா ஆப்பலே வரப் போவுது."

"காவேரி, கிருஷ்ணானு பெரிசு பெரிசா உட்டாங்க. இப்ப கோயிந்தா கோயிந்தான்னு வுட்டுட்டாங்களே நைனா."

"மானம் பொழியல, பூமி சுரக்கல. தண்ணி கேக்கிறியா தண்ணி, எப்படி விட முடியும் தண்ணி?"

"அப்பால எதுக்கு நைனா வாட்டர் வரி? அத லேட்டா கட்டினா அபராதம் வேற. இவங்க இப்ப தண்ணி கொடுக் கலையே என்னா தண்டனை கொடுக்கலாம்?"

"தண்ணி இல்லாத நீச்சல் குளத்தில் டைவ் அடிச்சி நீச் சலடிக்கச் சொல்லலாமா?"

"நீ எப்பவும் டமாஸ் நைனா!"

"அதவுடு மவனே. அரசாங்கம் முன்னுக்கு முன்னால ப்ளான் போட்டா தண்ணி பிரச்ன வராது. நாளிக்கித் தண்ணித் தட்டுப்பாடு, இன்னிக்கு முழிச்சுகினா இன்னா பிரயோசனம்?

"அந்த காலத்து ராஜாங்க போல உசாரா முன்னமையே கொளம், ஏரி வெட்டி வைக்கச் சொல்றெ?..."

"ரைட்டு. ஆனா இவங்களுக்கு ஒருத்தரை ஒருத்தர் வெட்டவே நேரம் பத்தலையே. பாதி ஏரிங்கள மனை போட்டு வித்திட்டாங்க; இன்னா திட்டம் எப்படி போடுவாங்க?"

"நைனா அப்படிப் பேசாதே. நம்ம மந்திரிங்க இல்லாட்டியா திட்டம் போடுவாங்க."

"எப்படிச் சொல்றெ?"

"நைனா, இப்ப மந்திரிக்கு ஒரு மவன் பொறக்குதுன்னு வச்சுக்க. உடனே அதுக்கு ஒரு தலைவர் பேர் வைச்சு, நடக்கிற வயசு வந்ததும் கட்சில சேத்து, ஆறு வயசில இளைஞர் அணி தலைவராக்கி, அப்படியே குட்டித் தலைவராக்கி, எம்.எல். ஏவாக்கி, மந்திரி, முதல் மந்திரி பதவிக்குக் கொண்டு வந்திட றாங்கில்ல? இதெல்லாம் திட்டம் இல்லாம செய்ய முடியுமா?"

"நீ தேறிட்ட மவனே. வூட்டுக்குத் திட்டம் போடவே மந்திரிக்கு நேரம் சரியா போவுது. சரி... அதிகாரிங்க இருக்காங்கல்ல, நாட்டுக்கு நல்ல திட்டம் அவங்க போடலாமே?"

"அட போ நைனா! டகலக்கா கலக்கல் டேப்பை பாரு நீ. ஹீரோயின் கவர்ச்சி டான்ஸ் ஆடற மாதிரி அதிகாரிங்க தங்க வேலையை வுட்டுப்புட்டு லஞ்ச பார்ட்டியாயிடுச்சு..."

"எல்லாம் சேர்ந்து நமக்குத் தண்ணி காட்றாங்க..."

"இதுல தேர்தல் வேற நைனா."

"தண்ணியை லஞ்சமா கொடுத்து ஓட்டு வாங்கலாம் மவனே!"

"நைனா, ரேசன் கடை, பால்பூத் வளியா தண்ணி உனத்தினா என்ன?"

"காயற காச்சல்ல உனக்கும் கொயம் பிடுச்சு."

"அப்ப தண்ணிக்கு என்னா வயி நைனா? கடல்னு சொல்லாத!"

"நீ சொன்ன மாதிரி கோயிந்தா கோயிந்தா! சாமியா பாத்து இப்பிடி ஒரு சனங்க, இப்படி ஒரு அரசாங்கம் படைச்சிட்டேன்னு வெக்கப்பட்டு, அவமானப் பட்டு அதுல மானம் பொத்துகினு மழை கொட்டினா தண்ணி உண்டு மவனே!"

**மாதுரி**



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை - 63. Tel : 237 6129.

E-mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

| | | |
|---|---|---|
| ● காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| ● மதிய உணவு | ரூ. | 2,000/- |
| ● இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| ● பிஸ்கட், மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 750/- |
| ● ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ● ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ. | 3,000/- |
| ● ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 9,000/- |
| ● குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |



## -: விவேகானந்தர் தேசிய இயக்கம் :-

ஸ்ரீ சாரதா சக்தி பீடத்தின் சார்பில் "விவேகானந்தர் தேசிய இயக்கம்" என்ற அமைப்பு கிராமபுறத்தில் உள்ள ஏழை மாணவ, மாணவியர்களின் கல்வி, மத நல்லிணக்கம், மனித நேயம், சமய சமரசம் மற்றும் ஆன்மீக முன்னேற்றத்திற்காக ஏற்படுத்தப்பட்டுள்ளது.

இதன்மூலம் 350 கிராமங்களில் சுமார் 12,250 ஏழை மாணவ, மாணவியர்களுக்கு மாலை நேரத்தில் இலவச சிறப்புக் கல்வியும், (டியுஷன்) ஆன்மீக பயிற்சியும் அளிக்கப்படுகிறது. இந்த மேலான தொண்டுகள் சிறப்பாக நடைபெற தங்களின் அன்பையும், உதவியையும் நாடுகிறோம்.

| | | |
|---|---|---|
| ஒரு மையத்தின் (கிராமத்தின்) ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு (பௌர்ணமி அன்று சிறப்பு விருந்து உட்பட) | ரூ. | 1,500/– |
| ஒரு மையத்தின் ஓராண்டிற்கு பராமரிப்புத் தொகை (12 மாதம் பௌர்ணமி சிறப்பு விருந்து உட்பட) | ரூ. | 18,000/– |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்



**மோ**னிஷா. ஞாபகமிருக்கிறதா? 'இந்திரா' படத்தில் கையில் விளக்கேந்தி 'நிலா காய்கிறது' பாடலில் நடித்த அதே சிறுமிதான். இப்போது 'லவ் சேனல்' படத்தின் கதாநாயகி! முகத்தில் இன்னும் குழந்தைத்தனம் மிச்சமிருக்கிற

# "கனவுல டாம் & ஜெர்ரி தான் வருது!"

மோனிஷாவைச் சந்தித்தோம்:

**'ஹீ**ரோயின் ஆயிட்டீங்க?' என்றதும் அடுத்த வினாடிப் பதில் வருகிறது. "இரண்டரை வயசுலேர்ந்து குழந்தை நட்சத்திரமா நடிக்கிறேன். தமிழ், தெலுங்கு, ஹிந்தி, மலையாளம், கன்னடம்னு அரைசதம் அடிச்சுட்டேன். இதுக்குப் பிறகும் நான் குழந்தை நட்சத்திரமா நடிச்சா, எல்லோரும் சிரிப்பாங்க... அதனாலதான் ஹீரோயின் அவதாரம்!" சொல்லிவிட்டு வெட்கம் ப்ளஸ் அடக்கம் கலந்து சிரிக்கிறார்.

"அடடே இப்போதான் உரைக்குது...! இவ்வளவு நேரமா நீங்க தமிழ்ல பேசிக்கிட்டு இருக்கீங்களே... நம்பவே முடியலே..." ஆச்சர்யமாய்க் கேட்டதும் "என்ன இப்படி கேட்டுப் போட்டீங்க... நானு அக்மார்க் கோயமுத்தூரு பொண்ணுங்கோ... என்ர அய்யன் மாருதிராஜ் ஒரு தமிழ் டப்பிங் கலைஞருங்கோ... என்ர அம்மா இரேசி ஒரு எம்.பி.பி.எஸ். டாக்டருங்கோ... வேணும்ன்னா ரேஷன் கார்டு காட்டட்டுமுங்களா?"

"அடியாத்தி... நீ அசல் தமிழ்ப் பொண்ணுதாம்மா... தயவு செஞ்சு சாதாரணத் தமிழ்லயே



பேசுதாயி" என்று கெஞ்சியதும் கண்ணாடி வளையல் சிரிப்பொலி.

சுஹாசினி மணிரத்தினம் இயக்கிய 'இந்திரா'வுக்குப் பிறகு ஏன் பெரிய இடைவெளி?"

"அதுக்குப் பிறகுதான் 'கருவேலம் பூக்கள்' படத்துல நடிச்சேன். படம் தியேட்டருக்கு வரலே. எத்தனை அருமையான படம். அந்தப் படத்துலே நடிச்சது.... எனக்குக் கிடைச்ச பெரிய கிஃப்ட்ன்னுதான் சொல்லணும்..."

"இந்த வயதிலேயே ஹீரோயினா நடிக்க வந்துட்டீங்க... கிளாமராக நடிச்சு, மத்த நடிகைகளோட உங்களால் போட்டி போட்டுத்தாக்குப் பிடிக்க முடியுமா?"

"நான் யாரையும் போட்டியா நினைக்கலை... அறுபது சதவீதம் ஃபேமிலி ரோல்தான் செய்யலாம்னு இருக்கேன். ஏன்னா, குடும்பம், அப்பா, அம்மா, தாத்தா, பாட்டி, குழந்தை கன்னு இருக்கிறது எனக்கு ரொம்ப பிடிக்கும். குடும்ப ரோல்களில் நடிப்புத் திறமைக்கும் வாய்ப்பு அதிகம்... நான் இப்படி விரும்புறதுக்குக் காரணம்... நான் ஒரே பெண்ணாக வளர்ந்துட்டேன்."

"இப்போ என்ன படிக்கிறீங்க மோனிஷா?"

"சின்ன வயதிலேயே பிசியான குழந்தை நட்சத்திரமாக ஆகிட்டதால, மாசத்துக்கு ஒரு நாள்தான் ஸ்கூலுக்கே போவேன். அப்புறம் இடையில் ஆறு, ஏழு படிக்கும்போது மட்டும் நேரம் கிடைச்சது... அப்போல்லாம் நான்தான் ஃபஸ்ட் ரேங். இப்போது பிரைவேட்டா எட்டாம் வகுப்பு எழுதப் போறேன்."

"நீங்க சின்னப் பொண்ணா இருக்கீங்க... பெரிய நடிகர்களோடு ஜோடி சேர்ந்து நடிக்கும்போது அப்பா, மகள் மாதிரி தெரியுமே..."

"அது மாதிரி தப்பெல்லாம் நான் செய்ய மாட்டேன்.... பொருத்தமாக இருந்தால்தானே அவங்களும் நடிக்க கூப்பிடுவாங்க... அது தான் விஜய், அஜித், பிரசாந்த்னு ஒரு டஜன் இளம் ஹீரோக்கள் இருக்காங்களே?"

ரொம்ப தெளிவாகவே இருக்கீங்க... "நடிப்பை யார்கிட்டே கத்துக் கிட்டீங்க..."

"இதுவரைக்கும் ஐம்பதுக்கும் அதிகமான டைரக்டர்கள்கிட்டே கத்துக்கிட்டிருக்கேன்... இன்னும் கத்துக்கிட்டே இருக்கேன். சின்ன வயசுலேயே நடிக்க வந்துட்டதாலே, அழறது, சிரிக்கிறது இதெல்லாம் எனக்குக் கஷ்டமா தெரியலே..."

"பொழுதுபோக்குன்னு ஏதாவது கடைபிடிக்கிறீங்களா...?"

"என்ன இப்படிக் கேட்டுட்டீங்க... நேரம் கிடைக்கிறபோதெல்லாம் கார்டூன் நெட் ஒர்க் பார்க்கிறதுதான் என்னோட வேலை. அதுலே வர்ற டாம் அண்ட் ஜெர்ரி ஷோ எனக்கு ரொம்ப பேவரைட். டாம் அண்ட் ஜெர்ரி எனக்குப் பெஸ்ட் ஃப்ரெண்ட்ஸ்ன்னு சொல்லலாம். இதுக்காகவே... யு.எஸ். போன என் ப்ரெண்டுகிட்டே டாம் அண்ட் ஜெர்ரி காமிக்ஸ் வாங்கிட்டு வரச் சொன்னேன்... அதை தலையணைக்குக் கீழே வெச்சுகிட்டு தான் தூங்குவேன்... கனவில் வர்ற டாம் அண்ட் ஜெர்ரி கூட்டணியோட, நானும் ஒரு கேரக்டராக மாறி லூட்டி அடிப்பேன். இதனாலே என் கூட படுத்திருக்கிற அம்மாவுக்குத் தினசரி உதைகிடைக்கும்ன்னா பார்த்துக்கோங்களேன்."

"அதுசரி... ஏதோ இங்கிலீஷ் படத்துலே நடிச்சீங்களாமே...?"

"ஆமா... தி பிமரயர் இறுதி' அப்படின்னு படத்தோட பேரு... இந்தியாவிலே நடக்குற கதை... இப்போ நம்ம ரேவதி மேடம்தான் இங்கிலீஷ் படம் எடுத்துட்டாங்களே... அதுலே வாய்ப்பு கிடைச்சிருந்தா ரொம்ப பெருமையா இருந்திருக்கும்."

"ஓகே... ஓகே... 'லவ் சேனல்' பத்தி சொல்லுங்களேன்?"

"மும்பைலேர்ந்து ஹீரோயின் செலக்ட் பண்ற காலத்துலே எனக்கு வாய்ப்பு கொடுத்திருக்கும் இயக்குனர் குமரேஷன்- தயாரிப்பாளர்கள் குருமூர்த்தி, சபரிகிரி இவங்களுக்கு நான் ரொம்ப கடமைப்பட்டிருக்கேன். இனிமே என்னைக் காப்பாத்த வேண்டியது ரசிகர்கள்தான்... அவங்க என்னைக் கட்டாயம் எங்கரேஜ் பண்ணுவாங்க... நம்பிக்கை இருக்கு..."

— விஷ்வல்தாசன்

✉ கலைஞரின் அட்டைப் படமும் சுமி சூப்பர் மார்க்கெட்டும், தலையங்கமும் வாசகர்களின் தேன்கூடும் எதை சுவைப்பது என திக்குமுக்காடச் செய்துவிட்டீர்கள்.
ஈரோடு-1, ரேவதிப்ரியன்.

✉ அகங்காரமும் ஆணவமும் சற்றும் குறையாத ஜெயலலிதாவுடன் த.மா.கா கூட்டணி வைத்துக் கொண்டதே விபத்துதான். தனித்தோ, மூன்றாவது அணி அமைத்தோ த.மா.கா களம் இறங்கியிருந்தால், தமிழகத் தேர்தல் வியூகமே மாறிப் போயிருக்கும். தமிழகத்தைப் பொறுத்த வரையில் ஏதாவதொரு கட்சியைப் பெருவாரியாகத் தேர்ந்தெடுப்பதே வழக்கமாக இருக்கிறது. இச்சூழ்நிலையில் தி.மு.க சரியாகத் திட்டமிட்டு, கடுமையாக உழைத்தாலன்றி ஜெயிப்பது கடினம் தான்.
அய்யம்பேட்டை. ஜி. ராமதாஸ்.

கல்கி
கடைசித் தேர்தல்!

✉ ஒரு இல்லத்தரசியிடம் கை தேர்ந்த நிர்வாகிக்குரிய அத்தனை இலட்சணங்களும் பொருந்தியுள்ளன என்பது 'மனைவியிடம் பயிலுங்கள்' கட்டுரையிலிருந்து புரிந்தது.
திருப்பரங்குன்றம், டி.கே. சுப்ரமணியம்.

✉ தாயின் நினைவால் மன உளைச்சலடைந்த ஒரு மகனின் உள்ளக் குமுறலை உணர்த்திய 'பெருமழை' சிறுகதை வெகு அருமை.
போடிநாயக்கனூர், எம். பாலசுப்ரமணியன்.

✉ "ஸாரி... ரியலி ஸாரி... நான் கவனிக்கவில்லை. நான் மன்னிப்புக் கோருகிறேன்" என்று கூறியதில் ஸ்டீவ்வாஹ்வின் பெருந்தன்மையும் அணித் தலைவருக்கே உரித்தான பொறுப்பான பண்பினையும் ஒரு சேர அறிந்து கொள்ள முடிந்தது.
சென்னை – 93, எஸ். சையது முகமது.

✉ கலைஞர் முதன்முதலாக எங்கள் குளித்தலையில் நின்றதும், வென்றதும் தொடர்ந்து இதுவரை வெற்றிநாயகனாகப் பவனி வருவதும் நிதர்சன உண்மை! ஆனால் கடைசித் தேர்தல் என்று போட்டதுதான் 'சிம்பாலிக்காக' இடிக்கிறது. வேறு வார்த்தைகளா இல்லை!
சென்னை – 33, குளித்தலை தி. செளந்தர்.

✉ 'பத்து பேர் ஜெயித்து எம்.எல்.ஏ.க்கள் ஆவதைவிட தன்மானம், சுய கௌரவம் முக்கியம்' என்று செஞ்சி ராமச்சந்திரன் சொல்கிறார். தமிழ்நாட்டின், ஏன் இந்தியாவின் நலனைவிட இவர்களுக்குத் தன்மானம், சுய கௌரவம்தான் பெரிதாகத் தெரிகிறது. சரியான சுயநலவாதிகள்!
திருச்சி-102, எம். பாக்கியலட்சுமி.

✉ மனைவியின் அன்றாட செயல்கள் சில மேலாண்மை உத்திகளாக – உத்திகளின் நிரூபணங்களாக விளக்கப்பட்டுள்ள விதம் அருமை. ஒரு பொருளை இருட்டிலிருந்து வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தது போல் அமைந்துள்ளது.
திருவிடைமருதூர், இரா. பவானந்தம்

சரியான சிறப்பலைகள்!



வ•ட்•ட•மே•ஜை

• பாப்பையா

# நில், கவனி, வெற்றிகொள்!

**வ**ருங்கால ப்ரூனே சுல்தான்களே வருக வருக! என்று அழைத்தாலும் அழைத்தோம்... திருவல்லிக்கேணி பாரதியார் இல்லம் நிகழ்ச்சி தொடங்கும் முன்பே நிறைந்து போய்விட்டது! எல்லாம் நாஸிக் நோட்டின் மகாத்மியம்தான், என்று எண்ணிக் கொண்டே மேடையேறினார்கள் அன்றைய பேச்சாளர்களான ஏவி.எம் சரவணனும் சாலமன் பாப்பையாவும்.



திருமதி கௌரி நடராஜன் 'திருவைப் பணிந்து' என்று பொருத்தமாக பாரதியார் பாடலை இறை வணக்கம் பாடி ஆரம்பித்து வைக்க, ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் முரளி வரவேற்க, தொடர்ந்த இரண்டு மணி நேர நிகழ்ச்சியில், நிரம்பிய அரங்கில் சிரிப்





• கௌரி நடராஜன்

பலைகள் எழுந்து எழுந்து அடங்கின; பணம் பற்றிய சிந்தனைச் சிதறல்கள் மின்னிப் பிரகாசித்தன; அதைச் சம்பாதித்துச் சிறந்துயர்வதற்கான வழிகாட்டல் வரவேற்புரை தொடங்கி நன்றியுரை முடிய ஒளிவீசியது.

## சிரிக்க...

**செ**ன்னை வாக்காளர்கள் அடியோடு மறந்து போயிருக்கும் கை சின்னத்தைக் காண்பித்தார் ஏவி.எம் சரவணன். "இதோ என் கை விரல்களுக்கிடையே இடுக்குகளைப் பாருங்கள்... இப்படிப்பட்ட இடுக்குகள் இருந்தால் கையில் பணம் நிற்காது என்பார்கள். அது நூற்றுக்கு நூறு உண்மை. அதனால்தான் யாராவது சென்டிமென்டாக பிஸினஸ் அட்வான்ஸ் என்று ஆயிரத்தொரு ரூபாய் தந்தால் கூட அதை உடனே என் மகனிடம் கொடுத்து விடுவேன். அவன் பணத்தை ஒழுங்காக நிர்வகிப்பான். அந்தக் குணம் அவனுக்கு அவன் தாத்தாவிடமிருந்துதான் வந்திருக்க வேண்டும்!... நான் செய்திருப்பதெல்லாம் ஒரே ஒரு காரியம்தான். என் அப்பா விட்டுச்

**கல்கி - ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் நிகழ்ச்சி**

# 6 லட்சம் சம்பாதிக்க 55 லட்சம் செலவா!

சென்ற சொத்தை அப்படியே அழியாமல் காப்பாற்றியிருக்கிறேன்."

"கோன் மூட்டி கோன் மூட்டியே பிரபலமாகிவிட்ட பாப்பையா" என்று அறிமுக உரையில் நிகழ்ச்சித் தொகுப்பாளர் கிருஷ்ணா சிதம்பரம் குறிப்பிட்டபோது கைதட்டல் காதைப் பிளந்தது!

"கடவுளுக்கு சஹஸ்ரநாமம். காசுக்கு ஏகப்பட்ட நாமம்! துட்டு, டப்பு, பணம், கரன்ஸி..." என்று பட்டிமன்றக் குரலில் ஆரம்பித்த பாப்பையா கட்டிக்காட்டினார்: "கோவில்களிலே கூட கடவுளைப் பாருங்க. உண்டியலைத்தான் முன்னாடி வைச்சுக்கிட்டு உட்கார்ந்திருக்கார். 'முதல்ல அதைக் கவனி; அப்புறம் என்னைக் கவனி'ன்றார். பெரிய கோவில்னா பெரிய உண்டியல்; மரத்தடி கோவில்னா உண்டியலும் மெலிஞ்சிருக்கும்!...."

கல்கி தேன் கூடு பகுதிக்குக் கலா என்ற வாசகி எழுதிய குட்டிக் கதையை தமது நன்றியுரையில் (பார்க்க பக்கம்-4) எடுத்துச் சொல்லி சிரிக்க வைத்தார் பி. ராஜேந்திரன்.

**சிந்திக்க...**

பேச்சாளர்களின் ஜோக்குகளே சிந்தனையைத் தூண்டும் விதமாய்த்தான் இருந்தன. என்றாலும் பார்வையாளர்கள் சிரிப்படங்கிப் போய் சிந்தனையில் ஆழ்ந்து போன 'எக்ஸ்க்ளூஸிவ்' நிமிடங்களும் நிகழ்ச்சியில் விரவியிருந்தன.

"பணம் என்பது மிகப் பெரிய சமாசாரம். இல்லாது போனால் காரல் மார்க்ஸ் 'மூலதனம்' என்று பணத்தைப் பற்றி ஒரு புத்தகமே எழுதுவாரா...?" - சீரியஸாகக் கேட்ட பாப்பையா, தொடர்ந்து சொன்னார்:

"நான் வாடகை வீட்டில் குடியிருந்த போது அதன் உரிமையாளர் அடிக்கடி சொல்லுவார் - 'தானெல்லாம் எதுக்கு




• மேடையில்...



## 'பணமொழி'ப் போட்டி!

**'ப**ணம்' பற்றிய இக் கட்டுரையைப் படித்தீர்களா? பணம் பற்றி அதிகம் புழக்கத்தில் இல்லாத பழமொழி அல்லது சொலவடை அல்லது உங்களுக்குத் தோன்றிய இரண்டு வரி கவிதையை 13.5.2001க்குள் எங்களுக்கு அனுப்புங்கள். தபால் கார்டில் மட்டுமே எழுதலாம். ஒரு கார்டில் ஒரு மொழிதான் எழுத வேண்டும்.

மிகச் சிறந்த பணமொழிக்கு ரூ.100 பரிசு உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

சார் இருக்கணும்? பிறந்ததே வேஸ்ட்! வருமானமே இல்லை...! - இப்படிப் புலம்பியவருக்கு ஏழெட்டுச் சொந்த வீடுகள் இருந்தன! பணத்தின் குணத்தைப் பாருங்கள்... 'இன்னும் இன்னும்' என்று கேட்கும் மனநிலையைத்தான் அது ஏற்படுத்துகிறது. நாற்பத்தெட்டு லட்சம் ஜாக்பாட் அடித்தால் சந்தோஷப்படுகிற மனம், மறுநாளே 'ஐயோ! ஒரு கோடி கிடைத்திருக்கக்கூடாதா' என்று ஏங்குகிறது...

"ஒரு தொகுதியிலே எலக்ஷனில் நிற்பவர் குறைந்தபட்சம் 25 லட்ச ரூபாய் கொண்டு வந்து இறக்குகிறார். நூற்றுக்கு இரண்டு ரூபாய் வட்டி வைத்தால் கூட வருஷத்துக்கு ஆறு லட்சம்; ஐந்து வருஷத்துக்கு முப்பது லட்சம். ஜெயிச்சு வந்து சம்பளம் வாங்கினால், மாசத்துக்குப் பத்தாயிரம் ரூபாய்தான். அதாவது அஞ்சு வருஷத்துக்கு ஆறு லட்சம் ரூபாய்! ஆறு லட்சம் சம்பாதிக்க யாராவது வட்டியும் முதலுமா 55 லட்சம் செலவழிப்பாங்களா..." - கணக்குப் போட்டுக் காட்டி யோசிக்க வைத்தார் பாப்பையா.

**க**தை சொல்லி யோசிக்க வைத்தார் சரவணன் - இது உண்மைக் கதை:

"நான் சென்னை நகர ஷெரீஃப்பாக நியமிக்கப்பட்ட போது எனக்கு வந்த பல கடிதங்களுள் ஒன்று எனது பள்ளிக்கூட தமிழாசிரியர் எழுதியது. அவர் ராயப்பேட்டை ஹாஸ்பிடலில் இருப்பது அறிந்து, அவருக்கு எனது உதவியாளர்கள் மூலம் பணம் அனுப்பி வைத்தேன். வேலை மிகுதியால் நேரில் போக முடியவில்லை. சில நாட்கள் கழித்து அவரிடமிருந்து மற்றொரு கடிதம் : 'நீ நேரில் வந்திருந்தால் கூட உதவி கேட்கத் தயங்கியிருப்பேன். குறிப்பறிந்து உதவியதற்கு நன்றி - நெகிழ்ச்சியாயிருந்தது.

"மேலும் சில நாட்கள் கழித்து நடந்தது இன்னும் நெகிழ்த்தி விட்டது. தமிழாசிரியர் குடும்பத்துடன் என்னைப் பார்க்க வந்தார். ஒரு தட்டில் பூ, பழம் சகிதம் பணம். என்னிடம் நீட்டினார். ஒன்றும் புரியாமல் அவரைப் பார்த்தபோது சொன்னார் : "இன்னும் ரொம்ப நாளைக்கு நான் இருக்க மாட்டேன். கடனாளியாகச் சாக நான் விரும்பலை..."

**ச**ரவணன் சொன்ன உண்மைக் கதை கேட்டு உருகிச் சூள் கொட்டிய கூட்டம் கி.ராவின் நன்றியுரையில் மேற்கோள்காட்டப்பட்ட குறளைக் கேட்டு நிமிர்ந்து உட்கார்ந்தது.

ராஜாஜிக்கு மிகப் பிடித்தமான அந்தக் குறள் :

*ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்*
*பேரறி வாளன் திரு.*

ஒரு நல்ல மனிதனின் கையில் சேரும் பணம் ஊர்ப் பொதுக் குளத்துத் தண்ணீர் போல சகல ஜீவராசிகளுக்கும் பயன்தரும் என்று சுட்டிக்காட்டினார்.

**ந**ம் பணம் பிறருக்குப் பயன்பட வேண்டும் - சரிதான். ஆனால் பிறர் துன்பத்தில் நாம் சம்பாதிக்கும் பணம்; உழைக்காமல் சம்பாதிக்கும் பணம்; ஏமாற்றிச் சம்பாதிக்கும் பணம் நிச்சயமாய்க் கையில் தங்காது என்று அனைத்துப் பேச்சாளர்களுமே அடித்துச் சொல்ல, அவநம்பிக்கையில் உச் கொட்டியது கூட்டம்.

ஏய்த்துப் பிழைத்தவர்கள் சிறக்கவில்லையா?

உழைத்துப் பிழைப்பவன் ஏமாளியாகி விடவில்லையா?

அப்படியானால் எப்படித்தான் சம்பாதிக்க வேண்டும் என்கிறீர்கள்...? நாங்களும் சிறக்க வேண்டாமா...?

கூட்டத்தினரின் மனத்தில் எழுந்த அடுக்கடுக்கான கேள்விகளுக்குப் பேச்சாளர்களின் உரையிலேயே பதில் பொதிந்துதான் கிடந்தது. போதாக்குறைக்குக் கேள்வி பதில் நேரத்தின் போதும் ஐயங்கள் தெளிவிக்கப்பட்டன.

சரி, சிறக்க என்ன வழி...? என்கிறீர்களா...? ஐந்து ரூபாய் செலவழித்தால் அடுத்த வாரம் கல்கியில் படித்துத் தெரிந்து கொள்ளலாம்!

**— எஸ். சந்திரமௌலி**

படங்கள் : **யோகா**

**கிருஷ்ணகிரி சட்டமன்றத் தொகுதியில் ஜெயலலிதா உட்பட மனு தாக்கல் செய்த வேட்பாளர்களின் மனுக்களைப் பரிசீலனை செய்யத் துவங்கி, முடிவு தெரிந்த (24.4.2001) அந்த எட்டு மணி நேரத்தைப் படம் பிடிக்கிறார் நமது நிருபர்.**

*காலை மணி 9:* "கிருஷ்ணகிரியில் கலவர பயம்; அதிரடிப் படை குவிப்பு" என்ற செய்தியைக் காலைப் பத்திரிகைகளில் படித்துவிட்டு ஒரு திக், திக்குடன் பஸ் நிலையத்தில் இறங்கினால் எந்த பரபரப்பும் இல்லை. மக்கள் அமைதியாகத் தங்கள் வேலைகளைப் சாமானியர்களிடம் கூட செல்ஃபோன்கள். தி.மு.க ஆட்களைத் தேட வேண்டியிருந்தது. அ.தி.மு.க அன்னை சத்யா தொழிற் சங்க பிரமுகரான ராஜகோபால் நம்மைத் தேர்தல் அதிகாரியாக நினைத்துக் கொண்டு வாதத்தைத் துவங்கினார். "நான்கு தொகுதியில் போட்டியிட உரிமையுண்டு. அம்மாவுக்கு எல்லா சட்டமும் தெரியும்" என்றார் அவர்!

தி.மு.க நகராட்சி கவுன்சிலர் கிருஷ்ணராஜ் "நாங்க யாருக்கும் பயப்படலை; எங்கள் தலைவர் சொன்னது போல் தோற்கடிக்க முடியாதவர் அல்ல ஜெயலலிதா" என்றார்.

*மதியம் 12:* உச்சி வெய்யில் பதம் பார்க்க, ஒதுங்குவதற்கு இடம் தேடினார்கள் பத்திரிகையாளர்கள். அலுவல



பார்க்க விரைந்து கொண்டிருந்தார்கள்.

*காலை 10:* பெங்களூர் சாலையில் இருக்கும் வருவாய்க் கோட்டாட்சியர் அலுவலகம். தேர்தல் அதிகாரியும் கோட்டாட்சியருமான மதிவாணன் அலுவலகத்தில் நுழையும் முன் மைக்குகளுடன் அவரை முற்றுகையிடுகிறார்கள் பத்திரிகையாளர்கள். "1997 சர்க்குலர் தெளிவாக இருக்கிறது. நான் யாருக்கும் பயப்பட மாட்டேன்" என்று சொல்லி மாடிக்குச் செல்கிறார். அவரைத் தொடர்ந்து, ஜெயலலிதாவுக்காக வாதாட தில்லியிலிருந்து வந்த சித்தார்த்த சங்கர் ரேயும், தம்பித்துரையும் உள்ளே நுழைகிறார்கள். தி.மு.க சார்பாக புதுவை வழக்கறிஞர் எஸ்.எஸ். திருநாவுக்கரசும், மிசா கணேசனும் நுழைகிறார்கள்.

*காலை 11:* கோட்டாட்சியர் அலுவலகத்தின் முன்னே அ.தி.மு.க தொண்டர்கள் குவியத் துவங்கி விட்டனர். கத்தின் கீழ்த் தளத்தில்கூட நுழைய அனுமதிக்கவில்லை. ராசிபுரம் தொகுதி அ.தி.மு.க பாராளுமன்ற உறுப்பினர் சரோஜா உள்ளே நுழைகிறார். "மதிவாணன் அந்தம்மாவின் உறவினர்" என்று ஒரு உள்நோக்கமுள்ள செய்தியைச் சொல்கிறார் தி.மு.க தோழர் ஒருவர்.

*மதியம் 1:* தேர்தலில் போட்டியிட சீட்டு கிடைக்காத தற்போதைய எம்.எல்.ஏ காஞ்சனா கமலநாதன் சுமோவில் வருகிறார்: "என்ன மேடம் உங்கள் ஊரில் குடிக்கத் தண்ணீருக்குக் கூட வழி இல்லையே" என்று பத்திரிகையாளர்கள் வெயிலின் பொருட்டுச் சொல்லவும், பத்தே நிமிடத்தில் குளிர் பானங்களைக் கொண்டு வந்து வயிற்றைக் குளிர வைக்கிறார் காஞ்சனா. (அடுத்த தேர்தலிலாவது கலைஞர் சீட்டு கொடுக்கட்டும்!)

*மதியம் 2.00* கீழேயிருந்து மேலே பார்த்து "அண்ணே சி.எம். ஆபீஸிலிருந்து

எம்.பிக்கு (கிருஷ்ணகிரி எம்.பி வெற்றிச் செல்வன்) போன்'' என்று தொண்டர் குரல் கொடுக்க, மேலிருந்து ஓடி வருகிறார் மிசா கணேசன். 'செல்' பேச்சுக்கள்: ஆண்டிப்பட்டி தொகுதியில் போட்டியிட மனு தாக்கல் செய்திருந்த சேடப்பட்டி முத்தையாவின் மனு நிராகரிக்கப்

இரண்டு தொகுதிகளில்தான் அம்மா மனு தாக்கல் செய்திருக்கிறார். 'மற்ற இரண்டு தொகுதிகளைப் பற்றி எங்களுக்குத் தெரியாது' என்று தேர்தல் அதிகாரியிடம் சொல்லி விட்டோம்'' என்கிறார் தம்பித்துரை.

''அப்படியென்றால் ஜெயலலிதா சார்பாக கடலூரிலும் (புவனகிரி), புதுக்கோட்டையிலும் உங்கள் கட்சிப் பிரமுகர்கள் வாதாடிக் கொண்டிருப்பதாகச் செய்திகள் வருகின்றனவே?'' என்று நாம் கேட்க, நழுவிச் செல்கிறார் தம்பித்துரை. ''கூடுதலாக இரண்டு தொகுதிகளில் மனு தாக்கல் செய்து ஒரு குழப்பத்தை உண்டாக்கி ஏதாவது ஒரு தொகுதியில் போட்டியிடும் வாய்ப்பைப் பெறலாம் என்று திட்டம் போட்டிருக்கிறார்கள்'' என்கிறார் தி.மு.க தோழர்.









# "ஐயா தர்மம் செத்துப் போச்சுய்யா!"

பட்டது'' என்ற செய்தி 'செல்'லில் வந்தது என்றார்கள். கோட்டு சூட்டுடன் தம்பித்துரையுடன் வெளியே வருகிறார் எஸ்.எஸ்.ரே. அவரை நெருக்கியடிக்கிறார்கள் பத்திரிகையாளர்கள். ''ஜெயலலிதாவைத் தகுதி இழந்தவராக அறிவிக்கும் வாய்ப்பே இல்லை. நாங்கள் எங்கள் தரப்பு வாதங்களைத் தேர்தல் அதிகாரியிடம் எடுத்து வைத்துள்ளோம்'' என்கிறார் ரே. ''கிருஷ்ணகிரி, ஆண்டிப்பட்டி

முனியாண்டி விலாஸ் மற்றும் அருணா செட்டிநாடு ஓட்டல்கள் கரை வேட்டித் தொண்டர்கள் கூட்டத்தில் திணறித் தத்தளிக்கிறது.

**மாலை 3.00:** மதிவாணன் முடிவுக்காக காத்திருக்கிறார்கள் நிருபர்கள். மிகவும் டல்லாக வருகிறார் அ.தி.மு.க அமைப்புச் செயலாளரான கே.பி. முனுசாமி. மாவட்ட போலீஸ் அதிகாரி மஞ்சுநாதன் ஸ்பாட்டை விட்டுச் சென்றுவிட்ட

தால், ''அ.தி.மு.க தொண்டர்களுக்கு டென்ஷன் ஏற்படுத்தும் விதமாக மதி வாணன் முடிவெடுக்க மாட்டார்'' என்று கிசுகிசுக்கப்படுகிறது. பத்திரிகை யாளர்களின் செல்கள் சிணுங்கிக் கொண்டே இருக்கின்றன. ''No decision yet'' என்று தகவல் சொல்லி, சொல்லி அலுத்துப் போகிறார்கள் நிருபர்கள்.

ஒரு பழைய ரெமிங்டன் டைப்ரைட் டரை உள்ளே கொண்டு செல்கிறார்கள்.

***மாலை 4.00:*** பத்திரிகையாளர் களின் பொறுமை எல்லை மீறுகிறது. கண் ணாடிக் கதவை ஓங்கித் தட்டி, கோஷம் போடுகிறார்கள். ''நாங்க காலையிலிருந்து காத்துக்கிட்டிருக்கோம்... கருணை காட் டுங்க'' என்று குரல் கொடுக்கிறார்கள். கிருஷ்ணகிரி டி.எஸ்.பி பகலவன் ''இன் னும் கொஞ்ச நேரம் பொறுங்க. டைப் அடிக்கறாங்க'' என்கிறார். அதற்குள் என்.டி.டி.வி நிருபர் அலுவலகத்திடம் பேசிவிட்டு ''வாசலில் காத்து இருக்கும் நமக்குத் தெரியவில்லை; ஜெயலலிதா மனு நிராகரிக்கப்பட்டது' என்று தில்லி யில் சொல்கிறார்களாம்'' என்கிறார். அ.இ.அ.தி.மு.க.வினர் முகத்தில் கவலை



''நேத்து நைட் எனக்கும் என் கணவருக்கும் ஒரே சண்டை!''

''ஐயையோ... அப்புறம்?''

''வீட்டுக்குத் திருட வந்தவன்தான் சமாதானம் செஞ்சு வச்சுட்டுப் போனான்!''

— அம்பை தேவா



தொற்றிக் கொள்கிறது. அலுவலகத்தைச் சுற்றி ஒருவித பயம் கலந்த அமைதி உண்டாகிறது. எல்லோர் கண்களும் மாடியை நோக்கி.

***மாலை 5.00:*** மாடியில் பிளாஸ்டிக் நாற் காலிகள் பறக்கும் சப்தம் கேட்கிறது. ஏதோ கசமுசா. கிளைமாக்ஸ் நெருங்கிவிட்டது புரிகிறது. காமிராக்கள் தயாராகின்றன. நொடியில் கீழே வருகிறார் அ.இ. அ.தி.மு.க பிரமுகர் கே.பி. முனுசாமி. நாடகத்தனமாக ''ஐயா தர்மம் செத்துப் போச்சுயா' என்று நிருபர்களைப் பார்த்துச் சொல்கிறார். 'வாங் கடா... இந்த இடத்தை விட்டு நகரக்கூடாது' என்று ரத்தத்தின் ரத்தங்களைக் கூப்பிடு கிறார். வாயிலை அப்படியே அபரித்துக் கொள்கிறார்கள். அடுத்த நிமிடத்திலிருந்து எழுத முடியாத அளவு கோஷங்கள், அர்ச் சனைகள் கருணாநிதிக்கும், தேர்தல் அதி காரி மதிவாணனுக்கும், கடைகளின் ஷட் டர்கள் கீழே இறக்கி விடப்பட்டு, கலவரச் சூழல் பற்றிக் கொள்கிறது. மிக டிப்ளமாடிக் காக டீல் செய்து எல்லோரையும் வேனில் ஏற்றுகிறார் எஸ்.பி. மதியத்திலிருந்து காணாமல் போன தம்பித்துரை, தோழர் களுடன் சேர்ந்துகொண்டு தம் பங்குக்கு முதல்வரை ஒரு பிடி பிடிக்கிறார். 'மதி வாணன் நிருபர்களைப் பார்க்க விரும்ப வில்லை' என்கிறார் போலீஸ் அதிகாரி.

***மாலை 6.00:*** தி.மு.க வேட்பாளர் செங் குட்டுவன் தயக்கத்துடன் வெளியே வரு கிறார். முகம் இறுகி இருக்கிறது. எந்தக் கேள் விக்கும் பதில் சொல்லாமல் 'எங்கள் வேலை யைப் பார்ப்போம்' என்று போலீஸ் காவ லுடன் செல்கிறார். தேர்தல் அதிகாரி முடிவு சொன்னவுடன் அ.தி.மு.க பிரமுகர் முனு சாமி, நாற்காலியைத் தூக்கி தி.மு.க எம்.பி வெற்றிச் செல்வன் மீதும் மதிவாணன் மீதும் எறிந்த செய்தி தெரிய வருகிறது.

பர்கூர் வழியாக சென்னை திரும்பு கிறோம் எந்த இடத்திலும் கலாட்டா, பதற்றம் இல்லை. ஆனால் கிருஷ்ணகிரி யில் நாம் சந்தித்த அரசு ஊழியர்கள், போலீஸ் காரர்கள், லோக்கல் பத்திரிகையாளர்கள் மற்றும் ஜெராக்ஸ் கடைக்காரர் உட்பட நடுநிலை மக்கள் அனைவரிடமும் அம்மா பாசம் பொங்கி வழிந்ததற்கான காரணத்தைத் தான் இதுவரையில் புரிந்து கொள்ள முடியவில்லை.

— கௌசிக்

அட்டை வண்ணப்படங்கள்: சௌரா, வெங்கடேஷ்



# சிறுநீரக கோளாறுக்கு சிறந்தது
# தெய்வீக மூலிகை மருத்துவம்



சிறுநீரகம் என்பது நமது உடலின் மிக முக்கியமான ஒரு கழிவு நீக்க உறுப்பாகும். இது நம் உடலின் இடுப்புக்கு சற்று மேலே முதுகெலும்பின் இருபுறமும் பக்கத்திற்கு ஒன்றாக (இடது, வலது) அமைந்துள்ளது. இவைகள் ஒவ்வொன்றிலும் சுமார் 10- லட்சம் நெப்ரான்கள் என்னும் நுண்ணிய வடிகுழல்கள் உள்ளது. இந்த நெப்ரான்கள்தான் சிறுநீரகத்தில் பணிபுரியும் முக்கிய திசு ஆகும். உடலிலுள்ள இரத்தம், சிறுநீரகத்தில் உள்ள நெப்ரான்களின் வழியே செல்லும்போது, உடலுக்கு தேவையான நீர், திட, திரவ பொருட்களை உறிஞ்சிக்கொண்டு, தேவையற்ற கழிவுப்பொருட்களை சிறுநீர் குழாய் மூலம் சிறுநீரக வெளியேற்றப்படுகின்றன. சிறுநீரகங்கள் பழுதடையும் போது, யூரியா, கிரியேட்டினின், சோடியம், பொட்டாசியம், நீர் போன்ற கழிவுப்பொருட்கள் இரத்தத்தில் அதிகமாகின்றன. இதனை செயற்கை முறையில் இரத்த சுத்திகரிப்பு செய்தல் (Dialysis) மற்றும் சிறுநீரகமாற்று அறுவை சிகிச்சை (Kidney transplantation) போன்றவை செய்யும் நிலை ஏற்பட்டு இறுதியில் உயிரிழக்கும் நிலை ஏற்படுகிறது.

**சிறுநீரக கோளாறின் அறிகுறிகள்:** இரத்த சோகையினால் வெளிறிப்போன முகம். 2 கைகால், முகம், வயிறு போன்றவை வீங்கி முற்றிய நிலையில், நுரையீரல், இதயம் போன்ற முக்கிய உறுப்புகளை பாதிக்கின்றது. இதனால், மூச்சுத்திணறல், நெஞ்சுவலி, சளி, இருமல், பலஹீனம், போன்றவை தோன்றும். 3. சிறுநீர் போகும் போது எரிச்சல், மேலும் சிறுநீர் காப்பி கலரில் இருக்கும். அடிக்கடி இரவில் சிறுநீர் கழிக்க தோன்றும். 4. கண்ணின் கீழ் ஒரு சிறு பை போல் வீங்கி இருக்கும். 5.கீழ் முதுகில் வலியெடுக்கும். 6. யூரியா, கிரியேட்டினின், சோடியம், பொட்டாசியம் போன்றவை இரத்தத்தில் அதிகமாக காணப்படும்.

**சிறுநீரகம் செயல் இழப்பின் காரணங்கள்** சர்க்கரை வியாதிதான் முதல் முக்கிய காரணம் ஆகும். கட்டுப்படுத்தப்படாத உயர் இரத்த அழுத்தம், எய்ட்ஸ் நோய் கிருமியான HIV வைரஸ் மற்றும் மஞ்சள் காமாலையின் வைரஸ் B-யும் தொற்றாலும், இரத்த சோகை, சிறுநீரககற்கள், மூட்டுக்கள், இணைப்புத் திசுக்களை, பாதிக்கும் நோய்களாலும் அதிக வயிற்றுப்போக்கு, வாந்தி, சிறுநீர் குழாயில் ஏற்படும் தசை சுருக்கம், கற்கள், கட்டிகள், புற்றுநோய் போன்றவற்றாலும் அடைப்புகள், ஏற்பட்டு சிறுநீரகம் பழுதாகலாம். மேலும் மற்ற நோய்களுக்காக எடுக்கப்படும் இரசாயன மாத்திரைகள், அதிகமான மாமிச உணவுகள் பாம்பின் விஷம், தீக்காயம், மின்சார தாக்குதல் போன்றவற்றால் சிறுநீரகம் பாதிக்கலாம்.

**சிறுநீரகம் நன்றாக செயல்பட தேவையான தெய்வீக மூலிகைகள்:** சக்திக்குரிய வேப்பிலை, வில்வம், அத்தி, அருகம்புல், துளசி, ஆடாதொடா, தூதுவளை, வாழைத்தண்டு, தும்பை, நெல்லி, கீழாநெல்லி, முருங்கை, வல்லாரை, ஆவாரம்பூ, வெந்தியம், கரிசலாங்கண்ணி, மாவிலை, நாவல் - ஆகியவைகளை எடுத்து வந்து வெய்யிலில் உலர்த்தி பொடி செய்து பின், சம அளவில் ஒன்றாக கலந்து ஒரு பாட்டலில் வைத்துக்கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு முன் தினமும் காலை, மாலை உட்கொள்ளவும். இவைகள் சிறுநீரகங்களுக்கு சக்தியை தருகின்றன. தேய்ந்த பாகங்களை புதுப்பிக்கின்றது. நோய் தொற்றுகளில் இருந்தும் பாதுகாக்கின்றது. இதனால் கிட்னி வழக்கம் போல் செயல்பட இம் மூலிகைகள் பெரிதும் துணை புரிகின்றன.

**இயற்கை உணவுகள் :** தினம் ஏதேனும் ஒரு வேளை இயற்கை உணவாகிய பச்சையாக சாப்பிடும் காய்கள், பழங்கள், பழ ஜூஸ்கள், சலாட்ஸ் (Salads) போன்றவற்றை உணவாக உட்கொள்ள வேண்டும். காரணம் இதில் உள்ள சக்திகளை உடல் எளிதில் பெறுகின்றன. மேலும் கழிவுகள் குறைவு. ஆகவே கிட்னிக்கு வேலை பளு குறைகின்றது. கிட்னி நன்கு செயல்பட இயற்கை உணவு உதவுகிறது. குறிப்பாக அன்னாசி, பேரிட்சை, பப்பாளி, கொய்யா, அத்திபழம், நாவல், ஆரஞ்சு, மாதுளை, கேரட், வெண்டை, வெள்ளரிக்காய், பேரிக்காய், இளநீர், கரும்புசாறு, வாழைத்தண்டு, முள்ளங்கி, போன்றவை உட்கொள்ளலாம். மற்ற இரண்டு நேரம் சாதாரண சைவ உணவு உப்பில்லாமல் அரை வயிறு ஆகாரம் உட்கொள்ளலாம். மேலும் வாரம் ஒரு நாள் உண்ணா நோன்பும், தினம் காலை, மாலை எளிய உடற்பயிற்சிகளும் மேற்கொண்டால், சிறுநீரக பாதிப்பில் இருந்து படிப்படியாக முற்றிலும் குணம் பெறலாம்.

*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*



தலைமை முகவரி : **Dr. M.குருபரன் & Dr. M. சடாபதி, Dr. M.சிவசக்தி, S/O. Dr. C.K.மாணிக்கவாசகம்**
P.B. NO. 30, No. 3, திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் DT 635601 ✆:04179-20469, 22769

சென்னை கிளை. : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ்,
சென்னை - 600 010. ✆ : 044-6424285, 6427638.

இரு முகவரிகளிலும் ஆலோசனை நேரம் காலை 10.00-1.00 P.M. மாலை 5.00-7.00 P.M.

**குறிப்பு :** சென்னை,வேலூர், காஞ்சிபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைப்பேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் - விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல் :** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 27 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் நோய் அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ. 70/- ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அரிய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ. 60/- தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

7& 8 ந் தேதி – மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை "The South Indian Concerns Ltd." 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589

9 ந் தேதி – பெங்களூர் : காலை 11 to 1 ஹோட்டல் பிராட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பே கவுடா ரோட் ✆ : 2266374

18 & 19–ந் தேதி–புதுடெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை, South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆:5717126,5723651

# குறையொ

பகவான் பெருமை எவ்வளவு உயர்ந்ததோ, அனுஷ்டானமும் அவ்வளவு உயர்ந்தது! அந்த அனுஷ்டானம் இல்லாது போனால் அவனை அறிய முடியுமா? அளந்துவிட முடியுமா? வெறுமே நாம் மந்திரத்தைச் சொல்லிக்கொண்டே போனோமானால் பலன் கிடைத்துவிடுமா..?

'எத்தனையோ நான் சொன்னேன்; மந்திரம் பலனைக் கொடுக்க வில்லையே!' என்றார் ஒருத்தர். அனுஷ்டானத்திலே லோபம்! நம்மால் சரியாகப் பண்ண முடியவில்லை! – அதுதான் காரணம். அந்தப் பலனைக் கொடுக்கிற அளவுக்கு நம்மால் பண்ண முடியவில்லையென்றுதான் அர்த்தமேயொழிய பகவான் மீது ஒரு நாளும் தோஷமே கிடையாது. அவன் ஒரு நாளும் பலனைக் கொடுக்காமல் இருக்கவே மாட்டான். ஆனால் நாம் பண்ணுகிற அனுஷ்டானத்தை, அவன் பலனைக் கொடுக்கிற அளவுக்குப் பண்ணினோமா என்றுதான் தெரிந்து கொள்ள வேண்டும்.

பலன் கிடைக்காது போனால், நம்மிடத்திலே ஆசார குறைவு இருக்கிறது. அனுஷ்டான குறைவு இருக்கிறது; மந்திர லோபமோ, நியம லோபமோ, திரவிய லோபமோ ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும். அதைச் சரிப்படுத்திக் கொள்ள வேண்டும். நம்மை நாமே திருத்திக் கொள்ள வேண்டும்.

எப்படி வெளியிலே இருக்கிற பதார்த்தங்களை ஹவிஸ்ஸாகச் சமர்ப்பிக்கிறோமோ, அந்த மாதிரி, கண், மூக்கு, வாய், ச்ரோத்ரம் எல்லாமே அவனிடத்திலே சமர்ப்பிக்க வேண்டும்.

இதைத்தான் இன்னொரு இடத்திலே வேதம் சொல்கிறது – கிருஷ்ண யஜுர் வேதத்தில் வரும்படியான அழகான சுலோகம் அது :

**10**

'என்னுடைய ஆயுள் இருக்கிறதே, அது ஒரு 60 – 70 வயசு இருக்க வேண்டும் – இது அந்த எம்பெருமானின் பொருட்டு – யக்ஞத்தின் பொருட்டு.'

அதே மாதிரி, பிராணன் இருக்கிறதே, அது யக்ஞத்தின் பொருட்டு, அபானன் இருக்கிறதே, அதுவும் யக்ஞத்தின் பொருட்டு, ச்ரோத்ரம் (செவி) இருக்கிறதே, அது யக்ஞத்தின் பொருட்டு; கண் இருக்கிறதே, அது யக்ஞத்தின் பொருட்டு; மூக்கு, வாய், தலை, மனஸ், பாதம், கை.. என்னைச் சேர்ந்த மக்கள் மனைவியெல்லாம் இருக்கிறார்களே... அத்தனையும் யக்ஞத்தின் பொருட்டு!

உடனே ஒருத்தர் கேள்வி கேட்கிறார் : 'எல்லாமே யக்ஞத்தின் பொருட்டு என்றால், உனக்கென்ன மிச்சம் கிடைக்கும்?'

இன்னொரு இடத்திலே வேதம் சொல்கிறது :

'நாம் இதை அவன் பொருட்டு என்று சமர்ப்பித்தால், நமக்குத் திருப்பி நூறு மடங்காக அது வருகிறது!'

இங்கே வந்து விஷ்ணு சஹஸ்ரநாமம் கேட்பது என்று ஏழு மணியிலிருந்து ஒன்பது மணி வரையில் நாம் உட்கார்ந்துகொண்டு, இரண்டு செவிகளையும் விஷ்ணுவின் பொருட்டு கொடுத்து விட்டோம். இதனால் என்ன பயன்?....

நம்முடைய ச்ரோத்ர இந்த்ரியம் (செவிப் புலன்) இன்னும் அமோகமாக வேலை செய்யும். நல்ல முறையிலே, விசேஷமான விஷயங்களையெல்லாம் அது கிரஹிக்கும். கெட்டதைத் தடுக்கும். கெட்ட விஷயங்களைத் தடுத்து, நல்ல விஷயங்களைக் கேட்கும்படியாகப் பண்ணும். பகவான் இதை நன்றாக விருத்தி பண்ணி விட்டு விடுவான். அதைப் போல் அவனுக்குக் காணிக்கையாகும் எல்லாமே, பல மடங்கில் நமக்குத் திருப்பிக் கிடைக்கிறது.

விஷ்ணு புராணத்திலே ஓரிடத்திலே சொல்கிறார்: ஒரு பெரிய பாறாங்கல், அதிலே புஷ்பங்களெல்லாம் சிந்தியிருக்

கிறது. ஒரு கோபஸ்த்ரீ கேட்கிறாள். 'அங்கே புஷ்பங்கள் சிந்தியிருக்கிறதே – எப்படி?' என்று. மற்றவள் சொல்கிறாள், "இது உனக்குத் தெரியாதா...? குழந்தை கிருஷ்ணன் இருக்கிறானே, அவன் ஒரு கோபஸ்த்ரீயை உட்கார வைத்துத் தலை வாரிப் பின்னி, புஷ்பத்தை அழகாக வைத்து, அலங்காரம் பண்ணி, அவளைப் பார்த்து மகிழ்ந்திருக்கிறான்."

"அப்படியா? குழந்தை கிருஷ்ணன் புஷ்பத்தைக் கொண்டு ஒரு கோபஸ்த்ரீக்கு அலங்காரம் செய்தானா? அப்படிக் கூட உண்டா?" என்று ஆச்சர்யப்படுகிறாள் கேட்டவள்.

# மல்லை

அதற்கு மற்றொருத்தி சொல்கிறாள், "உனக்குத் தெரியாதா...? பூர்வ ஜன்மத்திலே எம்பெருமானைப் பலவித புஷ்பங்களால் அவள் ஆராதித்திருக்கிறாள். அதனால் பரமாத்மா அவளை அலங்காரம் பண்ணி அழகு பார்த்திருக்கிறான்."

ஆதலால் பரமாத்மா, நாம் என்ன பண்ணினோமோ அதைப் போல் பல மடங்கு நமக்குப் பண்ணி அழகு பார்ப்பான். அவனுக்கு அப்படிப்பட்ட குணம்! அவன் நம்மை அப்படியே விட்டுவிடுவானா...?



முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சாரியார்

போதன்ன பாகவதத்திலும் வேதத்திலும் வருகிறது இதற்குப் பிரமாணம்.

'எம்பெருமானை ஆராதிக்கிற கைதான் கை. அவனை நினைக்கிற நினைவுதான் நினைவு. அவனுடைய பெருமை, புகழ் கேட்கும் செவிதான் செவி.'

- இவ்வாறு பிரஹலாதன் ஹிரண்ய கசிபுவின் முன்னிலையில் சொல்லும் படியாக ஒரு ஸ்தோத்திரம் அமைந்திருக்கிறது.

இதையே ஸ்ரீமத் பாகவதத்தில் அம்பரீஷ சரித்திரத்தில் பார்க்கலாம். அம்பரீஷன் நினைக்கிறான். 'அந்த எம்பெருமான் திருவடியில் சேர்க்கப்பட்ட அந்த துளஸி தளத்தின் திவ்ய வாசனையை நுகர்வதற்காகத்தான் இந்த நுகர்ச்சி என்பதையே பகவான் நமக்குக் கொடுத்திருக்கிறானோ...?' என்று நினைக்கிறான்!

துளஸி அவ்வளவு உயர்வானது. ஏகாதசியன்று துளசி சாப்பிடக்கூடாது - நித்யம் சாப்பிட்டாலும் ஏகாதசியன்று கூடாது. வலது பக்கத்தில் காதுக்குப் பின்னால் வைத்துக் கொள்ள வேண்டும் துளஸியை. காதுக்கு மேலே வைத்துக் கொள்ளக் கூடாது. புஷ்பத்தையோ, துளஸியையோ காதுக்கு மேலாக யாராவது வைத்துக் கொண்டால் அவர்களைப் பார்த்தவர்கள் நேரே போய் கட்டிய வஸ்திரத்துடன் ஸ்நானம் செய்து விட்டு வர வேண்டும்!

அப்படிப்பட்ட உயர்ந்த நியமத்துடன் அணிய வேண்டிய உயர்ந்த விஷயம் துளஸி.

அந்தத் துளஸியை முகர்ந்து பார்க்கிற போது ஸுவாஸனையுடன் இருக்கிறது. பகவானுடைய பாதத்திலே பட்டு வருகிறது அந்தத் துளஸி. ஏற்கெனவே அதற்குப் பரிமளம்; இப்போதோ நிகம பரிமளம்! எம்பெருமானின் திருவடி ஸ்பரிசம் பட்டதனாலே இன்னமும் பரிமளமாய் இருக்கிறது!

அதை முகர்ந்தால், உள்ளுக்குள்ளே போய், நம்மிடத்தில் இருக்கிற கெட்ட வாசனையையெல்லாம் போக்கிவிடும். அதற்காகவே இந்த நுகர்ச்சி என்பதை பகவான் கொடுத்திருக்கிறான்.

அதே போல் நேத்திர த்வயத்தால் அவன் திருவடியை - திருவடியிலிருந்து திருமுடி வரையில் அப்படியே கண் மூடாமல் சேவிக்க வேண்டும்.

அதை யார் பண்ணினார்கள் என்று கேட்டால், சீதாபிராட்டி பண்ணினாள்.

நாளை ஸ்ரீ ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்க வேண்டும். அவனோடு கூட போய்

## அருள்வாக்கு

"என்னுடைய ஆத்மா" என்று நாம் பேச்சிலே எப்போதாவது சொன்னால் அது தப்பு. இதேபோல இன்னொருத்தருடைய ஆத்மா என்று சொன்னாலும் தப்பு. 'ஆத்மா' என்றால் என்னவென்று தெரியாததால் நாம் பண்ணும் தப்பு. ஸாதாரணமாக ஆத்மாவைப் பற்றி எப்போது சொல்கிறோம்? யாராவது

ரங்கநாதரைச் சேவிக்கிறாள் சீதா பிராட்டி.

சயனத் திருக்கோலத்திலே இருக்கிற ரங்க நாதரை ஸ்ரீராமன் சேவிக்கிறான்! 'அம்புலத்தோன் அயோத்தி மன்னர்க்களித்த கோயில்; தோளாத தனி வீரன் தொழுத கோயில் அது!

தனி வீரன் ராமன்! அவன் தொழுத போது சீதாபிராட்டியும் உடன் வந்தாள். அவளுடைய நேத்திரத்துக்கு விலக்ஷணமாக ஒரு பதம் உபயோகிக்கிறார் வால்மீகி :

**விசாலாக்ஷ்யா!**

விசாலமான நேத்திரமுடைய சீதை என்றார்.

இதற்கு வியாக்யாயனம் பண்ணுகிறார் பெரியவாச்சான் பிள்ளை - விசாலாக்ஷ்யா என்று எதற்காகச் சொன்னார்...? கண்களை அப்படியே அகல விரித்து, இமை கொட்டாமல் சேவிக்கிறாளாம் சீதை.

ஏனென்று கேட்டால்... அந்தக் கணத்திலே, **அர்ச்சகனும் அவனே. அர்ச்சிக்கப்படுபவனும் அவனே!** இந்தக் காட்சி, இன்னும் கொஞ்சம் நேரம் போனால் நமக்குக் கிடைக்காதே என்று இமை கொட்டாது பார்த்தாளாம். இந்த அழகை சேவிக்க வேண்டும், சேவிக்க வேண்டும் என்று இமை கொட்டுதல் இல்லாமல் அப்படி விசாலமாகக் கண்களைத் திறந்து வைத்துக் கொண்டு பார்த்தாளாம்.

பகவானுடைய வடிவழகை மறவாதார் பிறவாதாரே என்றார். 'அன்று நான் பிறந்திலேன்; பிறந்தபின் இறந்திலேன்...?' - 'அந்த எம்பெருமானுடைய விஷய ஞானம் ஏற்படாத வரையில் நான் பிறந்திலேன். இன்று அவன் குறித்து தெரிந்துகொண்டேன்; இன்றுதான் பிறந்தவனாவேன்' என்று அர்த்தம்.

எப்போது அவன் ஞானம் நமக்கு ஏற்படுகிறதோ, அப்போது மீதி மொத்தம் அவித்யை என்பது புரியும். பகவானைத் தவிர உலகிலே மீதி எத்தனை சாஸ்திரங்களை நாம் கற்றாலும், உயர்ந்த சாஸ்திரங்

ரொம்பவும் கஷ்டப்பட்டால், ''பாவம், அந்த ஆத்மா படாதபாடு படுகிறது'' என்கிறோம். ஓயாமல் சஞ்சலப்பட்டுக் கொண்டே இருப்பவரை, ''நிம்மதியில்லாத ஆத்மா'' என்கிறோம். 'காலமானார்'' என்று பேப்பரில் போடும் போது, ''அன்னாருடைய ஆத்மா சாந்தி அடையட்டும்'' என்று போடுகிறார்கள். இந்த



எல்லா இடத்திலுமே ''ஆத்மா'' என்ற பத ப்ரயோகம் ஸரியில்லை. ஆத்மா பாடும் படாது, நிம்மதி இல்லாமலும் இருக்காது, அது புதிதாக சாந்தி என்று ஒன்றை அடைய வேண்டியதுமில்லை.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

களாக அவை இருந்தாலும்; பகவத் ஞானத்தைத் தவிர மற்றைய ஞானம் அனைத்தும் அஞ்ஞானம்; அவித்யாதான்! - இப்படி உபநிஷத்தே சொல்லிவிடுகிறது.

எது ஞானம்? எது வித்யை என்று கேட்டால், ஸா வித்யா, உத்தமா வித்யா, வேத வித்யா, சமீவிதா - அவனை உணர்த்தும் படியான வேத வித்யைதான் உயர்ந்த வித்யை.

தெலுங்கிலே சொல்வதுண்டு: 'கோடி வித்யையை நாம் கற்றாலும் அது மொத்தம் பிரசாதத்துக்குத்தான்! வயிற்றுக்காகத்தான்.

ஆகையால் மற்ற வித்யைகளெல்லாம் வித்யைகளாகாது; அவித்யைதான்!

அந்த எம்பெருமானை உணர்வதற்கான உபகரணங்களை பகவானே கொடுத்திருக்கிறான். அவற்றை அவனை உணரவே பயன்படுத்த வேண்டும்.

**ஆ**த்மா இருக்கிறதே, ரொம்ப அணு அது.

உபநிஷத் இன்னொரு இடத்திலே சொல்கிறது - பசுவினுடைய வாலின் நுனியில் இருக்கிற ஒரு ரோமத்தை எடுத்துக் கொண்டு அதன் நுனியை நூறு கூறு போட வேண்டும்.

'போட முடியுமா? என்று கேட்கக் கூடாது. போட வேண்டும்! போட்டு, அதிலே ஒரு கூறு வருகிறது பாருங்கள், அதை மறுபடியும் நூறு கூறு போட வேண்டும்; அதை மறுபடியும் நூறு கூறு போட வேண்டும்; அதை மறுபடியும் நூறு... இப்படியே போட்டுக் கொண்டிருக்க வேண்டும். மிச்சம் ஒன்றுமே தெரியாது பாருங்கள்... அதுவரை கூறு போட்ட பிறகு என்ன தெரிகிறதோ... அதுதான் ஆத்ம ஸ்வரூபம்!

அப்படியானால், இந்த ஆத்மாவானது எத்தனை சிறியது என்பது தெரிகிறது பாருங்கள்! அணு, பரமாணு - இதையெல்லாம் காட்டிலும் ரொம்ப சிறியது ஆத்மா என்று காட்டுவதற்கே உபநிஷத் இதைச் சொல்கிறது.

அந்த ஆத்மாவுக்கு இருக்கிற அறிவு இருக்கிறது பாருங்கள். அது விபு! பரந்தும் விரிந்தும் இருக்கிறது அதன் ஞானம்!

ஞானத்தினால் பரந்து - விரிந்திருக்கிறது; ஆசாரத்திலே ரொம்ப சிறியது!

சுவாமிதேசிகன் சொல்கிறார் :

'நுண்ணியதாய், ரொம்ப சின்னதாய் இருக்கும் பாருங்கள், அதுதான் நான்!'

ஆத்மா இந்த சரீரத்திலே எங்கு வேண்டுமானாலும் சஞ்சரிக்கும். ஒரே இடத்தில் இங்கேயே உட்கார்ந்திருக்கும்; இல்லையானால் சரீரம் முழுவதும் சுற்றி வரும்.

ஆத்மா இருக்கிற வரையில் இதெல்லாம் சரீரத்தில் வேலை செய்கிறது - எங்கும் சஞ்சரிக்கக்கூடியது, ரொம்ப சிறியது, அறிவுடையது ஆத்மா.

ஆத்மா என்பது இந்த சரீரம் அல்ல. இது ஸ்தூலம். ஆத்மா சூக்ஷமம். அது எதற்காக இருக்கிறது என்று கேட்டால், விஷ்ணுவின் திருவடியிலே கைங்கர்யம் பண்ணுவதற்காகத்தான் இருக்கிறது! இந்த உலகத்திலே கைங்கர்யம் பண்ணுவதற்காக இந்த சரீரத்தைப் பகவான் கொடுத்திருக்கிறான்.

சரீரம் கீழே விழுகிறது. விழுந்தவுடனே ஆத்மா வெளியிலே கிடைக்கிறது. அப்போது இன்னொரு சரீரத்தை அதற்குக் கொடுக்கிறான். அதுதான் ஸ்தூல தேகம்.

சூக்ஷம தேகம், ஸ்தூல தேகம் என்று இரண்டு சொல்லப்படுகிறது.

'நெல்லுக்குள்ளே என்ன இருக்கிறது தெரியுமா?!' என்று சாதாரணமாகக் கேட்பார்கள். நெல்லுக்குள்ளே அரிசி இருக்கிறது என்று குழந்தைகள் பதில் சொல்கிறார்களா என்று பார்ப்பதற்காகக் கேட்பார்கள்.

நெல்லுக்குள்ளே அரிசி இருக்கிறது; ஒரு பெரிய தத்துவமும் அடங்கியிருக்கிறது.

(வளரும்)

# கோடை



ஒத்தப் பனைக்
கள் குடித்து
உடல் வளர்த்த தாத்தாவுக்கு
யாருக்கும் தெரியாமல்
பேரன்களுக்குக்
கள் கொடுப்பதில்
மீசை முறுக்கும்
சந்தோஷம்.

முந்தா நாள் பிறந்த
ஆட்டுக்
குட்டிகளுக்கெல்லாம்
பேரன்கள் பெயர்.
பொரித்து வந்த கோழிக்
குஞ்சுகள்
பேத்திகள் பெயரில் திரியும்

அவசரமில்லாத
அந்தக் கோடைகளில்
மகிழ்ச்சியை மட்டுமே
சம்பாதிப்போம்
விவரமறியாமல்.

இப்போதும் வருகிறது.

அலுவலக பைல்கள்
புரட்டுகையில்
அவ்வப்போது
தோட்டத்து வாசம்

மாநகர குடிநீர்
சுமந்து நடக்க
மாமரத்து நிழலின்
குளிர்ச்சி



பேரன்கள், பேத்திகள்
புடைசூழ
வீட்டுத் தோட்டத்து
வாசமடக்கி மர நிழலில்
தாத்தா சொல்லும்
கதைகளில் கரையும்
ஒவ்வொரு கோடையும்

அரைகுறை குளியல் முடித்து
கண்ணாடியில் முகம் பார்க்க
தாத்தாவின் முறுக்கு மீசை!

- ஏக்நாத்

ஊருக்குப் புதுசு!

# கால் டாக்ஸி!

ஒன்று போனால் ஒன்று வரும் என்று சும்மாவா சொன்னார்கள்? வெங்கடேஷ் விஷயத்தில் பாருங்களேன்... பாஸ்போர்ட் தொலைந்தது; 'கால் டாக்ஸி' பிறந்தது! தொலைத்த இடம் சிங்கப்பூர்! "ஐயோ... நான் பயணித்த நீலமும் மஞ்சளுமான டாக்ஸியிலேயே பாஸ்போர்ட்டை விட்டுவிட்டேன் போலிருக்கிறதே" என்று இவர் அலற, நிறத்தை வைத்து, அது சிங்கப்பூரில் ஓடும் 'கம்ஃபோர்ட் கால் டாக்ஸி'தான் என்பதை அனுமானித்து, உறவினர்கள் கண்ட்ரோல் டவருக்குப் ஃபோன் செய்ய, பதினைந்தாவது நிமிடம், வெங்கடேஷ் கையில் தொலைந்த பாஸ்போர்ட்!

ஏற்கெனவே சேலத்தில் பாரதி சூப்பர் மார்க்கெட், ஜுவல்லரி, அது இதுவென்று நடத்திக் கொண்டிருந்த வெங்கடேஷின் தொழில் மூளை சட்டென்று உசுப்பி விடப்பட, சென்னையில் பிறந்துவிட்டது 'பாரதி கால் டாக்ஸி'. பெங்களூரில் இதற்கொரு ஒன்றுவிட்ட தம்பி ஓடிக்கொண்டிருந்தாலும், வசதியிலும் சேவையிலும் சென்னையின் பாரதிதான் 'பெரியண்ணன்'!

முப்பத்தாறு கார்களுடன் (மாருதி வான்கள்), சென்ற நவம்பர் 10ம் தேதியன்று த.மா.கா. தலைவர் மூப்பனாரால் திறப்பு விழா செய்யப்பட்டது. இன்று ஐம்பத்து நான்கு வாகனங்களுடன் தினமும் 400 கஸ்டமர்களுக்கு 24 மணி நேர வேலை செய்யுமளவுக்கு வளர்ந்திருக்கிறது. இதன் டைரக்டர்களில் ஒருவரான சத்ய நாராயணாவைச் சந்தித்தோம்.

"ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு, இன்ன பட்ஜெட்டில் செல்ல வேண்டும் என்று திட்டமிட்டிருப்பவர்களுக்கு, 'பாரதி' மிகவும் சௌகரியமானது. இவர்கள் செய்ய வேண்டியதெல்லாம் சென்னை 8142233 என்ற நம்பருக்கு ஃபோன் செய்து, ஆபரேட்டரிடம் இன்ன நேரத்தில் இன்ன இடத்திற்குச் செல்ல டாக்ஸி வேண்டும் என்று சொல்ல வேண்டியதுதான். அந்த நேரத்திற்கு 15 நிமிடங்கள் முன்பே டாக்ஸி வந்து நிற்கும். மினிமம் சார்ஜ், 3.கி.மீ. வரையில் 30 ரூ; பிறகு ஒவ்வொரு கி.மீக்கும் 8 ரூ. இவை டாக்ஸியில் பொருத்தப்பட்டிருக்கும் எலக்ட்ரானிக் மீட்டரில் ஃப்ளாஷ் ஆகும்" என்று கால் டாக்ஸி செயல்படும் விதத்தை விவரித்தார்.

டாக்ஸியில் பொருத்தப்பட்டிருக்கும் மொபைல் ஃபோனில் அலுவலகத்திலிருப்பவர்கள் டிரைவர்களுடன் உரையாடிக் கொண்டே இருப்பதால், யார் எந்த நிமிடத்தில் எந்த இடத்தில் இருக்கிறார் என்பது தெரிகிறது. அதையொட்டி யாரை எங்கே அனுப்புவது என்பது நிர்ணயிக்கப்படுகிறது.

இனி "ஃபாரின்லல்லாம் கால் டாக்ஸி ரொம்ப கம்ஃபர்டபிள்..." என்று நீட்டி முழக்காமல், தாய்நாட்டிலேயே, தமிழ்நாட்டிலேயே... ஜஸ்ட் என்ஜாய்!

— ஜெயஸ்ரீ ராஜ்





• ராஜமாணிக்கம்





• சந்திரமோகன்

# கொங்கு மண்டலத்தில் கோடைக் காற்று!



• மாரியப்பன்

**கோ**வை மாவட்டத்தில் மொத்தம் பதினான்கு சட்டமன்றத் தொகுதிகள். மாவட்டம் முழுவதும் மக்களைப் பல்வேறு பிரச்னைகள் எதிர் நோக்கியுள்ளன. நிறைய பஞ்சாலைகள் மற்றும் சிறு தொழில்கள் மூடப்பட்டு விட்டதால் நகர்ப்புறங்களில் வேலை வாய்ப்புத் திண்டாட்டம், வறுமை. கட்டடத் தொழில் முன்பு போலில்லாததால் அதிலுள்ள தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பு குறைவு. மாதச் சம்பளம் வாங்குபவர்களைத் தவிர மற்ற நகர்ப்புற மக்களிடையே கடுமையான அதிருப்தி நிலவுகிறது. இது முதல்வருக்கு எதிரான நிலை என்று சொல்ல முடியாது. ஆனால் அ.தி.மு.க அணி, அந்த அதிருப்தியை ஆளும் கட்சிக்கு எதிராக மாற்றும் வாய்ப்பு இருக்கிறது. அதே போன்று பல்லடம் பகுதியில் விசைத்தறி தொழிலாளர்கள், நூல் விலை உயர்வு, துணிகளின் தேக்கம் ஆகியவற்றால் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

அத்துடன் கடுமையான குடிநீர்ப் பஞ்சம் வேறு. திருப்பூர் பகுதியில் சுற்றுச்சூழல் பாதிப்பு மற்றும் குடிநீர்ப் பிரச்னை. அவினாசி பகுதியில் அத்திக்கடவு குடிநீர்த் திட்டத்தை நிறைவேற்றாததால் மக்களிடையே வெறுப்பு. பொள்ளாச்சி, பொங்கலூர், கிணத்துக்கடவு, உடுமலைப்பேட்டை பகுதிகளில் தென்னை விவசாயிகள் கடுமையாக பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். எனவே மாவட்டம் முழுவதும் தி.மு.க அணிக்கு எதிரான நிலை காணப்படுவதாகச் சொல்கிறது அ.தி.மு.க அணி.

"விவசாயிகளுக்குச் சரியான விலை இல்லை; உற்பத்தியோ அதிகம். மக்களுக்கு அதனால் எந்தப் பயனும் இல்லை. இடையே கொள்ளையடிப்பவர்கள் யார் என்பதை மக்கள் புரிந்து வைத்திருக்கிறார்கள். சிமெண்ட் விலை உயர்வினால் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களுக்கு வேலை இல்லை. மூடிய பஞ்சாலைகள் திறக்கப்படவில்லை. இந்தத் தேர்தலில், பதினான்கு தொகுதிகளிலும் அ.தி.மு.க அணி வெற்றி வாகை சூடும்" என்கிறார் மாவட்ட எம்.ஜி.ஆர் மன்றச் செயலாளரான கோவை ராஜ மாணிக்கம்.

"இப்போது அரசுக்கு எதிரான அலை எதுவும் இல்லை. உழவர் சந்தை, கிராமங்களில் மினி பஸ் விட்டது மற்றும் சாலை வசதி ஆகியவற்றால் மக்கள் பயனடைந்திருக்கிறார்கள். தி.மு.க ஆட்சி மீது பெரிய அளவில் ஊழல் புகார் எதுவும் கிடையாது. ஆகவே, மக்கள் எங்கள் அணியைத்தான் ஆதரிப்பார்கள்" என்று நம்பிக்கைத் தெரிவிக்கிறார் பா.ஜ.க மாவட்டச் செயலாளர் ஆறுமுக சந்திர மோகன்.

"எங்களை அலட்சியப்படுத்த முடியாது. 1996ம் ஆண்டு தேர்தலில் நாங்கள் ஐயாயிரத்திலிருந்து இருபதாயிரம் வோட்டுக்கள் வரை பல்வேறு தொகுதிகளில் வாங்கியிருக்கிறோம். இந்த முறை எங்களுக்கு வாய்ப்பு கொடுப்பார்கள் என்று உறுதியாக நம்புகிறோம்" என்கிறார் மாவட்ட ம.தி.மு.க செயலாளர் மாரியப்பன்.

பதினான்கு தொகுதிகளில் குறைந்தபட்சம் பத்து தொகுதிகளில் தங்களுக்கு வெற்றி வாய்ப்பு நிச்சயம் என்கிறது தி.மு.க அணி. ஆனால் இது மிக அதிகபட்சமான எதிர்பார்ப்பு என்பது மக்களிடையே பேசிப் பார்த்தபோது புரிந்தது.

— ப்ரியன்

படங்கள்: ராஜன்

கிரிவலம் வருக!　　சிவாய நம!　　சிவனருள் பெறுக!

# சித்ரா பௌர்ணமியில்
# குடும்ப நலன் பெற, கிரிவலத் திருநாளில்
# திருஅண்ணாமலையில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!!

பேரன்புடையீர்! வணக்கம். தங்களின் எல்லா விருப்பங்களும் நிறைவேறவும், மங்கலம் உண்டாகவும் அருள்மிகு ஸ்ரீ அருணாசலேஸ்வரரிடம் பிரார்த்தனை செய்கிறோம்.

● எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய தென்னாடுடைய சிவபெருமான் தானே தன் திருவடி பதித்து அருட்கரம் நீட்டி திருவருள் புரிந்துவரும் திருஅண்ணாமலையில் பௌர்ணமி அன்று சந்திர பகவான் பதினாறு கலைகளுடன் பரிபூரணமாகப் பிரகாசிக்கிறான். அந்த அபூர்வ சக்திவாய்ந்த கிரணங்களைத் தங்களின் உடலில் ஏற்று கிரிவலம் வரும் இறை அடியார்களுக்கும், பக்தர்களுக்கும் மேலும் அங்குள்ள ஆதரவற்ற முதியோர்கள், உடல் ஊனமுற்றோர்கள், கண்பார்வையற்றோர்கள் ஆகிய அனைவருக்கும் பௌர்ணமி அன்று இரவு அன்னதானம் சிறப்பான முறையில் செய்யப்படுகிறது. இந்தப்புனித இறைபணியில் பங்குகொண்டு தாங்களும், தங்கள் சந்ததியினரும் எல்லாம்வல்ல ஸ்ரீ உண்ணாமுலை சமேத அண்ணாமலையாரின் அருட்பெரும் தெய்வீக அருளைப்பெற வேண்டுகிறோம்.

தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதை தெரிவித்தால் அதன்படி நாங்கள் பௌர்ணமி அன்று அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மன் படத்தையும் தங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

❖ பிறந்தநாள் ❖ திருமணநாள் ❖ முன்னோர்கள் திதி நாள் ❖ வாழ்க்கையில் உயர்வு ❖ தொழிலில் முன்னேற்றம் பெற
❖ நிரந்தர வேலை பெற ❖ கல்யாண பாக்கியம் பெற, நல்ல வரன் அமைய ❖ புத்திர/பிள்ளை பாக்கியம் பெற
❖ கணவன் - மனைவி இடையே ஒற்றுமை நிலவ ❖ கஷ்டங்களும், கடன்களும் எதிர்ப்பு இடையூறுகளும் நீங்க
❖ புதிய முயற்சிகளில் முன்னேற்றமும் வெற்றியும் உண்டாக ❖ புதிதாக தொழில் தொடங்க
❖ புதிதாக வீடு / மனை பெற ❖ வாகன யோகம் பெற ❖ நல்ல சிந்தனை பெற ❖ சிந்தனை வளம் பெருக
❖ உடல் ஆரோக்கியம் பெற ❖ நீண்ட ஆயுள் பெற ❖ தெய்வசக்தியுடன் திகழ ❖ குடும்ப ஒற்றுமை பெற
❖ உலக ஒற்றுமை பெற ❖ சமுதாய ஒற்றுமை பெற ❖ தேச ஒற்றுமைபெற ❖ எல்லா உயிர்களும் இன்புற்று வாழவும்.

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.2000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் நான்கு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் இருபது ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும், ஸ்ரீ அருணாசலேஸ்வரரின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று திருஅண்ணாமலையில் அன்னதானம் செய்து தொடர்ந்து இருபது ஆண்டுகளுக்கு பிரசாதமும் 'ஆன்மீகம்' மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெற வேண்டும் என்ற இறைசிந்தனையோடு ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

● நன்கொடை அனுப்பும் சிவநேசச்செல்வர்கள் (Aanmeeka Annadhana Charitable Trust Chennai - 4) என்ற பெயரில் Cheque /D.D/ M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். அன்னதான திருப்பணிகளை நடத்தும் இறைபணி சேவைகளாக 'ஆன்மீக அன்னதான அறக்கட்டளை' ஆற்றிவர தங்களது ஒத்துழைப்பை என்றும் பேரன்புடன் வேண்டுகிறோம்.


ஸ்ரீ அருணாசலேஸ்வரர்

*Cheque / D.D / M .O* அனுப்ப வேண்டிய முகவரி :

## ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

**AANMEEKA ANNADHANA CHARITABLE TRUST** (Regd.)

68, Nadu Street, Mylapore, Chennai - 600 004.

Tel : 4959302 Fax: (044) 4616311 E - Mail: siva siva @vsnl.net


ஸ்ரீ உண்ணாமுலையம்மன்

சிவாய நம! என்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒரு நாளும் இல்லை.

**வா**சலில் வந்து எட்டிப் பார்த்தான் மஞ்சளழகி என்கிற மஞ்சள்.

தூரத்தில் கங்கையம்மன் கோவில் அருகில் நடந்து வந்து கொண்டிருந்தான் மயில்சாமி. அவன் நடையை உற்று நோக்கினாள். தள்ளாட்டம்தான். "ஆளு நல்ல மப்புலேதான் வராரு! வந்த கையோட என்கிட்ட ஏதாச்சும் சண்டை பிடிப்பாரு. அடியும் குத்தும் எங்ஙன விழப் போவுதோ? எவ்வளவு விழப்போவுதோ? இந்தக் குடிகாரக் கடங்காரனை என் தலையிலே கட்டிட்டாரே எங் குடிகார அப்பன்" என்று சலித்தவாறே உள்ளே போனாள் மஞ்சள்.

மயில் வீட்டை அடைந்தான். வாசலில் இருந்தே, "யார் உள்ளே" என்று கூவிவிட்டுத்தான் உள்ளே நுழைந்தான். "என்னடி சமையல்" என்றான் மனைவியிடம். "எங்கே சமையல் - நீ கொணாந்து குடுக்கற துட்டை வாங்கிட்டுப் போய் கடையிலே அரிசி, உப்பு, புளி, பருப்பு, பதார்த்தம் வாங்கியாந்துதான் அடுப்பு மூட்டணும்" என்றாள் அவள்.

மடியைத் துழாவினான் அவன். சில்லறையும் அழுக்கடைந்த நோட்டுகளுமாக இருந்ததை அப்படியே வாரி அவளிடம் கொடுத்தான். அவள் அதை எண்ணினாள். 32 ரூபாயும் கொஞ்சம் சில்லரையும் இருந்தது. "ஏய் கழுதை" என்றான் அவன். "என்னய்யா புருஷா" என்றாள் அவள். "கழுதைக்குப் புருஷன் கழுதை தானேன்னு மறைமுகமா சொல்றியா" என்று கூறி அவளை ஓர் அறை விட்டான். எப்போதும் நடப்பதுதானே என்று அவள் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. பையைத் தூக்கிக் கொண்டு ராமலிங்கம் மளிகைக் கடைக்குப் புறப்பட்டான்.

மயில்சாமி பெயிண்டிங் வேலை செய்கிறான். தினம் 150 ரூபாய் பக்கமாகச் சம்பாதிக்கிறான். வரும் வருமானத்தை அப்படியே கொண்டு வந்து மனைவியிடம் கொடுத்தால் குடும்பம் எவ்வளவு மகிழ்வாக இருக்கும்? பாழாப் போன குடி. அவன் குடியைக் கெடுத்தது. சம்பாதிக்கற பணத்தில் பாதிக்கு மேல் நண்பர்களுடன் சேர்ந்து குடிப்பதிலே போய் விடுகிறது. வீட்டிற்கு வந்தால் மனைவியுடன் சண்டை. அடிதடி. மஞ்சளுக்கு உடம்பெல்லாம் தழும்பு.



**அ**வள் சமைத்துப் போட்ட கறிக் குழம்பு சோறை வயிறு நிறைய சாப்பிட்டு விட்டு நீண்ட ஏப்பம் விட்டான் மயிலு. பாயில் சாய்ந்தவன், "ஏடி மஞ்சளு! நமக்கு கண்ணாளம் கட்டி இம்போ வருஷமாவுது. ஏன்டி குழந்தைப் பொறக்கலை" என்று கேட்டான். "நான்தான் வேண்டாம்னு இருக்கேன்" என்றாள் அவள். "ஏன் புள்ளை வேணாம் உனக்கு?" என்று அவன் கேட்க, மஞ்சள் அவன் முகத்தில் அறைந்த மாதிரி, "நீ குடிச்சிட்டு வந்து என்னை அடிக்கற அடியிலே நான் சாவாம இருக்கிறதே அந்த கெங்கை அம்மன் செய்த புண்ணியம். புள்ளை ஏதாவது பிறந்து அதை நீ தண்ணி மப்புலே அடிக்க, அது செத்துக்கித்துப் போச்சுன்னா, உன்னை ஜெயிலுக்கல்லோ கொண்டு போயிருவாக. ஜெயில்லே இருக்கறவன் பொண்டாட்டியா இருக்கறதை விட ஒரு குடிகாரன் பொண்டாட்டியா இருக்கறது எவ்வளோ மேல் - புரியுதா!" என்றாள்.

மயில் தூங்கிவிட்டான்.

மறுநாள் - இருட்டுகிற சமயம்

என்றும் போல் அன்றும் குடித்து விட்டு வீட்டுக்கு வந்து கொண்டிருந்தான் மயிலு.



எதிர்ப்புறத்தில் பட்டம் விட்டுக் கொண்டே ஓடி வந்து கொண்டிருந்தான் பூபதி. குப்பத்துக் கழகச் செயலாளர் மகன் பூபதிக்கு வயது ஒன்பதாகிறது. காற்றாடி கவனத்தில் வந்த பையன் மயில் மீது வேகமாக மோதுகிறான். கோபம் கொண்ட மயில் பையனைப் பளார் பளார் என்று நான்கு அறை அடித்து விடுகிறான்.

அன்று இரவு – மணி எட்டு இருக்கும்.

"டேய் மயிலு! வாடா வெளியே" என்று குரல் கேட்டு, சமைத்துக் கொண்டிருந்த மஞ்சள் திரும்பிப்பார்த்தாள். வெளியே வந்த தன் கணவனை கழகச் செயலாளர் பனியனைப் பிடித்து உலுக்கியபடி, "ஏண்டா எம் மவனை அடிச்சே?" என்று கண்மண் தெரியாமல் அடிக்க ஆரம்பித்தான்.

**• முக்தா சீனிவாசன்**

இதைப் பார்த்துக்கொண்டிருந்த மஞ்சள் சும்மா இருந்தாள். என்னைத் தினம் அடிக்கறாரு இல்லை. இன்று ஊர் கையிலே நல்ல உதை படட்டும் என்று நினைத்தாள்.

ஆனால் சில வினாடிகளில் – மயிலின் ஒரு பல் உடைந்து ரத்தம் வந்த போது.

"யார்ராவன் என் புருஷனை அடிக்கறவன்" என்று அலறியபடி கையில் எரியும் விறகுக் கட்டையுடன் வெளியே ஓடி வந்தாள் மஞ்சள். "அவரு மேலே கையை வையு. உன்னை இந்தக் கொள்ளிக்கட்டையாலே கொளுத்திடறேன் பார்" என்று காட்டுக் கத்தலாகக் கத்தினாள்.

அதிர்ந்து போனான் கழகச் செயலாளன். பேசாமல் திரும்பி நடக்க ஆரம்பித்தான்.

மயிலைக் கைத்தாங்கலாக வீட்டுக்குள் தூக்கி வந்தாள் மஞ்சள்.

அடிபட்டு தன் கையில் ரத்தம் கசிவதைக் கண்ட அவன், தன் மனைவியிடம், "வலி தாங்கலை மஞ்சளு" என்றான்.

அப்போதுதான் அவள் கையைப் பார்த்தான் அவன். ஒரு வாரத்துக்கு முன்பு அவன் அவளை அடித்த அடியில் கை கிழிந்து ரத்தம் சொட்டியது. அந்த இடம் இப்போது காய்ந்து பொறுக்குத் தட்டியிருந்தது.

அவன் மனத்தை ஏதோ ஒன்று குடைந்தது. தன் நெற்றியில் கையை வைத்துப் பார்த்தான். ரத்தக் கரை பசபச என்று கையில் ஒட்டிக்கொண்டது. தன் மனைவியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான் மயிலு. நெற்றியிலும் அவன் அடித்த வடு! "இனிமேலே அடிக்க மாட்டேன் மஞ்சளு... ஒழுங்காயிருக்கேன்... மாரியாத்தா சத்தியமா..."

மஞ்சள் இதுவரை கேட்டிராத வார்த்தைகள்!

"என்ன மஞ்சளு அப்படிப் பார்க்குறே... நெசமாலும் குடிக்க மாட்டேன்! அடிக்க மாட்டேன்!..."

அந்த வார்த்தைகளை நம்பக் கூடாது என்பது மஞ்சளுக்கு தெரிந்தது. ஆனாலும் கேட்பதற்குச் சந்தோஷமாகவே இருந்தது. ○


UNLIKE THE REST OF YOU LOT..... THE GERMANS ARE VERY SOFT-SPOKEN!


The Sale of the Berlin Wall ... over a period of time...


NOT ALL GERMANS ARE TALL!





# டச் ஜெர்மனி!

இருபதாயிரம் கார்ட்டூன்களுக்கு மேல் போட்டிருக்கிறார் கார்ட்டூனிஸ்ட் பொன்னப்பா. ஜெர்மனியில், ஒரு பிரபல வெளியீட்டு நிறுவனம் இந்திய சுதந்திரப் பொன்விழா கார்ட்டூன் போட்டி நடத்தியபோது, உலக அளவில் பலர் பங்கேற்றாலும் முதல் பரிசு பெற்றது இவருடைய கார்ட்டூன்தான்!

அமெரிக்காவின் சிகாகோ பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. (கட்டடக் கலை) படித்துக் கொண்டிருந்த போது, கார்ட்டூன்கள் வரைய ஆரம்பித்தார் பொன்னப்பா. டைம்ஸ் ஆப் இந்தியா, இந்தியன் எக்ஸ்பிரஸ், இந்தியா டுடே, ரீடர்ஸ் டைஜஸ்ட் என்று இந்தியப் பத்திரிகைகளில் மட்டுமின்றி, பல்வேறு அயல்நாட்டுப் பத்திரிகைகளிலும் இவரது கார்ட்டூன்கள் பிரபலம்.

கடந்த ஆண்டு இறுதியில், ஜெர்மனியில் நடந்த ஒரு சர்வதேச கார்ட்டூன் போட்டிக்கான நடுவர்களுள் ஒருவராக இருந்து, சிறந்த கார்ட்டூன்களைத் தேர்ந்தெடுக்க அழைக்கப்பட்டார் பொன்னப்பா. ஜெர்மனிக்குப் போன பொன்னப்பா, சும்மா இருப்பாரா? ஜெர்மனியில் தாம் கண்ட காட்சிகளை 'நகைச்சுவையான பார்வையில் ஜெர்மனி' என்று கார்ட்டூன்களாய் வரைந்து விட்டார். அந்த கார்ட்டூன்களின் கண்காட்சி சென்னை மாக்ஸ் முல்லர் பவனில் அண்மையில் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தன. அவற்றிலிருந்து சில சித்திரங்கள்:-

தொகுப்பு: **கௌதம்ராம்**
படங்கள்: **யோகா**






# "கோடீஸ்வர வாழ்வை தரும் தேவதா உச்சாடனம்"

## பூஜா உபதேசம் (தபால் வழி போதனா முறை)

உடலில் மறைந்திருக்கும் ஒரு மாய சக்தியை தட்டி எழுப்பி அனைத்துஅஷ்டமாசித்துக்களையும் அடையும் பூஜை தான்- இந்த தேவதா உச்சாடனம். அன்றைய கால சித்தர்கள் பெய்யும் மழையை நிறுத்திடவும், பெய்யா மழையை பொழிய செய்யவும், இந்த பூஜையை உபயோகித்து செய்து காட்டி மனித சக்தியின் மகத்துவத்தை நிரூபித்தனர். ஈரேழு பதினான்கு லோகத்திலும், கோடீஸ்வரனாக வாழ குபேரனும் அதே குபேரத்துவம் அடைய விரும்பி இலங்கேஸ்வரனும் செய்து லக்ஷ்மிகடாக்ஷத்தை பெற்றதும் இந்த பூஜை செய்துதான் என்பது சாஸ்திர உண்மை.

தவறாமல் பூஜை செய்து மன ஒருமைபாட்டை வளர்த்துவிடில் கோடீஸ்வர செல்வம், குடும்ப உயர்வு, குழந்தை இல்லா குறை தீருவது, விவாக தடை நீங்குதல் போன்ற அனைத்து குறைகளையும் அடியோடு போக்கி அனைவரும் புகழும் ஒரு கோடீஸ்வரனாகியே தீரலாம்.

**காலை, மாலை பூஜை செய்யும் பழக்கம் நிச்சயம் இருக்க வேண்டும். பூஜா அருள்நிலை வரவிடாமல் தடுக்கும் - மது அருந்துதல், புகைபிடித்தல், பொடி, புகையிலை போடுதல் ஆகிய தீய பழக்கங்கள் சிறிதும் இருக்கவே கூடாது.**

இவ்விதம் தீயபழக்கமற்றவராயும் தினசரி இரண்டு வேளை பூஜை செய்பவராயும் இருப்பின் நிச்சயமாகஇந்த பூஜை வழியாக கோடீஸ்வரராவது உறுதி. ஏனெனில் இந்த பூஜை வழியாக நீங்கள் ஒரு கோடீஸ்வரர் ஆகும்'விதி' அமைப்பு இருந்தால்தான் இந்த விளம்பரம் உங்கள் கண்ணில்படும். உரிய தேதிக்குள் ஜாதக நகலுடன் மனு செய்து கொள்ளும் வாய்ப்பும் ஏற்படும். நிச்சயமாக தினசரி 2 வேளையும் தவறாது பூஜை செய்யும் பழக்கம் உள்ளவராயும், மது அருந்துதல், புகைபிடித்தல், பொடி, புகையிலை போடும் தீயபழக்கம் முற்றிலும் சிறிதும் இல்லாதவராயும் இருக்க வேண்டும். அவ்வித நிலையினர் மட்டுமே இதற்காக 11.06.2001 தேதிக்குள் ஜாதக நகலுடன் தேவதா உச்சாடனம் உபதேசம் பெற விரும்புகின்றேன் என்று எழுதி மனு செய்து கொள்ளவேண்டும். அத்தேதி கடந்துவிடில் மனு செய்து கொள்ள வேண்டாம். காரணம் இப்போது இந்த உபதேசம் பெற கடவுள் அருள் இல்லை என்று பொருள். இந்த விளம்பரத்தை பார்க்கும் சந்தர்ப்பமும் உரிய தேதிக்குள் ஜாதக நகலுடன் மனு செய்து கொள்ளும் வாய்ப்பு ஏற்படுமாயின் ஒரு குபேர வாழ்வை அடையும் 'விதி' அமைப்பு உடையவர் என்பது கடவுள் தீர்ப்பாகும்.

இந்த பூஜையை இன்றைய காலத்தில் அறிந்தவர் இல்லையோ என்ற நிலை ஏற்பட்டதை அறிந்து ஆன்மிக பெரியோர்கள் பலர் கேட்டுக்கொண்டதற்கிணங்க ஜாதக வடிவாக உரியவர்களை பரிசோதித்து இந்தபூஜையை உபதேசம் செய்து வருகின்றோம். இதுவரை உபதேசம் பெற்று பூஜையை தவறாமல் செய்தவர்கள் ஆச்சர்யப்படும்படியான நலனை அடைந்திருக்கின்றனர். பெண்களும் தவறாது பூஜையை செய்து பல பெரிய நலன்களை குடும்ப மேன்மைகளை பெற்றிருக்கின்றனர். எனவே பெண்களும் காலத்தே மனு செய்து கொள்ளலாம்.

இது தவிர, நாளைய நாட்களை சிறிதும் மாற்றமின்றிஅப்படியே அறிந்துகொள்ள உரிய முறையில்'ஜோதிடக்கலை'-யையும், பிறர் வழி பில்லி, சூன்யம், ஏவல், செய்வினைகளிலிருந்து தன்னையும் முழுமையாக காத்து பிறரையும் காப்பாற்றி மேன்மை தரும் 'மாந்திரீகத்தையும்' , முக்காலத்தையும் அறிந்து எவ்வியாதியுமின்றி உயிர் வாழ்ந்து அஷ்டமா சித்திகளையும் ஆண்டவனையும் அடையும் 'ஆழ்நிலை தியானத்தையும்', எவ்வித ஊனமுற்ற நிலை உடலில் இருப்பின் அனைத்தையும் நீக்கி சாதாரண உடல் நலம் அடைந்து அதிசய நிலையோடு ஆண்டு பலவாக வாழ வைக்கும் 'யோகாசனத்தையும்', ஆண்டவன் நாம் எடுக்கும் காரியங்கள் என்னவாகும் என்ற வெற்றி, தோல்விகளை ஆயிரமாயிரந்-தடவைகள் அறிவுறுத்தியும் அந்த சகுன சாஸ்த்ர பாஷை தெரியாமல் தீதுகளை தழுவுகின்றோமே அதனை அறிய உரிய 'ஆருடத்தையும்', எத்தகைய துர்பாக்கிய நிலையில் - வறுமையில் வாடும் நிலையில் இருப்போரையும் முழுமையான ஸ்ரீ லக்ஷ்மிகடாக்ஷத்தை பெற செய்து, கூட கோபுரம், வீடு, வாசல், கோடீஸ்வர செல்வம் பெற்று உலகில் உயர்வினை தவறாது அடையச் செய்யும் ஸ்ரீ லக்ஷ்மிகடாக்ஷத்தை அள்ளி தரும் 'பூஜா விதானம் 36' என்ற பூஜா பயிற்சியையும் பயில்விக்கின்றோம். 6 கலைகளுக்காக மனு செய்யலாம். இதனை கற்றிடவும் தீய பழக்கங்கள் இருக்கக்கூடாது.

**இவ்வித அரிய கலைகளை தமிழில் போதிக்கும் கலைக்கூடம் தமிழகத்தில் இது ஒன்றே.**

அரியன வாய்ப்பு, உரிய தகுதி பழக்க வழக்கம் இருப்பின் கற்றிடுங்கள்.
கடவுள் அருள் பெறுங்கள். எமது பூரண நல்லாசிகள்.



பிரபல ஜோதிடர், ஜோதிட ஆசிரியர்,

**ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி,**

இராஜயோக பயிற்சியாளர்,

பிளாட் எண்: 204, அண்ணா நகர், மதுரை - 625020

☎ 533412
650576

# பொன்னியின் செல்வன்

### எழுபத்து ஆறாம் அத்தியாயம்

## வடவாறு திரும்பியது!



ந்த நெடுங் கதையில் வரும் பாத்திரங்களில் சிலர் முன்னுக்குப் பின் முரணாகப் பேசியும் நடந்தும் வருவதை வாசகர்கள் கவனித்திருப்பார்கள். அதற்கு நாம் பொறுப்பாளிகள் அல்லவென்பதைத் தெரிவித்துக்கொள்கிறோம். மனித இயற்கை என்றைக்கும் ஒரே மாதிரி இருப்பதில்லை. சூழ்நிலையும் பல்வேறு சம்பவங்களும் அவர்களுடைய மனப்போக்கையும் நடத்தையையும் மாற்றுகின்றன. நேற்றைக்கு ஒருவிதமாகப் பேசி நடந்து கொண்டவர்கள் இன்றைக்கு முற்றும் முரணான முறையில் பேசுகிறார்கள்; நடந்து கொள்கிறார்கள்.

பெரிய பழுவேட்டரையர் இக்கதையின் ஆரம்பத்தில் ஒரு பெரிய இராஜரீகச் சதியாலோசனைக்குத் தலைவராயிருந்தார். இப்போது பலரறியத் தாம் செய்த குற்றத்தை எடுத்துச் சொல்லி அதற்குப் பிராயச்சித்தமாகத் தம் சிரசைத் தாமே துணித்துக் கொண்டு உயிரை விட விரும்பினார்.

பெரிய சம்புவரையர் இளவரசர் கரிகாலரின் உயிரற்ற உடலைக் கண்டதும் அடைந்த திக்பிரமையில், எப்படியாவது அந்தப் படுகொலைப் பழி தம் குடும்பத்தின் மீது சாராமற்போக

**அமரர் கல்கி**

வேண்டுமென்னும் கவலையினால், தமது பழைய மாளிகையையே எரிக்க முற்பட்டார். அந்தப் பழியை வேறு யார் தலையிலாவது சுமத்தி விட வேண்டும் என்று ஆவல் கொண்டு தம் மகனையும் அந்த முயற்சியில் ஏவி விட்டார். இப்போது குற்றம் தம் பேரில் சாரவில்லை என்று அறிந்தபிறகு, தம் அருமைப் புதல்வி வந்தியத்தேவன் பேரில் கொண்டிருந்த அன்பின் ஆழத்தை அறிந்த பிறகு, வேறுவிதமாகப் பேசலானார்.

இந்தக் கதையின் ஆரம்பத்தில் மூடு பல்லக்கில் மறைந்து வந்த போலி மதுராந்தகனையே உண்மை மதுராந்தகன் என்றும், அவனே பின்னால் உத்தம சோழ சக்கரவர்த்தியாகப் போகிறான் என்றும் வாசகர்கள் நம்பும்படியாக நாம் செய்திருந்தோம். கதைப் போக்குக்கு அது அவசியமாயிருந்தது. ஏன்? முதன்மந்திரி அநிருத்தருக்கு ஓரளவு பழைய இரகசியங்கள் தெரிந்திருந்த போதிலும், அவரும் மதுராந்தகரே முடி சூட்டப்பட வேண்டும் என்று கருதினார். அக் காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளின் முன்பின் விவரங்களை அவர் பூரணமாக அறிந்திருக்கவில்லை. ஆகையால், போலி மதுராந்தகர் கண்டராதித்தரின் புதல்வர் அல்லவென்றாலும் சுந்தர சோழருக்கும் மந்தாகினிக்கும் பிறந்த புதல்வர் என்று எண்ணினார். அதனால் அவரும் தடுமாற்றம் அடைந்து முன்னுக்குப் பின் முரணாக நடந்து கொள்ள வேண்டியதாயிற்று.

இந்தக் கதையிலேயே நேர்மையில் சிறந்தவர் என்றும், சத்திய சந்தர் என்றும் நாம் கருதி வந்த அருள்மொழித் தேவர் முன்னுக்குப்பின் முரணாகப் பேசியதை நாம் கடைசியாகப் பார்த்தோம். இத்தனை காலமும் தமக்கு அரசுரிமை வேண்டவே வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருந்தவர் இப்போது திடீரென்று தம் போக்கை மாற்றிக்கொண்டு, ''நானே முடிசூட்டிக் கொள்வேன்'' என்று பலர் அறியச் சொல்ல ஆரம்பித்து விட்டார். சமய சந்தர்ப்பங்கள்தான் அவருடைய இந்த மாறுதலுக்குக் காரணம் என்பதை நாம் எடுத்துக்காட்ட வேண்டிய அவசியம் இல்லை அல்லவா?



ஆம்; அருள்மொழித் தேவரின் வார்த்தைகள் அங்கிருந்தோர் அனைவரையும் வியப்பும் திகைப்பும் அடையச் செய்தன. அதே சமயத்தில், அவர்களுடைய மனத்தில் ஒரு நிம்மதியையும் உண்டாக்கின. சோழ சிங்காதனம் ஏறுவதற்கு எல்லா வகையிலும் தகுதியானவரும் உரிமையுள்ளவரும் பொன்னியின் செல்வர்தான் என்பதை அனைவரும் உள்ளத்தின் உள்ளே அந்தரங்கத்தில் உணர்ந்திருந்தார்கள். சோழ சாம்ராஜ்யத்தில் வாழ்ந்த மிகப் பெரும்பாலான மக்களின் விருப்பமும் அதுவே என்பதை அறிந்திருந்தார்கள். மக்களின் பொது விருப்பத்துக்கு விரோதமாக வேறொருவரைச் சிங்காதனம் ஏறச் செய்தால் அதனால் நேரக் கூடிய பின்விளைவுகள் எப்படியிருக்குமோ என்ற கவலையும் அவர்கள் மனத்தில் இருந்தது.

ஆனாலும் பல்வேறு காரணங்களினால் அங்கிருந்தவர்களில் யாரும் பொன்னியின் செல்வருக்கு முடிசூட்ட வேண்டும் என்று சொல்லத் துணியவில்லை.

இப்போது பொன்னியின் செல்வரே முன்வந்து ''நானே மகுடம் சூட்டிக் கொள்ளப்போகிறேன்; தங்கள் திருக்கரத்தினால் முடிசூட்ட வேண்டும்!'' என்று பெரிய பழுவேட்டரையரைப் பார்த்துக் கூறியதும், அனைவருடைய உள்ளத்திலும் அமைதியும் மகிழ்ச்சியும் உண்டாயின. "நல்ல முடிவு ஏற்பட்டு விட்டது; ஆனால் அந்த முடிவு செய்ய வேண்டிய தர்மசங்கடமான பொறுப்பு நம்மை விட்டுப் போய்விட்டது!'' என்று உவகையும் ஆறுதலும் அடைந்தார்கள்.

பொன்னியின் செல்வரிடம் குடி கொண்டு பிரகாசித்த அபூர்வமான காந்த சக்தியானது, அவர் எதிரில் அவருக்கு விரோதமாக யாரும் பேச முடியாமல் செய்தது என்பதை முன்னம் நாம் பார்த்திருக்கிறோம். ஏன்? வைர நெஞ்சம் படைத்த சின்னப் பழுவேட்டரையர்கூடப் பொன்னியின் செல்வரை



நேரில் கண்டதும் தலைவணங்கி அவருக்கு முகமன் கூறி வரவேற்றதை நாம் பார்த்தோம் அல்லவா?

பெரிய பழுவேட்டரையர் தம் உயிரைத் தாமே போக்கிக் கொள்ளும் முயற்சியைப் பொன்னியின் செல்வர் தடுத்து நிறுத்தியதை அறிந்தார். அவருடைய வார்த்தையின் பொருளையும் உணர்ந்தார். இளவரசரின் செயலும் சொற்களும் அவரது உள்ளத்தை நெகிழச் செய்தன. உணர்ச்சி மிகுதியினால் அவருடைய உடலும் நடுங்கியது. கண்களில் கண்ணீர் மல்கியது. நாத்தழுதழுத்தது.

ஒருவாறு மனத்தை விரைவில் திடப்படுத்திக்கொண்டு அவர் கூறினார்:- "சோழ குலத் தோன்றலே! பொன்னியின் செல்வ! தங்களுடைய சொற்கள் எனக்கு அளவிலா மகிழ்ச்சியை அளித்தன. தாங்களே முடிசூட்டிக் கொள்ள வேண்டும் என்று நான் தங்களை வேண்டிக் கொள்ள எண்ணினேன். சோழ குலத்துக்கே துரோகியாய்ப் போய்விட்ட எனக்கு அந்த வேண்டுகோள் விடுக்கவே உரிமை இல்லை என்று பேசாதிருந்தேன். தங்களுடைய பெரிய பாட்டனாரும் மகா புருஷருமான கண்டராதித்த சக்கரவர்த்தி ஓர் ஏற்பாடு செய்துவிட்டுப் போனார். தமது சகோதரர் வமிசத்தில் வந்தவர் சிங்காதனம் ஏற வேண்டும் என்று அந்த மகான் வற்புறுத்திக் கூறினார். அவர் செய்திருந்த ஏற்பாட்டுக்கு விரோதமாக நாங்கள் சிலர் காரியம் செய்ய எண்ணினோம். எங்களுக்குள் ஏற்பட்டிருந்த மாற்சரியத்தினால் அந்தச் சிவபக்த சிரோமணியின் விருப்பத்துக்கு மாறாக மதுராந்தகத் தேவருக்குப் பட்டம்

சூட்ட எண்ணினோம். தங்கள் தந்தையும் அதற்கு உடன்பட்டு விட்டார். நாங்கள் கருதியது நிறைவேறியிருந்தால், எவ்வளவு பெரிய விபரீதம் ஆகியிருக்கும் என்று எண்ணும்போது என் குலை நடுங்குகிறது! இளவரசே! தங்கள் தந்தை வீற்றிருக்கும் சோழ சிங்காதனத்துக்கு உரிமை பூண்டவர் தாங்கள்தான். சோழ சாம்ராஜ்யத்தின் மணிமகுடத்தை அணிவதற்குத் தகுதி வாய்ந்தவரும் தாங்கள்தான்! தாங்கள் சின்னஞ்சிறு பாலனாக இருந்த போது என் மார்பிலும் தோளிலும் ஏந்திச் சீராட்டியிருக்கிறேன். அப்போதெல்லாம் தங்கள் அங்க அடையாளங்களைப் பற்றியும் தங்கள் கரங்களை அலங்கரிக்கும் ரேகைகளையும் பார்த்து, 'இந்தப் பூமண்டலத்தையே ஆளும் மன்னாதி மன்னர் ஆகப் போகிறீர்கள்' என்று நானும் சொல்லிக்கொண்டிருந்தேன். ஓடத்திலிருந்து காவேரியின் வெள்ளத்தில் விழுந்து முழுகிப் போன தங்களைக் காவேரி அன்னை கரங்களில் ஏந்தி எடுத்துக் கொடுத்ததைப் பற்றி எத்தனையோ நூறு தடவை சொல்லி மகிழ்ந்திருக்கிறேன். இந்த மூன்று வருஷ காலத்திலே தான் காமக் குரோத மத மாற்சரியங்கள் என் மனத்தைக் கெடுத்துவிட இடங் கொடுத்துத் துரோகியாய்ப் போய்விட்டேன். பொன்னியின் செல்வ! தாங்கள் சோழ சிங்காதனம் ஏறி மணிமகுடம் புனைவது முறைமையானது; தகுதியானது. ஆனால் அந்த மணிமகுடத்தை எடுத்துத் தங்கள் சிரசில் சூடும் தகுதியை நான் இழந்துவிட்டேன்! என் கரங்களும் இழந்துவிட்டன! இந்தக் கரங்களினால் நான் இனி செய்யக்கூடிய புனிதமான காரியம் என் குற்றத்துக்குப் பரிகாரமாக என்னை நான் மாய்த்துக் கொள்வது தான்!"

"இல்லை, இல்லை! கூடவே கூடாது!" என்று அந்த மந்திராலோசனை சபையில் பல குரல்கள் எழுந்தன.



சுந்தர சோழர் உருக்கம் நிறைந்த குரலில் கூறினார்: "மாமா! இது என்ன வார்த்தை! இது என்ன காரியம்! தாங்கள் சோழ குலத்துக்கு அப்படி என்ன துரோகம் செய்துவிட்டீர்கள்? ஒன்றுமில்லையே? என்னுடைய குமாரர்களுக்குப் பதிலாக என் பெரியப்பாவின் குமாரரைச் சிங்காதனத்தில் அமர்த்த எண்ணினீர்கள். அது சோழ குலத்துக்கு எப்படித் துரோகம் செய்வதாகும்? என் புதல்வர்களைக் காட்டிலும் என் பெரிய தந்தையின் குமாரனுக்குச் சோழ குலத்து மணிமகுடம் புனைய அதிக உரிமை உண்டல்லவா? இப்போதுகூட, என் மனத்தில் உள்ளதைச் சொல்ல நீங்கள் அனுமதி கொடுத்தால்..."

முதன்மந்திரி அநிருத்தர் குறுக்கிட்டு, "பிரபு! இந்த நாடெங்கும் 'அருள்மொழி வர்மரே திருமுடி சூட வேண்டும்' என்ற குரல்கள் ஒலிக்கின்றன. இத்தனை நாளாக அஞ்ஞாத வாசம் செய்து வந்த கண்டராதித்த தேவரின் திருக்குமாரரும் அதே உறுதிகொண்டிருக்கிறார். பொன்னியின் செல்வரும் அதே முடிவுக்கு வந்துவிட்டார். இனி, அதற்கு மாறான யோசனை எதுவும் செய்வதில் பயன் ஒன்றுமில்லை!" என்றார்.

"நீங்கள் யாரேனும் அவ்வாறு யோசனை செய்தாலும் நான் ஒப்புக்கொள்ள முடியாது!" என்றார் சேந்தன் அமுதனாகிய மதுராந்தகத் தேவர்.

"என் மகன் கூறுவதுதான் சரி; இனி வேறு யோசனையே வேண்டியதில்லை!" என்றார் செம்பியன் மாதேவியார்.

"அன்னையே! தங்கள் வார்த்தைக்கு எதிர்வார்த்தை கூறக் கூடியவர் இங்கு யாரும் இல்லை. கடவுளின் விருப்பத்தின்படி நடக்கட்டும். ஆனாலும் பழுவூர் மாமா நம் குலத்துக்குத் துரோகம் செய்துவிட்டதாகக் கூறித் தம் உயிரை மாய்த்துக்கொள்ள விரும்புவது சரியில்லைதானே? தங்கள் திருக்குமாரருக்கு முடிசூட்ட



வேண்டும் என்று அவர் பிரயத்தனப்பட்டது சோழ குலத்துக்குத் துரோகம் செய்தது ஆகாது அல்லவா?'' என்றார் சக்கரவர்த்தி.

பெரிய பழுவேட்டரையர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு கூறலுற்றார்:- "ஐயா! கேளுங்கள்! என்னுடைய முயற்சி பலிதமாகியிருந்தால் எவ்வளவு பயங்கரமான விபரீதம் நடந்திருக்கும் என்பதைக் கேளுங்கள்! இதை நான் சொல்லாமலே என் உயிரை மாய்த்துக் கொள்ள விரும்பினேன். முக்கியமாக சோழ சாம்ராஜ்யத்தின் மேன்மையைத் தவிர வேறு எதையும் கனவிலும் கருதாதவனான என் சகோதரன் காலாந்தக கண்டனின் மனத்தைப் புண்படுத்தத் தயங்கினேன். ஆயினும் இப்போது என் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு உண்மையைச் சொல்லி விடத் தீர்மானித்து விட்டேன். சக்கரவர்த்தி! நாங்கள் மகான் கண்டராதித்தரின் குமாரர் என்று எண்ணிச் சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைப்பதற்கு இருந்தவன் சோழ குலத்துக்குப் பரம்பரைப் பகைவனான வீர பாண்டியனுடைய மகன்...!''

"ஐயையோ!'' "இல்லை!'' "அப்படி இருக்க முடியாது!'' என்றெல்லாம் அச்சபையில் குரல்கள் எழுந்தன.

"உங்களுக்கு நம்புவது கஷ்டமாகத் தானிருக்கும். என் காதினாலேயே நான் கேட்டிரா விட்டால் நானும் நம்பியிருக்க மாட்டேன். அரசர்க்கரசே! என்னுடைய அவமானத்தை நான் மீண்டும் சொல்லிக் கொள்ள வேண்டியிருக்கிறது. மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் நான் எந்தப் பெண்ணின் முக லாவண்யத்தைக் கண்டு மயங்கி மோக வலையில் வீழ்ந்து அவளை என் அரண்மனையில் சர்வாதிகாரியாக்கி வைத்திருந்தேனோ, அவள் வீர பாண்டியனுடைய மகள்! அவள் வாயினால் இதை ஆதித்த கரிகாலரிடம் சொல்லியதை நான் என் காதினால் கேட்டேன். வீர பாண்டியனை ஆதித்த கரிகாலர் கொன்றதற்குப் பழிக்குப் பழி வாங்கவே பழுவூர் அரண்மனைக்கு அவள் வந்திருந்தாள். அதற்குத்தான் சமயம் பார்த்துக்கொண்டிருந்தாள். அந்தப் பாதகியும் அவளுடன் சதி செய்தவர்களும் கரிகாலரைக் கொன்று விட்டு வீரபாண்டியனுடைய குமாரனையே சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்கத் திட்டமிட்டிருந்தார்கள். நம் குல தெய்வமான துர்க்காதேவியின் அருளினால் அத்தகைய கொடிய விபரீதம் நேராமல் போயிற்று. துர்க்கா பரமேசுவரி என் கண்களைத் திறப்பதற்காகவே அந்த வாணர்குலத்து வீரனை அனுப்பி வைத்தாள். அவன் மூலமாகவே இந்தப் பயங்கரமான இரகசியங்களை நான் அறிய முடிந்தது. இன்னும் சில செய்திகளை அவனிடம் நான் கேட்டறிய வேண்டுமென்று இருந்தேன். அவனை இந்த இளஞ்சம்புவரையன் கொன்று வடவாற்று வெள்ளத்தில் விட்டுவிட்டு வந்துவிட்டான்! நிர்மூடன்!''



ந்த வார்த்தையைக் கேட்டு அங்கிருந்தோர் அனைவரும் திகைத்துப் போய் நிற்கையில், கந்தமாறன் மட்டும், "ஐயா! எப்படியும் அந்த வந்தியத்தேவனும் சதிகாரக் கும்பலுடன் சேர்ந்தவன்தானே? அவனை நான் வேலெறிந்து கொன்றதில் குற்றம் என்ன?'' என்றான்.

பெரிய பழுவேட்டரையர் அவனைக் கோபமாகத் திரும்பிப் பார்த்தார். அச்சமயம் அநிருத்தர் குறுக்கிட்டு, "ஐயா! வாணர்குல வீரனைக் கொன்றுவிட்டதாக இவன் சொல்லுகிறான். அவ்வளவு தானே? இவன் வேலெறிந்து கொன்றவன் வந்தியத்தேவன் என்பது என்ன நிச்சயம்?'' என்று கேட்டார்.

பார்த்திபேந்திரன் சிறிது தணிவான குரலில், "வடவாற்று வெள்ளம் திரும்பி மேற்கு நோக்கிப் பாய்ந்து செத்தவனின் உடலைக் கொண்டு வந்தால், ஒருவேளை உண்மை வெளியாகும்!'' என்றான்.

"யார் கண்டது? வடவாற்று வெள்ளம் திரும்பிப் பாய்ந்தாலும் பாயலாம்!'' என்றார் முதன்மந்திரி அநிருத்தர்.

அவருடைய வாக்கை மெய்ப்

படுத்துவது போல் அடுத்தகணத்தில் சொட்ட நனைந்திருந்த ஈரத் துணிகளிலிருந்து தண்ணீர்த் துளிகளைச் சிந்தவிட்டுக் கொண்டு வந்தியத்தேவன் அந்த மந்திராலோசனை மண்டபத்தில் பிரவேசித்தான்! அவனுடைய முகத்தின் மிரண்ட தோற்றமும், அவன் உள்ளே வந்த அலங்கோலமான நிலையும், வெள்ளத்தில் மூழ்கி இறந்தவனுடைய உடல் ஏதோ ஒரு ஜால வித்தையினால் எழுந்து நடமாடுவது போன்ற பிரமையைப் பார்த்தவர்களின் உள்ளத்தில் உண்டாக்கியது.

''ஆகா! வடவாற்றின் வெள்ளம் திரும்பியே வந்துவிட்டது! இறந்தவனையே உயிர்ப்பித்துக்கொண்டு வந்து விட்டது!'' என்றார் முதன்மந்திரி அநிருத்தர்.

அச்சமயம் வந்தியத்தேவன் அங்கே அந்தக் கோலத்தில் எவ்வாறு வந்து சேர்ந்தான் என்பதை வாசகர்களுக்கு நாம் அறிவித்தாக வேண்டும்.

பொன்னியின் செல்வர், குந்தவை தேவி முதலியோர் தன்னைத் தனியே விட்டுச் சென்ற பிறகு வந்தியத்தேவன் மிக்க மனச்சோர்வு அடைந்திருந்தான். வீர தீரச் செயல்கள் புரிந்து உலகத்தையே பிரமிக்க வைக்க வேண்டும் என்னும் ஆர்வம் கொண்டிருந்தவனுக்குப் பலரும் தன்னைப் பார்த்துப் பரிதாபமும் அனுதாபமும் கொள்ளும் படியான நிலையில் இருந்தது சிறிதும் பிடிக்கவில்லை. பாதாளச் சிறையைக் காட்டிலும் இந்த அரண்மனை அந்தப்புரத்துச் சிறை கொடியதாக அவனுக்குத் தோன்றியது. பொன்னியின் செல்வரின் தயவினால் அவன் பேரில் கரிகாலரைக் கொன்ற குற்றத்தைச் சுமத்தாமலும் அதற்காகத் தண்டனை அளிக்காமலும் ஒருவேளை விட்டு விடுவார்கள். ஆனால், அரண்மனையில் உள்ளவர்களுக்கெல்லாம் அவனைப் பற்றி ஒரு சந்தேகம் இருந்து கொண்டுதானிருக்கும். அவனைக் களங்கம் உள்ளவனாகவே கருதுவார்கள். இளையபிராட்டி அவனிடம் காட்டும் இரக்கமும் அனுதாபமும் அவ்வளவுடன் நின்று விடும். சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தியாக முடிசூட்டிக் கொள்ளப் போகும் பொன்னியின் செல்வரின் திருத்தமக்கையாரைக் கைப் பிடித்து மணந்து கொள்வது கனவிலும் நடவாத காரியம். அரண்மனைப் பெண்கள் அவனை ஏதோ குற்றம் செய்து மன்னிப்புப் பெற்ற சேவகனாகவே மதித்து நடத்துவார்கள். அமைச்சர்களும் தளபதிகளும் அவனை அருவருப்புடன் நோக்குவார்கள். அரசகுலத்தினரின் சித்தம் அடிக்கடி மாறக் கூடியது. இளவரசர் அருள்மொழிவர்மர்தான் அவன் மீது எத்தனை நாள் அபிமானம் காட்டி வருவார் என்பது யாருக்குத் தெரியும்?

ஆகா! முதலில் அவன் உத்தேசித்திருந்தபடி சேந்தன் அமுதன் குடிசைக்கு அருகில் குதிரை மேல் ஏறியிருந்தால், இத்தனை நேரம் கோடிக்கரையை அடைந்திருக்கலாம். ஏன்? ஈழத் தீவுக்கே போய்ச் சேர்ந்திருக்கலாம். தான் வைத்தியர் மகனால் தாக்கப்பட்ட சமயத்தில் குதிரை மேல் ஏறிச் சென்றவர்கள் யாராயிருக்கும்? ஒருவன் 'பைத்தியக்காரன்' என்று பெயர் வாங்கிய கருத்திருமன். உண்மையில் அவன் பைத்தியக்காரனில்லை; சூழ்ச்சித் திறமை மிக்கவன். அவனுடன் சென்றவன் யார்? பழைய மதுராந்தகத் தேவரைக் காணோம் என்கிறார்களே? அவராக இருக்கலாம் அல்லவா? ஆம், ஆம்! அப்படித்தான் இருக்க வேண்டும்! அவர்கள் இருவரும் சேர்ந்து தப்பித்துச் செல்வதில் ஏதோ பொருள் இருக்கிறது. அந்த மதுராந்தகர் உண்மையில் யார் என்பது இங்குள்ளவர்களுக்குத் தெரிந்தால் எத்தனை வியப்படைவார்கள்? அவர்கள் இருவரும் பத்திரமாக ஈழ நாடு சேர்ந்து விட்டால், அதன் விளைவு என்னவாகும்? ஏன்? பாண்டிய நாட்டு மணிமகுடத்துக்கும் இரத்தின ஹாரத்துக்கும் உரியவன் அவற்றை அடைந்து விடுவான்! மகிந்தன் உதவியுடனே மறு

படியும் நாட்டை அடையப் போர் துவங்குவான்...! அப்படி நடவாமல் மட்டும் தடுக்க முடியுமானால்...? தடுக்கக்கூடிய ஆற்றல் உடையவன்தான் ஒருவன்தான்! இங்கே இந்த அரண்மனை அந்தப்புர அறையில் ஒளிந்து உயிர் வாழ்வதில் என்ன பயன்?



வாறெல்லாம் என்ணமிட்டுக்

கொண்டு வந்தியத்தேவன் அந்த அறையில் அங்கு மிங்கும் வட்டமிட்டு உலாவிக்கொண்டிருந்தான். அடிக்கடி அந்த அறையின் ஒரு பக்கத்துச் சுவரில் இருந்த பலகணியின் ஓரமாக வந்து நின்று ஆவலுடன் வெளியே பார்த்தான். அரண்மனையின் ஒரு கோடியில் இருந்த மேல் மாடத்து அறையில் அவன் இருந்து வந்தான். அதையொட்டி வடவாறு சென்று கொண்டிருந்தது. அங்கே அரண்மனையின் வெளிச்சுவரே தஞ்சைபுரிக் கோட்டையின் வெளிச் சுவராகவும் அமைந்திருந்தது. அந்தப் பலகணி வழியாகக் கீழே குதித்தால் வடவாற்று வெள்ளத்தில் குதித்து விடலாம். அல்லது செங்குத்தான சுவரின்வழியே சிறிது பிரயத்தனத்துடன் இறங்கியும் வடவாற்று வெள்ளத்தை அடையலாம். அந்த மேன்மாடத்துக்குக் கீழே அரண்மனைப் பெண்டிர் நதியில் இறங்கிக் குளிப்பதற்காக வாசலும் படித்துறையும் இருந்ததாகத் தோன்றியது. மேன்மாடத்திலிருந்து கீழே சென்று அந்த வாசலை அடைவதற்கு வழி எப்படி என்று தெரியவில்லை. அந்தப்புரத் தாதிமார்களுக்கும் அரசிளங்குமரிகளுக்கும் அது தெரிந்திருக்கும். அவன் தப்பிச் செல்வதாயிருந்தால், அவர்கள் அறியாமல் அல்லவா செல்ல வேண்டும்...?

பலகணி ஓரத்தில் நின்று அவன் இவ்வாறு சிந்தித்துக்கொண்டிருந்தபோது, சற்றுத் தூரத்தில் தோன்றிய ஒரு காட்சி அவனைத் திடுக்கிடச் செய்தது.

அவன் இருந்த அரண்மனைக்கு அடுத்த அரண்மனைத் தோட்டத்தில் ஒரு பெண் தலைவிரி கோலமாகப் பித்துப்பிடித்தவள் போல் ஓடிக் கொண்டிருந்தாள். ஆகா! அது பெரிய பழுவேட்டரையரின் அரண்மனைத் தோட்டம் போல அல்லவா இருக்கிறது! ஆம், ஆம்! அந்தத் தோட்டந்தான்! அதில் பித்துப் பிடித்தவள் போல் ஓடுகிற பெண் யார்? ஈசுவரா! மணிமேகலை போல் அல்லவா இருக்கிறது? அவளுக்கு என்ன நேர்ந்து விட்டது? எதற்காக அப்படி ஓடுகிறாள்....? கரிகாலர் மரணம் அடைந்த அன்றிரவு கடம்பூர் மாளிகையில் அவள் அவனுக்குச் செய்த உதவிகள் எல்லாம் நினைவுக்கு வந்து அவனுடைய நெஞ்சு விம்மும்படிச் செய்தன! அவளுக்குப் பின்னால், அவளைத் தொடர்ந்து பிடிப்பதற்காக ஓடுகிறவர்களைப் போல் இன்னும் இரு முதிய ஸ்திரீகள் ஓடினார்கள். ஆனால் அவர்கள் வர வரப் பின்தங்கி வந்தார்கள். மணிமேகலையை அவர்கள் பிடிப்பது இயலாத காரியம்! அதோ அவள் வெளிமதில் சுவரண்டை வந்து விட்டாள். சுவர் ஓரமாக வளர்ந்திருந்த ஒரு மரத்தைப் பிடித்துக்கொண்டு மதில் சுவரின் மேல் ஏறிவிட்டாள்! ஐயோ! என்ன காரியம் செய்கிறாள்? அவள் கையிலே ஒரு சிறிய கத்தி மின்னுகிறதே? அதனால் என்ன செய்யப் போகிறாள்? கடவுளே! மதில் சுவரிலிருந்து தலைகுப்புற நதியின் வெள்ளத்தில் விழுந்து விட்டாளே!

முன்னொரு சமயம் வீர நாராயண ஏரியில் மணிமேகலையும் நந்தினியும் தண்ணீரில் முழுகும் தறுவாயிலிருந்ததும், அவன் மணிமேகலையை எடுக்க முதலில் உத்தேசித்துப் பிறகு நந்தினியைத் தூக்கிக் கரை ஏற்றியதும், அதனால் மணிமேகலை அடைந்த ஏமாற்றமும் அந்த ஒரு கண நேரத்தில் வந்தியத்தேவனுடைய மனத்தில் குமுறிப் பாய்ந்து வந்தன.

அதற்கு மேலே அவனால் சும்மா நிற்க முடியவில்லை. அரண்மனை மேல் மாடத்திலிருந்து பலகணியின் வழியாக வெளிவந்து ஆற்று வெள்ளத்தில் குதித்தான்.

சில மணி நேரம் மூச்சுத் திணறிப் பின்னர் சமாளித்துக்கொண்டு நாலாபுறமும் பார்த்தான். ஆம்; அவன் குதித்த இடத்துக்கு அருகாமையில் படித்துறை மண்டபமும் அதற்கு உள்ளிருந்து வரும் வாசலும் காணப்பட்டன. அதற்கு எதிர்த் திசையிலேதான் சற்றுத் தூரத்தில் மணிமேகலை மதில் மேலிருந்து கீழே குதித்தாள். நல்லவேளையாக, ஆற்று வெள்ளம் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. மணிமேகலையும் வெள்ளத்தில் மிதந்து வந்தால், அவனை நோக்கித்தான் வர வேண்டும்.

தட்டுத் தடுமாறி நதியின் கரை யோரத்தை வந்தியத்தேவன் அடைந்தான். ஆற்று வெள்ளத்தை எதிரிட்டுக் கொண்டு விரைவாக நடந்து சென்றான். ஆகா! அதோ மணிமேகலை மிதந்து வருகிறாள்! அவள் உடம்பில் உயிர் இருக்கிறதா? அல்லது அது உயிரற்ற உடம்பா? ஐயோ! மறுபடியும், தன்னிடம் அன்பு கொண்டவர் ஒருவரின் உயிரற்ற உடம்பைச் சுமந்து செல்லும் துர்ப்பாக்கியம் தனக்கு ஏற்பட்டு விடுமோ! அடடா! அந்தப் பெண் தன்னிடம் எவ்வளவு அன்பு வைத்திருந்தாள்? வீர நாராயணத்து ஏரிக்கரை மண்டபத்தில் அவள் யாழ் வாசித்துக் கொண்டு பாடிய பாட்டின் தொனி, வெள்ளத்தில் அவள் உடல் மிதப்பது போலவே காற்றிலே மிதந்து வந்தது. வந்தியத்தேவனுக்கு அது அளவில்லாத வேதனையை அளித்தது!

அந்த வேதனையை எப்படியோ சகித்துக்கொண்டு வெள்ளத்திலே பாய்ந்து சென்று மணிமேகலையை இரு கரங்களினாலும் தூக்கி எடுத்துக்கொண்டான். தெய்வங்களே! இந்தப் பெண்ணின் உயிரைக் காப்பாற்றிக் கொடுங்கள்! சோழ நாட்டிலுள்ள ஒவ்வொரு ஆலயத்துக்கும் சென்று ஒவ்வொரு சந்நிதியிலும் தரையில் விழுந்து கும்பிடுகிறேன். சிவன் கோயில், விஷ்ணு கோயில், அம்மன் கோயில், அய்யனார் கோயில் எல்லாவற்றுக்கும் சென்று ஒவ்வொரு தெய்வத்துக்கும் நன்றி செலுத்துகிறேன். சூது வாது அற்ற இந்தச் சாதுப் பெண்ணின் உயிரை மட்டும் காப்பாற்றிக் கொடுங்கள்...!

இவ்வாறு மனத்துக்குள் பல்வேறு தெய்வங்களையும் பிரார்த்தித்த வண்ணமாக வந்தியத்தேவன் மணிமேகலையைப் படித்துறையில் கொண்டு வந்து சேர்த்தான். ஏற்கெனவே ஈட்டிக் காயத்தினால் மரணத்தின் வாசலிலிருந்து திரும்பி வந்தவன் நதி வெள்ளத்தில் திடீரென்று குதித்த அதிர்ச்சியினால், மேலும் பல வீனமுற்றிருந்தான். நீரில் மூழ்கியதனால் கனத்திருந்த மணிமேகலையைத் தூக்கிக் கொண்டு நதியில் நடந்தபோது அவனுக்கு மூச்சு வாங்கியது. அவளை மேலும் தூக்கிக்கொண்டு நடப்பது இயலாத காரியமாகத் தோன்றியது. எனவே படித்துறையின் மேல்படி அகலமாக இருந்ததைப் பார்த்து, அதன்பேரில் மணிமேகலையைப் படுக்க வைத்தான்.

பின்னர் என்ன செய்வது என்று ஒரு கணம் யோசித்தான். மணிமேகலையின் உடம்பில் இன்னும் உயிர்க்கனல் இருந்தது. ஆனால் அவளை மூர்ச்சை தெளிவித்து உயிர்ப்பிக்கும் காரியம் தன்னால் ஆகக் கூடியதில்லை. உடனே, யாராவது ஒரு பெண்ணின் உதவி தேவை. அரண்மனைக்குள் சென்று அங்கிருந்து யாரை யாவது அழைத்து வர வேண்டும்.

படித்துறைக்கு அரண்மனைக்குள்ளேயிருந்து வருவதற்காக அமைந்த வாசல் அவன் கண்முன் காணப்பட்டது. அதன் அருகில் சென்று சாத்தியிருந்த கதவின் பேரில் தன் உடம்பில் மிச்சமிருந்த பலம் முழுவதையும் பிரயோகித்து மோதினான். அதிர்ஷ்டவசமாகக் கதவின் உட்புறத் தாழ்ப்பாள் தகர்ந்து கதவு திறந்து கொண்டது. திறந்த கதவின் வழியாகப் புகுந்து ஓடினான். சிறிது தூரம் அது குறுகிய பாதையாகவே இருந்தது. பின்னர், தாழ்வாரங்களும் முற்றங்களும் வந்தன. அங்கேயெல்லாம் யாரையும் காண வில்லை. "இங்கே யாரும் இல்லையா?" "ஒரு பெண்ணைக் காப்பாற்றுவதற்கு யாரும் இல்லையா?" என்று அலறிக் கொண்டே அங்குமிங்கும் ஓடினான். கடைசியாக, ஒரு பெரிய மண்டபத்தின் வாசலில் சேவகர்கள் இருவர் அவனை வழி மடக்கி நிறுத்த முயன்றார்கள். அவர்களை மீறித் தள்ளிக்கொண்டு உள்ளே புகுந்தான். அங்கே சக்கரவர்த்தி உன்னதமான சிங்காதனத்தில் அமர்ந்திருப்பதையும் ஆடவர்கள், பெண்டிர்கள் பலர் சூழ்ந்து நிற்பதையும் கண்டு திகைத்துப் போனான். முதலில் அவன் கண்களில் எதிர்ப்பட்ட பெண்மணி பூங்குழலி என்று தெரிந்துகொண்டதும், அவனுக்குச் சிறிது தைரியம் உண்டாயிற்று. "'சமுத்திர குமாரி! சமுத்திரகுமாரி! மணிமேகலை ஆற்றில் விழுந்துவிட்டாள். உடனே வந்து காப்பாற்று!" என்று அலறினான்.

(தொடரும்)

# சாதனை+



• இன்பத்தமிழன்



• கருப்பசாமி பாண்டியன்



• மினி பஸ்ஸில் தளவாய் சுந்தரம்

வேட்பாளர் அறிவிக்கப்படாமலேயே பிரசாரம். சின்னம் கிடைக்காமலேயே வாக்கு சேகரிப்பு, அதிரடியாகப் போட்டி வேட்புமனு தாக்கல் செய்திருக்கும் அதிருப்தி கோஷ்டிகள். சீட்டிங் செய்யப்பட்ட சிட்டிங் எம்.எல்.ஏக்களின் ராவடி. தந்தையை எதிர்த்து மகன். குருவை எதிர்த்து சீடர். தேர்தல் கமிஷனுக்குப் பயந்து, எண்ணி எண்ணி சின்னம் வரையும் அரசியல் அடக்கம். இப்படி ஆச்சர்யங்களும் வேடிக்கைகளும், சோகமும், சுயநலமும் வழக்கத்தை விட அதிகமாக மலிந்து கிடக்கும் இந்தத் தேர்தலில் தென்னக விஐபிகள் தேறுவார்களா?

சாதனைகளும் பிரச்னைகளும் இரண்டாவது இடத்திற்குத் தள்ளப்பட்டு, அடுத்த முதல்வர், கருணாநிதியா, ஜெயலலிதாவா என்பதற்கே அதிக முக்கியத்துவம் தரப்போவதாகச் சொல்கிறார்கள் தென்னக வாக்காளர்கள். ஜாதி ரீதியாக, வலிந்து கூறு போடப்பட்டிருக்கும் வாக்காளர்கள், வேட்பாளர் எந்த ஜாதிக்காரர், அவர் எப்படிப்பட்டவர் என்பதையும் கவனமாகக் கேட்டுத் தெரிந்து வைத்திருக்கிறார்கள்...

நாம் சென்று வந்த சில தொகுதிகளின் நிலவரம் இதோ :

## "பாலம் கட்டிட்டா பசி தீருமா?"

தமது சொக்கிக்குளம் வீட்டில் பிரசார டென்ஷனின்றி



லுங்கியுடுத்தி ஓய்வாயிருக்கிறார் பழனிவேல் ராஜன் மதுரை மேற்கு தி.மு.க வேட்பாளர். "முந்நூறு கோடி ரூபாய்க்கும் அதிகமாக மதுரை மாநகரில் வளர்ச்சிப் பணிகள் செய்து முடித்துள்ளோம். மக்களுக்குத் தெரியும். பார்த்து வோட்டுப் போடுவார்கள்..." என்கிறார்.

எதிரணி வேட்பாளர் அ.தி.மு.க. வளர்மதி. "ஏழைகளை மதிக்காதவர் பழனிவேல் ராஜன். நெசவாளர்களின் உற்பத்தி அப்படியே தேங்கிக் கிடக்கிறது. மேற்கு பகுதி ஏழை மக்களுக்கு இன்னமும் நிலப்பட்டா தரவில்லை... நாங்கள் வெற்றி பெற்றால் இதைத்தான் முதலில் சரிசெய்வோம்..." என்று பி.டி.ஆரின் சாதனைப் பட்டியலுக்கு எதிர்ப் பட்டியல் படிக்கிறார்.

"பாலம் கட்டினால் எங்களுக்கு என்னய்யா போச்சு...? வயிற்றுப்பாட்டுக்கு வழி பண்ணுங்க!" என்று சபாநாயகரிடம் சண்டை பிடிக்கும் 'மூட்'இல் உள்ளனர் செல்லூர், கரிமேடு, மீனாட்சிபுரம் பகுதி வாக்காளர்கள். உதயசூரியனை இவர்கள் புறக்கணித்தாலும், அனேகம் மதுரைக்காரர்களுக்கு மேயர் குழந்தைவேலுவிடம் (தி.மு.க.) நிறைய அதிருப்தியிருந்தாலும்



• ஒச்சாதேவர்

# ஜாதி = ஜோட்டு!

சபாநாயகருக்கே இத் தொகுதியில் வெற்றி வாய்ப்புகள் அதிகம். மு.க. அழகிரி பேரவை, வாக்குகளைப் பிரிப்பதற்காகவே வேலை செய்வதால் சென்ற முறையைக் காட்டிலும் குறைந்த வாக்கு வித்தியாசத்தில்தான் பி.டி.ஆர். ஜெயிப்பார் என்கிறார்கள்.

## மூக்குடைபடுமா மூ.மு.க....?

அ.தி.மு.க. வேட்பாளர் காளிமுத்து என்னும் போது, திருமங்கலம் தொகுதியின் தி.மு.க. அணி வேட்பாளரும் 'ஹெவி வெயிட்'டாக இருக்க வேண்டாமோ...? அதுதான் இல்லை! மூவேந்தர் முன்னேற்றக் கழகத்துக்கு (மூ.மு.க.) இத்தொகுதியை ஒதுக்கியுள்ளது தி.மு.க. இவ்வமைப்பின் பொருளாளர் ஒச்சாதேவர்தான் வேட்பாளர். தேவர் இன வாக்குகளே இப்பகுதியில் அதிகம். தலித் கட்சிகளும் இப்போது தி.மு.க.



தாமரைக்கனி

• மனோஜ்பாண்டியன்



கூட்டணியில் இருப்பதால் தேவர் வாக்குகளுடன் தலித் வாக்குகளையும் பெற்று விடலாம் என்பது தலைமையின் கணக்கு. இதற்கிடையே மூ.மு.கவில் சிலர் தி.மு.க. கூட்டை எதிர்ப்பதாகவும் அதனால் அக் 'கட்சி'(?) பிளவுபட்டுவிட்டதாகவும் அ.தி.மு.க. அணியினர் கிளப்பி விடப் பார்க்கிறார்கள்!

இந்த சில்மிஷமெல்லாம் இன்றியே காளிமுத்து, வாக்காளர்கள் ஆதரவைப் பெற முடியும். இளைஞர்களும் பெண்களும் 'அவர் மந்திரியானா நிறையச் செய்வார்' என்று நம்புகிறார்கள்.



• சுரேஷ் ராஜன்

நாம் சென்ற போது, 'உதய சூரியன் சின்னம் கிடைக்குமா?' என்று எதிர்பார்த்துக் காத்திருந்தனர் மூ.மு.கவினர். இத் தொகுதியில் அவர்கள் பெறக்கூடிய வாக்குகள் எண்ணிக்கை, சின்னத்தைப் பொறுத்தது தான்.

## வில்லிபுத்தூர் வீதி நாடகம்!

தாமரைக்கனி இன்பத்தமிழனை நோக்கி "நீயும் நானுமா?" பாடும் தொகுதி! அப்பா பேரில், ஸ்ரீவில்லிபுத்தூர் நகர வாக்காளர்களுக்கு அதிருப்தி இருக்கிறது.

"இவருக்குத்தான் வயசாச்சே! கம்முனு போக வேண்டியதுதானே!"

"நிறைய காசு சேர்த்துட்டார்ங்க..." போன்ற கோப விமர்சனங்கள் தாமரைக்கனிக்கு எதிராக. ஆனால் கிராமப் பகுதிகளில் இவருக்கு இன்னமும் செல்வாக்கு கோலோச்சுகிறது.

இன்பத்தமிழனுக்கு எதிரணி வேட்பாளர் பி.ஜே.பியைச் சேர்ந்த மோகன் ராஜுலு. நாயகர் வகுப்பு. தலித், யாதவ, நாடார், இத்யாதி வகுப்பினரின் ஆதரவு இவருக்குக் கிடைத்தாலும் தேவர் இன வாக்குகள் இன்பத்தமிழனுக்குத்தான் என்கிறார்கள்.

ஆனால் இன்பத்தமிழன் நாடார் இனத்தைச் சேர்ந்தவரல்லவா...?

"அதனால் பரவாயில்லை... தலித்கள் ஆதரிக்கும் அணிக்கு எதிரான அணிக்குத்தான் எங்க வோட்டு" என்று தேவர் இனத்தினர் இந்தத் தொகுதியில் குளுரைக்கிறார்கள்!

தாமரைக்கனி, வாக்குகளைக் கணிசமாகப் பிரிக்கப் போகிறார் என்பதால் வெற்றி யாருக்கு என்பதில் உறுதியில்லை. ஆனால் இந்தத் தொகுதியில் அப்பா, மகனை 'வீட்டுக்கு அடங்காத பிள்ளை' என்று ஆரம்பித்து வக்கணையாக வசவுகளைப் பொழிவது ஒரு பவர்ஃபுலான வீதி நாடகம்!

## "அம்மான்னா சும்மா இல்லேடா!"

ஆறு மாதங்கள்தான் ஆகிறது




• தாமரைக்கனியின் சுவர் விளம்பரம்

அ.தி.மு.க. வை விட்டு தி.மு.கவுக்கு வந்து – ஆனால் கருப்பசாமி பாண்டியன் தென்காசி வேட்பாளராக்கப்பட்டிருக்கிறார். அ.தி.மு.க விலிருந்த போது மாவட்ட நிர்வாகியாக இவர் ஆற்றிய பணிகள் இவரை இப்பகுதியில் வெற்றிபெறச் செய்யும் என்று நம்புகிறது தி.மு.க. தலைமை. எடுத்த காரியத்தை முடித்துக் காட்டும் செயல் வீரர் என்று தொகுதி மக்கள் இவரைக் கொண்டாடுகிறார்கள். தி.மு.க. ஜெயித்தால் அமைச்சராகிவிடுவார் என்று நம்புகிறார்கள்; அதனால் இவரை ஜெயிக்க வைக்க விரும்புகிறார்கள்.

தேவர் சமூகத்தவர் என்றாலும் 'பேதம் பாராமல் கலந்து பழகும் க. பாண்டியனுக்குத்தான் வெற்றி என்பது இங்கே கேபிள் டீ.வி. ஆபரேடர்களின் கணிப்பு!

தொகுதியின் தேவையறிந்து இந்த வேட்பாளர் அறிவித்திருக்கும் வாக்குறுதிகளே அவருடைய ஈடுபாட்டை உணர்த்துகின்றன என்கிறார்கள். உம் : தென்காசி ரயில்வே கேட்டருகே மேம்பாலம், வாஞ்சிநாதன் பெயரில் கல்லூரி, விளையாட்டு அரங்கம்... இத்யாதி.

எதிரணியின் வேட்பாளர் அண்ணாமலைக்கும் செல்வாக்கு உண்டு. அடிமட்டத்திலிருந்து ஹோட்டல் தொழில் செய்து உழைத்து முன்னுக்கு வந்து எளிமையாக வாழ்பவர். ஆனால் சொந்த ஊரான ஆலங்குளத்தில் இருக்கக்கூடிய செல்வாக்கு இங்கே தென்காசியில் இருக்காது என்கிறார்கள்.

எனினும் கருப்பசாமி பாண்டியனைச் சுலபத்தில் ஜெயிக்கவிட மாட்டார் அண்ணாமலை என்றே தோன்றுகிறது. க. பாண்டியனுக்கு எதிர்பாராத போனஸாகக் கிடைத்திருப்பவை, பி.ஜே.பிக்குக் கட்சி மாறிய சிட்டிங் எம்.எல்.ஏ. ரவி அருணனின் ஆதரவும் முஸ்லிம் முன்னேற்றக் கழகத்தின் திடீர் தி.மு.க. ஆதரவும்தான். மு.மு. கழகம் இரட்டை இலைச் சின்னத்தை அழித்து விட்டு உதயசூரியனை வரைந்து கொண்டிருக்கிறது இந்தத் தொகுதியில்!

எதிரணியின் சுவர் வாசகம் "அம்மான்னா சும்மாயில்லேடா!" என்று அதட்டி அலறுகிறது!


• ஆலடி அருணா

## அதிரடி அருணா!

ஐயயோ! ஆலடி அருணாவை எதிர்க்க இப்படியொரு சொதப்பல் வேட்பாளரா? என்று முதலில் பயந்தார்கள் அ.தி.மு.க. தொண்டர்கள். ஆனால் முப்பத்தைந்து வயது பி.ஜி. ராஜேந்திரன் தமது 'செல்வாக்கை'க் காட்ட ஆரம்பித்ததும் அடங்கியொடுங்கி வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள்.

அருணா, தொகுதிக்குச் செய்துள்ளவை அதிகம் – கான்க்ரீட் சாலைகள், ஒன்றுக்கு இரண்டாக சமத்துவபுரம், புதிய தாலூக்காக்கள், கிராமங்களுக்குக் குடிநீர்...

"ஆனால் என்ன! தொண்டர்களிடம் சிடுசிடுக்கும் சுபாவம்! அதனால் அவர்கள் ஒத்துழைப்புக்கு அவர் கஷ்டப்பட வேண்டும்..." என்கிறார்கள் உள்ளூர்க்காரர்கள். போதாக்குறைக்கு இப்பகுதியில் செல்வாக்கு படைத்த தொழிலதிபர் ஒருவருடன் நல்லுறவு இல்லாததால் அவர்


• அண்ணாமலை

அருணாவுக்கு எதிராக வேலை செய்கிறாராம். அதன் விளைவாகக் குறைந்தபட்சம் 5000 வாக்குகளை அருணா இழப்பது உறுதி என்கிறார்கள்.

எனினும் இதனால் அருணாவின் வெற்றி வாய்ப்பு பாதிக்கப்படாது. இப்பகுதி பீடித் தொழிலாளர்களிடையே 'பொதுவிடத்தில் புகை பிடிப்பதைத் தடைசெய்த கட்சி' என்று தி.மு.க. குறித்து எதிரணியினர் செய்துவரும் குழப்படி பிரசாரமும் ஆலடி அருணாவின் வெற்றி வாய்ப்பைப் பாதிக்காது. ஜாதிகளின் அணிவகுப்பு வரிசை இந்தத் தி.மு.க. வேட்பாளருக்கே அனுகூலமாக இருக்கிறது.

## மகன் தந்தைக்காற்றும் உதவி...!

பி.எச். பாண்டியன் சொந்தக் கிராமமான கோவிந்தபுரியில் முகாமிட்டிருக்கிறார் – மகனுடைய தேர்தல் வெற்றிக்கு முழு நேர ஊழியம் செய்வதற்காக!

பார் கவுன்சிலில் பதிவு செய்துள்ளபோதும் மனோஜ் பாண்டியன் மிகவும் சாதுவாகவே தெரிகிறார். சேரன்மாதேவியில் பாண்டியனுக்கு இருக்கும் செல்வாக்கு உலகறிந்தது. "அப்பாவை வைச்சுத்தான் பையனுக்கு வோட்டு" என்கிறார்கள் வாக்காளர்கள். உள்ளூரில் கோலோச்சி தேர்தல் முடிவுகளை பாதிக்க வல்ல சிவந்தி ஆதித்தன் பேரவையும் மனோஜுக்கு வாக்களிக்கவே சிபாரிசு செய்யும் என்பது எதிர்பார்ப்பு.

சென்னையில் கட்டத் துரை (தேவர் இனத்தவர்) கொலைசெய்யப்பட்ட சம்பவத்தினால் ஆளும்கட்சியிடம் இப்பகுதியினர் கடுங்கோபத்தில் இருக்கிறார்கள். இதனால் இரட்டையிலைக்கே ஆதரவு என்று முடிவு செய்துள்ளார்கள்.

எதிரணியின் பி.ஜே.பி. வேட்பாளர் சொக்கலிங்கம் அமைப்புரீதியாக பலம் பெற்றுள்ள போதிலும் மேற்படி எதிர்ப்பையும் பி.எச். பாண்டியனின் செல்வாக்கையும் ஒருங்கே வெற்றி கொள்வது கஷ்டம்தான். ஆனாலும் 'தாமரை சின்னம் இங்கே முன்னைவிட பாப்புலராகியிருக்கு' என்று நம்பிக்கையோடு வேலை செய்கிறார்கள் அவர்கள்!

## மதுரை மேற்கில் ஒரு காமெடி ஹீரோ!

பழனிவேல்ராஜன் தொகுதியான மதுரை மேற்கில், அவருக்குப் போட்டியாக தி.மு.கவைச் சேர்ந்த சுப்புராசு என்பவர் மனுதாக்கல் செய்துள்ளார். எம்.ஜி.ஆர். போல தொப்பி அணிந்து, கண்ணாடி போட்டு அந்தப் பகுதி நெசவாளர்கள் இடையே பிரபலமாக இருக்கும் இந்த காமெடி ஹீரோ, ஏழைகளுக்கு எல்லாம் தி.மு.க.வில் இடம் கிடைக்காது என்பதால் போட்டியிடுகிறேன், தி.மு.கவிலிருந்து நீக்கினால் மறுபடியும் புரட்சி தி.மு.க தொடங்குவேன் என்கிறார். எவ்வளவு வாக்குகள் உங்களுக்குக் கிடைக்கும் என்று கேட்டால், ''குறைந்தது ஆயிரம்'' என்கிறார் வெட்கப்படாமல்!

## ரோடு போட்டால் வோட்டு

திருமங்கலம் தொகுதியில் உள்ள ஏராளமான கிராமங்களுக்குக் காங்க்ரீட் சாலைகள் போடப்பட்டுள்ளன. இரவு நேரங்களில் சாலையில் நீர் தெளித்து, சூடு தணிந்ததும், அதில் படுத்துத் தூங்குகிறார்கள் ஏழை மக்கள். காரணம் வீட்டில் மின்விசிறி கிடையாது. அவரவர் வீட்டிற்கு எதிரே உள்ள சாலையைக் கழுவி நடு வீடு போல சுத்தமாக வைத்திருக்கிறார்கள். காங்க்ரீட் சாலைகள் போடப்பட்ட இடங்களில் எல்லாம் கலைஞருக்குத்தான் வோட்டு என்று பாட்டுப் பாடுகிறார்கள்!

## மீட்டர் கட்டு; அதனால் வோட்டும் கட்டு!

தி.மு.க அரசின் சாதனைகளில் மினி பஸ்ஸுக்குத்தான் கிராம மக்களிடையே பெரிய

## 'தாராளமயமாக்கல்' தந்திரம்!

'ஐயோ! அந்தம்மா தன்னோட இனத்தவருக்கு மட்டும்தான் உதவுவாங்க. கிறிஸ்தவ சமுதாயத்துக்குத்தான் அவங்க சகோதரி..." – ஜெனிஃபர் சந்திரனைக் குறித்து அ.தி.மு.க. அணியினர் இப்படிப் புகார் படித்தாலும், திருநீறு குங்குமம் அணிந்து தொகுதியிலுள்ள கோயில்களில் ஏறி இறங்கி, கூப்பிட்ட குரலுக்கு ஆஜராகி, குடிநீர், சாலை, பாதாளச் சாக்கடை மாணவர் விடுதிகள் என்று



வரவேற்பு. எங்கு வேண்டுமானாலும், நிறுத்தி, ஏறி, இறங்கிக் கொள்ளலாம். மினி பஸ்கள், சந்து, பொந்துக்கெல்லாம் போய் வருவதால், ஆட்டோ மற்றும் டாக்ஸி மார்க்கெட்காரர்கள் நொந்து போய் தி.மு.க.வுக்கு எதிராகத் திரும்பியிருக்கிறார்கள். சவாரி வரும் பயணிகளிடம், பணப்புழக்கம் இல்லை என்ற குற்றச்சாட்டைக் கூறி, இரட்டை இலைக்கு வோட்டுப் போடுங்க. அப்பத்தான் பணம் புழங்கும் என்று எதிர்ப்பிரசாரம் செய்கிறார்கள்!.

திட்டங்கள் நிறைவேற்றிக் கொடுத்திருக்கும் ஜெனிஃபர் சந்திரனுக்குத் திருச்செந்தூர் தொகுதியில் நல்ல பெயர்தான்! குறிப்பாகத் தாய்க்குலம் அவரைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடுகிறது.

அ.தி.மு.க. வேட்பாளரான ஆர். ராதா கிருஷ்ணன் இனிமேல்தான் சட்டசபைக்குள் நுழைய வேண்டும் என்றாலும் இப்போதே எம்.எல்.ஏ. கணக்காக நற்பணிகளுக்கு வாரி வழங்குகிறார்! மக்கள் இந்த 'தாரான மயமாக்கலில்' கொஞ்சம் கிறங்கிப் போயிருக்கிறார்கள். சிலபல தொழிலதிபர்களும் ராதாகிருஷ்ணனை ஆதரிக்கிறார்கள்.

ஜெனிஃபர் சந்திரன் கொஞ்சம் எச்சரிக்கையாக இருப்பதுதான் நல்லது என்பது இப்பகுதி அனுபவஸ்தர்களின் கணிப்பு.

## சூடாகிப்போன கடல் காற்று!

பேபி ஆஃப் தி டீம் சுரேஷ் ராஜன்! (தி.மு.க. அமைச்சரவையில் மிக இளையவர்); பந்தா பண்ணாத உழைப்பாளி, மீனவர் சமுதாயத்தின் நண்பர்... என்று கன்னியாகுமரி தொகுதி ப்ரோக்ரஸ் ரிப்போர்டில் நல்ல மார்க்தான்.

ஆனால் எதிர்த்துப் போட்டியிடும் தளவாய் சுந்தரம் (அ.தி.மு.க.) அக்மார்க் 'பிள்ளைமார்' வகுப்பினர்; சுரேஷ் ராஜனோ டூப்ளிகேட்தான்!' என்று ஒரு துஷ்பிரசாரம் இவருக்கு எதிராக வலம் வந்து கொண்டிருக்கிறது.

ம.தி.மு.க. வேட்பாளர் லட்சுமணனோ, இவ்விருவருமே பிள்ளைமார் அல்ல என்று சாதிக்கிறார்!

ராஜ்யசபா எம்.பியான தளவாய் சுந்தரம், எம்.பி. நிதியைக் கொண்டு பல நற்காரியங்கள் செய்திருக்கிறார். அதிலே கன்னியாகுமரி சட்டமன்றத் தொகுதியும் நிறைய பயனடைந்திருக்கிறது. சமுதாயக் கூடங்கள், சாலைகள், நூலகங்கள் என்று ஆறு மாதம் முன்பே பணிகள் நிறைவேறி விட்டன.

சுரேஷ் ராஜனுக்குச் சரியான போட்டி தளவாய் சுந்தரம். '96ல் அ.தி.மு.க.வை விட்டுப் பலர் ஓடியபோதும் 'ஜெ'யிடம் விசுவாசமாய் நின்றவர் ஆதலால், அடிமட்ட அ.தி.மு.க. தொண்டர்கள் உயிரைக் கொடுத்து உழைக்கிறார்கள்.

பத்தாயிரம் வாக்குகளையாவது பெற்றுத் திருவது என்று இத்தொகுதியில் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் ம.தி.மு.க. வாக்குகளைப் பிரிக்கப் போகிறது என்பதால் பிரதான அணிகள் வெறியுடன் வேலை செய்கின்றன.

நாம் சென்ற தொகுதிகளிலேயே அதிக சுறுசுறுப்புடன் காணப்பட்ட தொகுதி இதுதான். கடற்கரையின் குளிர்க்காற்றையும் அனலாக்கும் அளவுக்குப் பிரசாரம் சூடு பிடித்திருக்கிறது!

— **ஆர்.சி. ஜெயந்தன்**

படங்கள் : ராஜன்

திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுவதாக இனி யாரும் சொல்ல முடியாது.

கல்யாணக் கனவுகளோடு காத்திருக்கும் வரன்களே நேரடியாக டி.வித் திரையில் தோன்றி, தங்கள் தகுதிக்கு ஏற்றபடி, எப்படிப்பட்ட வரன் வேண்டும் என்பதைப் பேட்டி காண்பவரிடம் வெளிப்படையாகச் சொல்வதை நம்பித்தான் ஆகவேண்டும். ஞாயிற்றுக் கிழமைக் காலை ஏழரை மணிக்கு சன் தொலைக் காட்சியைப் பார்க்கிற நேயர்களில் இன்னும் கூட பலருக்கு வியப்பு நீங்கியபாடில்லை.

"கல்யாண மாலை... கல்யாண மாலை" என்று பீம்பிளாஸ் ராகத்தில் தினா இசையமைத்த பாடலை கணீர்க் குரலில் நித்யஸ்ரீ பாட, கம்பீரமாகத் தொடங்குகிறது நிகழ்ச்சி.

வட்ட வடிவில் ஒரு சின்ன மேஜை. அதைச் சுற்றி நான்கு இருக்கைகள். நடுநாயகமாக வரன். வரனின் ஒருபக்கம் அவரது பெற்றோர். மறுபக்கம் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கும் பிரமிட் வி. மோகன்.

எல்லோர் கையிலும் கார்ட்லெஸ் மைக். பின்னணியில் வரும் பெண் குரல் வரன் பற்றிய தகவல்களைச் சொல்கிறது. பின்னணிக்குரலின் அறிமுகம் முடிந்தபிறகு, மோகன் கனிவான குரலில் பெற்றோரைப் பார்த்து கேட்கிறார், "சொல்லுங்க... உங்க குடும்பம், டாட்டர் பத்திச் சொல்லுங்க."

"ஒரே பொண்ணு, எங்கமேலே ரொம்ப பாசம். சகிப்புத் தன்மையும் அதிகம். எங்களுக்கு இரண்டு ஆண் பிள்ளைகள். இரண்டு பேருக்குமே திருமணமாகிவிட்டது. இவதான் கடைசி." பெற்றோர் சுருக்கமாகச் சொல்லி முடித்ததும் வரன் பக்கம் திரும்புகிறார் மோகன். வரனின் முகத்தில் கொஞ்சம் நாணம். நிறைய தைரியம்.

"இப்போ நீங்க சொல்லுங்க... உங்களுக்கு என்ன மாதிரியான வரனை எதிர்பார்க்கறீங்க?"

"என்னைப் புரிஞ்சுக்கணும்... முக்கியமா சிகரெட் பழக்கம் இல்லாதவரா இருக்கணும். வேலை செய்யறது தனியார் நிறுவனமாக இருந்தால் பரவால்லை."

"ரொம்ப நல்லதும்மா... நீங்க எதிர்பார்க்கிறபடி ஒரு நல்ல கணவன் அமைய, கல்யாண மாலை சார்பில் பிரார்த்திக்கிறோம்." வரன் அறிமுகம் முடிந்ததும், "இவரது பெற்றோரைத் தொடர்பு கொள்ள பதிவு எண் 3421-ஐக் குறிப்பிட்டுக் கல்யாண மாலை நிகழ்ச்சிக்கு எழுதுங்கள். அல்லது தொலைபேசி எண்ணில் தொடர்பு கொள்ளுங்கள்..."

மீண்டும் அடுத்த வரன் அறிமுகம். இளைஞர்கள், யுவதிகள் என்று மாற்றி மாற்றி அறிமுகம் நடக்கிறது.

"நான்கு ஐந்து வரன்களை அறிமுகப்படுத்தும் நிகழ்ச்சியாக ஆரம்பத்தில் தொடங்கிய கல்யாணமாலைக்கு இன்று ஒரு ஷெட்யூல் படப்பிடிப்பிற்கு மட்டும் எண்பது வரன்கள் வருகிறார்கள்" என்கிறார் இந்த நிகழ்ச்சியை

# வரன் பார்க்கப்



இயக்கி வரும் மீரா நாகராஜன்.

"அடக்கம், ஒடுக்கமாக கையில் காபி தம்ளர்களை ஏந்தி, குனிந்த தலையுடன் வரும் பெண்ணை, அரைகுறையாகப் பார்த்து, அதன் பிறகு புகைப்படத்தில் பார்த்த மாதிரி பெண் இல்லையே என்று மணமகன் புலம்பி, ஐந்து வயதை மாப்பிள்ளைக்குக் குறைத்துச் சொல்லி அநியாயம் பண்ணிட்டீங்களே என்று பெண் வீட்டார் புகைந்து, ஒருவழியாகக் கல்யாணம் முடிவதற்குள் போதும் போதும் என்ற நிலை ஏற்பட்டு விடும். இந்த நிலைக்குக் காரணம், வரன்களைப் பற்றிய வெளிப்படையான தகவல்களைப் பறிமாறிக்

# போறீங்களா?

கொள்ளத் தயங்கும் திருமண அணுகுமுறையை நாம் பின்பற்றுவதுதான். இந்த நிகழ்ச்சி மூலம் அதை உடைக்க வேண்டும் என்று விரும்பினோம். அது நடந்து வருகிறது" என்கிறார்.

இப்படியொரு நிகழ்ச்சியை நடத்த வேண்டும் என்று எப்படித் தோன்றியது?

''அஞ்சறைப்பெட்டி மாதிரி ஒரு அரைமணி நேரம் குடும்ப மேகசின் செய்யலாம் என்று 1996ல் முடிவுசெய்து, என்னென்ன கொடுக்கலாம் என்று டிஸ்கஸ் செய்தோம். அதில் மணமக்கள் அறிவிப்பும் இருக்க வேண்டும் என்று முடிவு செய்தோம். ஆனால் இதில் குறைந்த பட்சம் வரனின் புகைப்படமாவது இடம் பெற வேண்டும், அப்போதுதான் பயன் இருக்கும் என்று பேசியபோது, 'இதை மட்டும் தனி நிகழ்ச்சியாகச் செய்தால், பெரிய வெற்றி கிடைக்கும். புகைப்படத்திற்குப் பதிலாக வரன்களையே லைவாக பேட்டி கண்டால் நல்ல புரோகிராமாக ஆகிவிடும் என்று எனது சகோதரர் பிரமிட் நடராஜன் அறிவுரை வழங்கியதும் எங்களுக்குப் பொறி கிடைத்துவிட்டது. உடனே களத்தில் இறங்கினோம்" என்கிறார் மோகன்.

முதலில் எந்த நிறுவனமும் ஸ்பான்சர் செய்ய முன் வராததால் வேறு வழியின்றி நிகழ்ச்சியை நிறுத்தி விட்டார்களாம். நான்கு வருடங்களுக்குப் பிறகு இப்போது நிகழ்ச்சியில் பல மாற்றங்களையும், செய்து கொடுத்தவுடன், ஸ்பான்சர்கள் வரத் துவங்கியிருக்கிறார்கள்.

"நிகழ்ச்சியில் அறிமுகப்படுத்தப்பட்ட வரனுக்கு நிச்சயமாகிவிட்டதென்றால், இனி யாரும் விண்ணப்பிக்க வேண்டாம் என்று நிகழ்ச்சியிலேயே அறிவித்து விடுவோம்" என்று சொல்லும் மோகன், "இந்த நிகழ்ச்சியில் அறிமுகப்படுத்தப்படும் எந்த வரனிடமிருந்தும் ஐந்து ரூபாய் கூட சேவைக் கட்டணம் வாங்காமல் நடத்தி வருகிறோம்" என்கிறார். சமீபத்தில் காஞ்சி மடாதிபதி ஸ்ரீ ஜயேந்திரர், நிகழ்ச்சியைப் பாராட்டி ஆசி வழங்கியதைப் பெரிய பாக்கியம் என்கிறார்கள் இயக்குநரும், தயாரிப்பாளரும்.

இந்த நிகழ்ச்சியில் அறிமுகப்படுத்தப்பட்ட அத்தனை வரன்களுக்கும் திருமணம் நிச்சயமாகிவிட்டது என்பதே இதன் வெற்றிக்குச் சாட்சி.



• மீரா



• மோகன்

— **ஸ்ரீசக்கரம்**

படங்கள்: **யோகா**

உடம்பும் மனசும் மரத்துப் போன நிலையில் தளர்ந்து போய் உட்கார்ந்திருந்த யமுனா, தன் தோள் மேல் வெப்பமாய்க் கை விழுந்ததும் கலைந்து நிமிர்ந்தாள்.

மனோன்மணி புன்னகைசெய்தாள்.

"என்ன முடிவு பண்ணியிருக்கே...?"

"உங்ககிட்டே உண்மையைச் சொன்னா எனக்கு நீங்க உதவி பண்ணுவீங்களா...?"

"இதோ பார் யமுனா...! என்னை நீ ஒரு லாயரா நினைக்காம உன் கூடப் பொறந்த



சகோதரியா நினைச்சுக்கோ. போலீஸுக்கும் உனக்கும் என்ன பிரச்னை சொல்லு... பிரச்னை எதுவாக இருந்தாலும் அதை சால்வ் பண்ண நான் இருக்கேன்."

யமுனா தன் பெரிய கரிய கண்களைச் சுழற்றி கோயில் முழுவதையும் பார்த்து விட்டு மனோன்மணியிடம் திரும்பினாள். அழுகை அடைத்துக் கொண்ட குரலில் ஒரு ஐந்து நிமிட நேரத்தைச் செலவழித்து லீலா கிருஷ்ணனின் மரணம் சம்பந்தமாக இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் தன்னை விசாரிக்க வந்திருப்பதைச் சொல்லி முடித்தாள்.

மையமாய்த் தலையாட்டியபடியே யமுனா சொல்வதையெல்லாம் செவிமடுத்துக் கொண்ட மனோன்மணி, ஒரு சின்னக் கவலையோடு கேட்டாள்.

"இப்ப நீ சொன்ன எந்த விஷயமும் உன் வீட்ல இருக்கிறவங்களுக்குத் தெரியாது இல்லையா?"

"தெரியாது...! ஆனா எந்த நிமிஷத்துல தெரிஞ்சுடுமோன்னு அடிவயிறு கலங்கிட்டே இருக்கு. அத்தைக்கும் மாமாவுக்கும் விஷயம் தெரிஞ்சா அவங்க அப்படியே இடிஞ்சு போயிடுவாங்க... சௌம்யாவோட கல்யாணம் நடக்கிறது கூட ஒரு பெரிய கேள்விக் குறியா மாறிடும்."

"ஒரு லாயர்கிட்டேயும் டாக்டர்கிட்டேயும் உண்மைகளை மறைக்கக் கூடாதுன்னு

ராஜேஷ் குமார்

சொல்லுவாங்க! ஸோ.. இப்ப நீ என்கிட்ட உண்மைகளைப் பேசியாகணும். உனக்கு லீலா கிருஷ்ணனைத் தெரியுமா தெரியாதா?''

''அது வந்து...''

''நான் போலீஸ் கிடையாது. உன்னோட ஃப்ரண்ட். என்கிட்டே எதையும் நீ மறைக்க வேண்டிய அவசியம் கிடை யாது. நீ சொல்லப் போகிற



தகவல்களை வெச்சுக்கிட்டுத்தான் இந்தப் பிரச்னையில் இருக்கிற முடிச்சுக்களை எப்படி அவிழ்க்கிறதுன்னு என்னால யோசனை பண்ண முடியும்.''

யமுனா தலைகுனிந்தபடி சொன்னாள்.

''எனக்கு அந்த லீலாகிருஷ்ணனைத் தெரியும்.''

''கல்யாணத்துக்கு முன்னாடியேவா... இல்லை பின்னாடியா...?''

''கல்யாணத்துக்கு முன்னாடியே!''

''எப்படிப் பழக்கம்...?''

''கல்யாணத்துக்கு முன்னாடி நான் ஒரு பட்டன் பாக்டரியில் பேக்கிங் செக்ஷனில் வேலை பார்த்துக்கிட்டு இருந்தேன். அதே கம்பெனியில்தான் லீலா கிருஷ்ணன் ஒரு சூப்பர்வைஸரா வேலை பார்த்துட்டிருந் தான். சரளாதான் எனக்கு அவனை அறி முகம் பண்ணி வெச்சா.''

''அது யார் சரளா...?''

''என்னோட ஃப்ரெண்ட். லீலா கிருஷ் ணன் அவளுக்குக் கொஞ்சம் தூரத்து உறவு...''

# 17

''சரி...! லீலா கிருஷ்ணனை நீ லவ் பண்ணினியா...?''

''இல்லை...''

''அவன் உன்னை லவ் பண்றதா எப்ப வாவது சொல்லியிருக்கானா...?''

''இல்லை...''

''பின்னே எப்படி உன்னோட போட்டோ அவன்கிட்டே இருந்தது...?''

''தெரியலை....''

''நீ எப்பவாவது அவனுக்கு லெட்டர் எழுதியிருக்கியா...?''

''இல்லை... லீலா கிருஷ்ணன்கிட்டே

அதிகமா பேசினது கூட இல்லை..."

"இதோ பார் யமுனா...! லீலா கிருஷ்ணனை நீ லவ் பண்ணியிருந்தா... உண்மையைச் சொல்லிடு. கல்யாணத்துக்கு முன்னாடி ஒருத்தனைக் காதல் பண்றதும் பிறகு ஏதோ ஒரு காரணத்தால் அந்தக் காதல் தோல்வியடையறதும் இந்தக் காலத்துல சகஜம்."

"சத்தியமா அப்படியெல்லாம் எதுவும் இல்லை. லீலாகிருஷ்ணன் ஒருவேளை என்னை ஒருதலைபட்சமா காதலிச்சிருக்கலாம்."

"போட்டோ எப்படி அவன் கைக்குப் போயிருக்கும்...? நீ சொல்ற விஷயங்களை வெச்சு பார்க்கும்போது இந்த லீலா கிருஷ்ணனின் மரணத்துக்குப் பின்னாடி யாரோ இருக்காங்க. உன்னை இந்தச் சீனுக்குக் கொண்டு வரவும் அதன் மூலமா உனக்கும் உன்னோட ஃபேமிலிக்கும் ஒரு இக்கட்டான சூழ்நிலையை உருவாக்கவும் முயற்சி பண்றாங்கன்னு நினைக்கிறேன். இதனால யாருக்கு என்ன லாபம்...?"

"புரியலையே...!" கண்களில் நீர் கோர்த்தாள் யமுனா. மனோன்மணி சில விநாடிகள் மௌனமாய் இருந்து விட்டுக் கேட்டாள்.

"சரி...! அது என்ன சிவப்புப் பனித்துளி?"

"அது இதைக் காட்டிலும் மிகப் பெரிய குழப்பம். எவனோ ஒருத்தன் ஃபோன் பண்ணி இன்னிக்குச் சாயந்திரம் ஏழு மணிக்குச் சிவப்புப் பனித்துளியோடு எலியட்ஸ் பீச்சுக்கு வந்துடுன்னு சொல்றான்..."

"அவன் இதுவரைக்கும் எத்தனை தடவை ஃபோன் பண்ணியிருப்பான்..."

"ஒரே ஒரு தடவைதான்!"

"இன்னிக்குச் சாயந்தரம் எலியட்ஸ் பீச்சுக்குப் போகப் போறியா...?"

"அய்யோ...! நான் எப்படிப் போக முடியும்! வீட்டுக்குப் பக்கத்தில் இந்த ஆஞ்சநேயர் கோயிலுக்கு வர்றதுக்குள்ளே நான் பட்டபாடு இருக்கே. இந் நேரம் சௌம்யா எனக்காக நெருப்பு மேல நின்னுட்டிருக்கிற மாதிரி வெயிட் பண்ணிட்டிருப்பா... எலியட்ஸ் பீச்சுக்கெல்லாம் நான் போக மாட்டேன்...!"

"நான் போகட்டுமா...?"

"என்னை எதிர்பார்த்து வர்றவன் யார்ன்னு உங்களுக்கு எப்படித் தெரியும்...?"

"அந்த சிவப்புப் பனித்துளி பேர்வழி எப்படியும் உனக்கு மறுபடியும் ஃபோன் பண்ணுவான். நீ ரிஸீவரை வெச்சுடாம அவனுக்கு ஏத்த மாதிரி பேசி எலியட்ஸ் பீச்சல எந்த இடத்துக்கு வரட்டும்ன்னு கேளு... அவன் இடத்தைச் சொன்னதும் எனக்கு ஃபோன் பண்ணி தகவல் கொடுத்துடு. நான் போய்ப் பார்த்துக்கிறேன்..."

"இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனும் சிவப்புப் பனித்துளி ஆசாமி ஃபோன் பண்ணினா தகவல் குடுக்கச் சொல்லியிருக்காரே...?"

"வேண்டாம்! அவருக்குத் தகவல் கொடுக்காதே! எலியட்ஸ் பீச்சுக்கு அவர் போனால் விவகாரம் மேலும் சிக்கலாயிடும். அந்த ஆளை நான் மடக்கறேன்..."

"பால்பாண்டியன் ஃபோன் பண்ணிக் கேட்டா?"

"அந்த சிவப்புப் பனித்துளி ஆசாமி ஃபோன் பண்ணலைன்னு சொல்லிடு..."

"நான் பொய் சொல்றதை அவர் கண்டுபிடிச்சுட்டார்ன்னா...?"

"அவரால எப்படிக் கண்டுபிடிக்க முடியும்... நீ சொன்னாத்தானே அவருக்குத் தெரியும்...? இதோ பார் யமுனா உன்னோட பிரச்னைகளை இனி நான் பார்த்துக்கிறேன். நீ கவலைப்படாம வீட்டுக்குப் போ. வீட்ல எப்பவும் போல் இயல்பாய் சந்தோஷமாய் இரு..."



"என்னய்யா, ஏட்டு... திருட்டைக் கண்டுபிடிக்க என்னென்ன நடவடிக்கை எடுத்தீங்க!"

"முதல் கட்ட நடவடிக்கையா திருடு போன வீட்ல ஐந்நூறு ரூபா மாமூல் வாங்கியிருக்கோம் சார்!"

– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்



''அனுமதியின்றி உள்ளே வரக்கூடாதுன்னு போர்டு போட்டிருக்கேனே... ஏன் உள்ளே வந்தீர்?''

''அனுமதி கேட்கத்தான்.''

— சுவர்ணா

''என்னைத் தேடிக்கிட்டு இன்ஸ்பெக்டர் இனிமேல் வீட்டுக்கு வர மாட்டாரே...?''

''அவரை நான் பார்த்துப் பேசிக்கறேன். அவர் ஃபேமிலி லேடீஸ் கிட்டே கொஞ்சம் இங்கிதமாகத்தான் பிஹேவ் பண்ணுவார். இதே வேற ஒரு இன்ஸ்பெக்டரா இருந்திருந்தா நீ இந்நேரம் போலீஸ் ஸ்டேஷன் பெஞ்சில் உட்கார்ந்து அவர் கேட்கிற கேள்விகளுக்குப் பதில் சொல்லிட்டிருக்கணும்...''

யமுனா மறுபடியும் ஒரு தடவை சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு மனோன்மணியை ஏறிட்டுக் கைகூப்பினாள்.

''எல்லா உண்மைகளையும் உங்ககிட்டே சொல்லிட்டேன். எனக்கு எந்தப் பிரச்னையும் வராமே பார்த்துக்க வேண்டியது உங்க பொறுப்பு...''

''கவலைப்படாதே... ஏதாவது பிரச்னைன்னா எனக்கு ஃபோன் பண்ணு. யெல்லோ பேஜஸ் லாயர் செக்ஷன்ல என்னோட டெலிஃபோன் நெம்பர் இருக்கு....''

யமுனா தலையாட்டிக் கொண்டே எழுந்தாள். ''நான் கிளம்பட்டுமா...?''

''ஒரு நிமிஷம்...''

யமுனா நிற்க மனோன்மணி கேட்டாள்.

''உன் ஃப்ரெண்ட் சரளா மெட்ராஸ்ல எங்கே இருக்கா..?''

''மாம்பலம்...''

''ஃபுல் அட்ரஸும் ஃபோன் நெம்பரும் வேணுமே...?''

யமுனா சொல்ல மனோன்மணி அதை ஒரு தடவை வாய்விட்டுச் சொல்லி மனசுக்குள் பதிவுசெய்துக் கொண்டாள்.

''அவளை விசாரிக்கப் போறீங்களா?''

''தேவைப்பட்டா...! ஏன்னா லீலா கிருஷ்ணனைப் பத்தி உனக்குத் தெரிஞ்சதைக் காட்டிலும் அவளுக்கு ஒரு படி அதிகமாகவே தெரிஞ்சிருக்கும். உன்னை ஃபோன்ல அடிக்கடி காண்டாக்ட் பண்ணினா வீட்ல இருக்கிறவங்களுக்குச் சந்தேகம் வருமே! அப்புறம் இன்னொரு கேள்வி...! நீயும் சரளாவும் எந்த கம்பெனியில் வேலை பார்த்தீங்க...?''

''தயா பட்டன் ஃபேக்டரி...''

''தரமணியில் இருக்கே அந்த தயா பட்டன் ஃபேக்டரியா...?''

''ஆமா...''

''அது தயா க்ரூப்ஸுக்குச் சொந்தமான ஃபேக்டரியாச்சே... அந்தக் கம்பெனியோட மானேஜிங் டைரக்டர் பேர் தயானந்த்தானே...?''

''ஆமாம்'' என்றாள் யமுனா.

ஜெனிஃபரை அந்த ராத்திரி வேளையில் பார்த்ததும் வருணின் மனசுக்குள் ஒரு விநாடி பிரளயம் நடந்தது.

''ஜெனி...! நீயா...?''

அவள் அவனை ஒரு தீவிரப் பார்வை பார்த்துக் கொண்டு பக்கத்தில் வந்து நின்றாள்.

''நானேதான்...!''

''என்ன இவ்வளவு அகாலத்தில்...?''

''ஏன் வரக்கூடாதா...?''

''ம்... வரலாம்...! இருந்தாலும் ஸேஃப்டி முக்கியம் இல்லையா...? சிங்கார சென்னை முன்னே மாதிரி கிடையாது...''

''சரி... பூட்டைத் திற...! உன்னோட அந்தப்புரத்துக்குள்ளே உட்கார்ந்து பேசுவோம்.''

வருண் பூட்டுக்கு விடுதலை கொடுத்து கதவைத் தள்ளி உள்ளே கொட்டியிருந்த இருட்டுக்குள் கரைந்து இடதுபக்கச் சுவருக்குக் கையைக் கொண்டு போய் ட்யூப் லைட் ஸ்விட்சைத் தேய்க்க வெளிச்சம் யோசித்து யோசித்து நிரம்பியது.

"வா... ரஜனி... உட்கார்..." வருண் சொல்லிக் கொண்டே கையில் வைத்திருந்த கரன்ஸி ப்ரீப்கேஸை சுவர் அலமாரியில் வைத்தான்.

ஜெனிஃபர் ப்ரீப்கேஸைப் பார்த்துவிட்டுக் கேட்டாள். "ப்ரீப்கேஸ் புதுசு மாதிரி இருக்கு...?"

"ஆ... ஆமா..."

"வாங்கினியா?"

"வாங்காமே எப்படி வரும்...?"

"என்ன விலை...?"

"நாநூறு..."

"அதிகம்...! பார்த்து வாங்கியிருக்கலாம்."

"விலையைப் பார்த்தா க்வாலிடி கிடைக்காது."

"சரி... எங்கே போயிருந்தே வருண்...?"

## இதிலும் சென்டிமென்டா?

**மெ**கா தொடர்கள் வீட்டுக்குள் வந்து இம்சை செய்து வரும் நிலையில் அறுபது நிமிட



'டெலி பிலிம்'களைத் தயாரிக்கப்போகிறது ஸ்ரீ விக்னேஷ் கிரியேஷன்ஸ். ஒவ்வொரு சனிக்கிழமையும் சன் டீவியில் இரவு 10.30க்கு ஒளிபரப்பாகும் இப் படங்களை, பிரபல இயக்குனர்கள் இயக்க இருக்கிறார்களாம். "ஒவ்வொரு டெலிபிலிமும் ஒவ்வொரு மெசேஜ் சொல்லும். காமெடி, சென்டிமென்ட் எல்லாம் இதிலயும் உண்டு" என்கிறார் இதன் தயாரிப்பாளர்.

— ஏக்.

"அடையார் போய் ஒரு பழைய ஃப்ரண்ட்டைப் பார்த்துட்டு வர்றேன்..."

"சாப்பிட்டியா...?"

"ம்...! வேலை கிடைச்சதுக்காக அந்த ஃப்ரண்ட் ட்ரீட் கேட்டான். பொன்னுசாமி ஹோட்டலுக்குப் போய் நான்-வெஜ் சாப்டுட்டுப் பொடிநடையா வாக் பண்ணினோம். நீ சாப்பிட்டியா ஜெனி... எவ்வளவு நேரமா இங்கே வெயிட் பண்ணிட்டிருக்கே...?"

"அதிகம் இல்லை ஜென்டில்மேன். ரெண்டே ரெண்டு மணி நேரம்தான்..."

"என்ன ஜெனி...! எதுக்காக இப்படி வந்து வெயிட் பண்ணணும்... எதுவாகயிருந்தாலும் நாளைக்குக் காலையில் பார்த்து..."

"ஸாரி... வருண்...! காரணம் இல்லாம நான் உன்னைப் பார்க்க இந்த ராத்திரி நேரத்துல வரலை..."

"என்ன காரணம்...?"

"என்னோட அப்பா ஊரிலிருந்து எனக்கு ஒரு கூரியர் தபால் அனுப்பியிருந்தார்."

"சரி..."

"எனக்கு மாப்பிள்ளை ரெடியாம். நான் உடனே புறப்பட்டு வரணுமாம். அடுத்த ஞாயிற்றுக்கிழமை அந்தோணியார் சர்ச்சில் எனக்குக் கல்யாணமாம்...!"

வருண் சுவாசிக்கத் திணறினான்.

"எ...எ...என்ன திடீர்ன்னு... இ.... இப்படி....?"

"தட் ஈஸ் மை ஃபாதர் ஞானகடாட்சம்.... எதையுமே இப்படித்தான் அதிரடியா முடிவு பண்ணுவார்..."

"இ..... இ.... இப்ப... என்ன பண்றது ஜெனி?"

"என்ன பண்றதா...? அதை நீதான் சொல்லணும்..."

"எ.... எ... எனக்கு ஒண்ணுமே புரியலை..."

"உன்னோட பதில் இப்படித்தான் இருக்கும்ன்னு நான் ஏற்கெனவே கெஸ் பண்ணி வெச்சிருந்ததாலே உன்னோட சார்பா நானே ஒரு முடிவு எடுத்துட்டேன்..."

"எ.... எ... என்ன முடிவு...?"

"நாளைக்கு விடிகாலை அஞ்சு மணியிலிருந்து ஆறு மணிக்குள்ளே உனக்கும் எனக்கும் லஸ் கார்னரில் இருக்கும் ஆபத்சகாய சுந்தர விநாயகர் கோயிலில் கல்யாணம். தாலியைக் கூட நானே வாங்கிட்டு வந்துட்டேன். பார்த்தியா...?"

வானிடி பேக்கைப் பிரித்தாள் ஜெனிஃபர்.

(தொடரும்)

காட்பாடியிலிருந்து சென்னை செல்லும் சாலையில் பத்தாவது கி.மீயில் இருக்கிறது சேவூர் கிராமம். அவுட்டரில் சாலை ஓரத்தில் அமர்ந்து நண்பருடன் பேசிக் கொண்டிருந்த கணேசனிடம் "என்னங்க... தேர்தல் வருதே..." என்று பேச்சைத் துவக்கினோம். வாய்க்குள்ளேயே ஒரு சிரிப்பு சிரித்துவிட்டு "நாங்களெல்லாம் பரம்பரைத் தி.மு.க.காரங்க... யார் என்ன சொன்னாலும் நம்ம வோட்டு உதயசூரியனுக்குத்தாங்க" என்றார்.



"நெல்லுக்குச் சரியா விலை இல்லாததாலே விவசாயிங்க ரொம்ப கோபமாக இருப்பதாகச் சொல்றாங்களே?" என்ற போது "அட போங்க ஸார்... மழையே சரியில்லை... விளைஞ்சாத்தானே விலையைப் பற்றிக் கவலைப் படணும்" என்றார் அவர்.

துரைமுருகன் காட்பாடி தொகுதியில் போட்டியிடுவது இது ஆறாவது முறை. மூன்று முறை வெற்றி பெற்றிருக்கிறார்.

இருக்க, தொகுதியெங்கும் விறுவிறுப்பாகப் பணிகளைத் துவங்கிவிட்டார் அமைச்சர். சமத்துவபுரம், உழவர் சந்தை, சிமெண்ட் சாலைகள், மேம்பாலங்கள், மோர் தானா அணை, புதிய ஆரம்ப சுகாதார நிலையங்கள்,



# "மக்கள் வாய்ப்புக்



• நடராஜன்



• மல்லிகா

மண்ணின் மைந்தர். வன்னியர்கள் பெரும்பான்மையாக உள்ள இந்தத் தொகுதியை, பா.ம.க.வுக்குக் கொடுத்துவிட்டார் ஜெயலலிதா. பா.ம.க சார்பில் புதியவர். மூன்று மாதத்திற்கு முன்புவரை த.மா.காவில் இருந்தவர். கே.வி. குப்பம் ஒன்றிய பா.ம.க செயலாளரான மகாலிங்கத்துக்குச் சீட்டு கிடைக்கும் என்று பா.ம.க ஊழியர்கள் எதிர்பார்த்து நிற்க, புது வரவான நடராஜனுக்கு வாய்ப்பு கொடுத்துவிட்டார் டாக்டர். எனவே ஊழியர்களிடம் ஏற்பட்டுள்ள அதிருப்தியைப் போக்க அலைகிறார் நடராஜன். அவர் இந்த அலைச்சலில்

ஆலய அறப்பணிகள் என்று அசத்தியிருக்கிறார் துரைமுருகன்.

வாரத்திற்கு நான்கு முறை தொகுதிக்கு விசிட் செய்து கிராமங்களில் உள்ளவர்களிடம்கூட "அமைச்சர் அடிக்கடி வருகிறார்" என்ற எண்ணத்தைப் பதிவு செய்து வைத்திருக்கிறார். "தி.மு.க ஆட்சியில் உள்ளாட்சித் தேர்தல் நடந்ததால்தான் எங்க ஆளுக்கு ஊராட்சித் துணைத் தலைவர் பதவி கிடைச்சது. எங்களை நாற்காலியில் உட்கார வைத்த உதயசூரியனுக்குத்தான் வோட்டு" என்று சொல்லி மகிழ்கிறார் கர்ணாம்பேடு காலனி முருகேசன்.

ஆழ்வார்தாங்கலைச் சேர்ந்த சோமு ராணிப்பேட்டை பெல் கம்பெனியில் சப்- காண்ட்ராக்டர். மூன்று நான்கு வருடங்களாகத் தொழில் சரியில்லை என்று சொல்கிறார். "என்னங்க பண்ணறது அதுக்கு அமைச்சர் என்ன செய்வார். தொகுதிக்குப் பிரமாதமாக செய்திருக்கிறார்; கைவிட்டுட முடியுமா?" என்று கேட்கிறார்.



• முருகேசன்



• ரகு



• கணேசன்



• திருமால்



• சோமு

# கொடுப்பாங்க!''

முதல்முறையாக வோட்டுப் போடும் கே. மேட்டூரைச் சேர்ந்த இளைஞரான திருமாலையும் கவர்ந்திருக்கிறார் அமைச்சர். ''நாங்க ஜாதிச் சான்றிதழ் போன்றவற்றிற்குக் குடியாத்தம் வரை போக வேண்டியிருந்தது. இப்போது பாருங்க ஸார்... காட்பாடியிலே தாசில்தார் ஆபீஸ் வந்தாச்சு. இது தவிர எங்க பகுதியில் அம்முண்டி - பூட்டுத்தாக்குப் பாலம் கட்டினது பெரிய சாதனையாச்சே'' என்கிறார் திருமால். 'வன்னியர்கள் பா.ம.க.வுக்குத்தான் வோட்டுப் போடுவார்களா? என்றபோது ''நாங்ககூட வன்னியர்தான். பா.ம.கவைவிட தி.மு.க.வில்தான் வன்னியர் அதிகம்' என்று சொல்லும் திருமாலின் முன் உள்ள பிரச்னை வேலை வாய்ப்பு. ''ராணிப்பேட்டையில் பல தொழிற்சாலைகள் இருந்தாலும் காட்பாடியிலும் சில தொழிற்சாலைகளை அமைச்சர் கொண்டு வர முயற்சி செய்யணும்'' என்கிறார்.

அமைச்சர் பல நல்ல காரியங்களைத் தொகுதிக்குச் செய்திருக்கிறார் என்பதை பா.ம.க, அ.தி.மு.க தொண்டர்களால் மறுக்க முடியவில்லை. ஆனால் அமைச்சரின் சாதனையில் சில குறைபாடுகளைச் சுட்டிக் காட்டுகிறார்கள் அவர்கள். ''கிராமங்கள் எல்லாம் மினி பஸ் ஓடுகிறது என்கிறார்கள். எங்கள் பகுதியில் மினி பஸ் கிராமத்திற்கு வருவதில்லை. மெயின் சாலையிலேயே சென்று விடுகிறது. இதனால் தினசரி வரும் ஒரு பஸ்ஸில் கூரை மேல் உட்கார்ந்து பயணம் செய்கிறோம்'' என்கிறார் கொக்கரிப்பள்ளி அ.தி.மு.க செயலாளரான ரகு. ''சாதனைகள் ஒரு பக்கம் இருக்கட்டும். மக்கள் அனைவரும் ஒரு வெறுப்புடன் இருக்கிறார்கள். யூரியா மற்றும் விவசாய இடுபொருட்கள் விலை எக்கச்சக்கமாக உயர்ந்துவிட்டது. ஆனால் விவசாயிகளுக்குச் சரியான விலை கிடைக்கவில்லை. அ.தி.மு.கவுக்கு ஒரு கணிசமான வாக்கு வங்கி இருக்கிறது. எனவே எங்கள் வேட்பாளர் வெற்றி பெறுவார்'' என்கிறார் கே.வி.குப்பம் ஒன்றிய பா.ம.க துணைச் செயலாளர் கணேசன். ''ஜெயலலிதா சுற்றுப்பயணத்திற்குப் பிறகு எங்கள் வெற்றி உறுதியாக்கப்படும்'' என்கிறார் அவர்.

இந்தப் பகுதி கிராம பெண்களின் மத்தியில் அமைதியாக ஒரு புரட்சியைச் செய்து கொண்டிருக்கின்றன மகளிர் சுயநிதிக் குழுக்கள். பெண்களுக்குப் பொருளாதார ரீதியாக சுயசார்பு உண்டாக்கும் இந்தக் குழுக்கள், பெண்களின் வாக்கு வங்கியை ஆளும் கட்சிக்குச் சாதகமாக திருப்பும் என்று நம்பப்படுகிறது. 'இரட்டை இலை' பாசமுள்ள சுரசமங்கலம் மல்லிகாகூட ''சுயநிதி குழுக்கள், திருமண உதவித் தொகைகள், சமையல் வாயுமான்யம் போன்றவற்றால் இந்த முறை பெண்கள் வோட்டு உதயசூரியனுக்குத்தான்'' என்று சொல்கிறார்.

''கடந்த ஐந்து வருட காலமாக, நாங்கள் செய்த நல்ல காரியங்களைத் தொடர்ந்து செய்ய மீண்டும் மக்கள் ஒரு வாய்ப்பு கொடுப்பார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்'' என்கிறார் துரைமுருகன் அடக்கத்துடன்.

தேர்தல் நெருக்கத்தில் ஏதேனும் பிரச்னைகள் தோன்றி அதிரடி மாற்றம் உண்டாகாத வரையில், துரைமுருகன் காட்பாடி தொகுதியில் வெற்றி பெறுவது உறுதி என்று சொல்லலாம்.

— ரமா

படங்கள்: வெங்கடேஷ்

"ஷிவ், கொஞ்சம் நடந்துக்கிட்டே பேசலாமே."

ஆனந்தும் சிவப்ரியாவும் மூன்றாவது பிளாட்பாரத்தில் நடக்கத் தொடங்கினார்கள். அந்தத் தண்டவாளத்தில் எந்த ரயிலும் நிற்கவில்லை. தவிர அடுத்து வரும் நிமிடங்களிலும் எந்த ரயிலும் அங்கு வருவதற்கான வாய்ப்பு தென்படவில்லை. பிற பிளாட்பாரங்களில் மக்கள் கூட்டம் கூட்டமாக நிற்பது தெரிந்தாலும், அவர்களைச் சுற்றி மட்டும் எவரும் இல்லை.

"இதைவிட ஒரு தனிமை இந்த ரயில்வே நிலையத்தில் கிடைக்காது. சொல்ல வந்ததைச் சீக்கிரம் சொல்லு ஆனந்த்."

அவன் முகத்தில் ஒரு செம்மை. 'இப்போது நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேனே... இதைத்தான் தர்மசங்கடம் என்பார்கள்' என்பது போல் ஒரு தவிப்பும் புலப்பட்டது. முழுதாக ஒரு நிமிடம் கடந்த பிறகு "அறியாமையே சுகம்ன்னு சரியாத்தான் சொல்லியிருக்காங்க... உனக்கும் எனக்குமிடையில நம் டாக்டர் தொழிலே ஒரு தடுப்புச் சுவரா மாறிடுமோன்னு பயமாயிருக்கு ஷிவ்." அவன் பேச்சின் போக்கு இன்னமும் அவளுக்குப் பிடிபடவில்லை.

"சாந்தி முகூர்தத்தன்னிக்கு நீ கையில் பாலோடு வருவதாக கற்பனை செய்து பார்த்தேன். உடனே "ஆடை மிதக்கும் மசலா பால் போல இருக்கே. கொலஸ்ட்ரால் அதிகமாச்சே'ன்ற நினைப்பு வரும்னு தோணுது. மெத்தையிலே நாம உட்கார்ந்ததும் 'குஷன் மெத்தையில் தொடர்ந்து படுத்துக்கிட்டால் ஸ்பான்டிலைடிஸ் வரலாம்'கிற மருத்துவ புத்தி எட்டிப் பார்க்குமோன்னு பயமாயிருக்கு."

சிவப்ரியாவின் முகத்தை உற்றுப் பார்த்தான். அதில் கேலிரேகை எதுவும் தென்படக்காணோம்.

"எப்படி ஒரு இன்பத்தோட கற்பனை செய்யத் தொடங்கினாலும், அது அபஸ்வரமாகவே முடியுது." நடுநடுவே இடைவெளி கொடுத்து தனது கற்பனைகளை அவளிடம் காட்சிகளாக வடித்தான்.

முத்தக் கற்பனையில் கூட முழுக் கிளர்ச்சி இல்லை. 'இந்நேரம் எத்தனை பாக்டீரியாக்கள் உமிழ் நீரிலிருந்து மற்றவருக்குப் பரவியிருக்கும்' என்ற இடையூறான சிந்தனை!

குழந்தையாய் அவள்மீது சாய்ந்தால் "இதயத்துடிப்பு சீராக இருக்கிறதா?" என்ற ஸ்டெதஸ்கோப் ஞானம். தவிர மார்பகப் புற்று நோய் காரணமாக ஒரு பெண்ணின் வலது மார்பகத்தை நீக்கியதைப் பற்றி சீனியர் மருத்துவர் ஒருவர் விஸ்தாரமாகக் கூறியதும் நினைவில். போதாக் குறைக்குப் பெண்ணின் சடலமொன்றைச் சுட்டிக் காட்டி பேராசிரியர் நடத்திய அனாடமி பாடங்கள் வேறு.

"என் பயத்தை உன்னாலே புரிஞ்சுக்க முடியுதா?"

"உன்னை யாரு முதலிரவுவரை கற்பனையைத் தட்டிவிடச் சொன்னது?" என்று கேட்கலாம். ஆனால் அது நியாயமல்ல. அவளுக்கும் அவ்வப்போது எண்ணங்கள் திசை மாறத்தான் செய்கின்றன. நல்ல வேளையாக, திமிறி விழுந்த கடிவாளத்தை விரைவிலேயே எடுத்துப் பொருத்திக் கொள்ளும் ஒழுங்கு முறை தன்னிடம் இருக்கிறது.

இப்போது இவனை எப்படி சமாதானபடுத்த?

சட்டென்று அவனது வலக்கையில் தன் இடக்கையை இணைத்துக் கொண்டாள். தொடர்ந்து நடந்தார்கள். நொடி முள் மூன்று முறை முழுதாக வலம் வந்திருக்க வேண்டும். ஆனால் மூன்று இன்ப யுகங்கள் கழிந்தன.

தன் கையை மெல்ல விடுவித்துக் கொண்ட சிவப்ரியா, "என்னப்பா, இப்போ எப்படி இருக்கே?"என்றாள் சற்றே பார்வையைத் தழைத்தவளாய்.

சிவப்ரியாவின் "அதிரடி" நடவடிக்கையால் மகிழ்வதிர்ச்சி ஏற்பட்டிருந்த அவன் "சொர்க்கம் ஷிவா. தாங்க் யூ. ஏதோ

# மனம் மணிமகுடிய ஆவல்...

ஷாக்கடிச்ச மாதிரி இருந்தது. அந்த ஷாக் தொடரணும்கிற நினைப்பு மட்டும்தான் இப்பவும் இருக்கு'' என்றான்.

''இப்பப் புரிஞ்சுதா?'' என்று சிவப்ரியா கேட்க, அவன் முகத்தில் வியப்பு, ஆனந்தம், நிம்மதி என்று அடுத்தடுத்துத் தோன்றிய உணர்வுகள் ஒரு கெலடாஸ்கோப்பைக் காண்பது போன்ற உணர்வை ஏற்படுத்தியது.

'அப்போது ஒரு மனநல மருத்துவர் போலச் செயல்பட முடிந்தது என்னால். ஆனால் இப்போது என்னைப் புரிந்து கொள்ள நீ மறுக்கலாமா ஆனந்த்? ஒரே ஒரு ரகசியத்தை உன்னிடம் கூடப் பகிர்ந்து கொள்ள முடியாத சூழல் எனக்கு. அதற்காக எனக்கு மிகப் பெரிய தண்டனையை வழங்கிவிடாதே' சிவப்ரியா மனத்துக்குள் துடிக்க, வசனகர்த்தா பல பக்க வசனங்களோடு அவளை அணுகி, ஏற்ற இறக்கத்தோடு படித்துக் காட்டத் தொடங்கினார்.

சிவப்ரியாவைப் பற்றி ஏதோ நீ தப்பாப் பேசினது எனக்குத் தெரியாதுன்னு நினைக்கக்காதே. இது மாதிரி தப்பை நீ செய்றது இதுவே கடைசி தடவையா இருக்கட்டும்.

அதே நீதிமன்ற செட். காமிராதான் பார்வையாளர்களிலிருந்து நீதிபதியின் பக்கமாகத் திரும்பியிருந்தது. சாட்சிக் கூண்டில் நிற்கும் வில்லனின் கையாளை வழக்கறிஞர் சிவப்ரியா குறுக்கு விசாரணை செய்ய வேண்டிய காட்சி. 'ரொம்ப எமோஷனலான காட்சிம்மா. வெளுத்துக் கட்டணும்' என்றிருந்தார் மணி சங்கர்.

அதிகபட்சம் மூன்று டேக்குகள் என்கிற வகையில் சிவப்ரியாவால் சமாளித்துக் கொள்ள முடிந்தது.

படித்தது மருத்துவக் கல்லூரியில் என்றாலும் சட்டங்களை அறிந்து கொள்வதில் அவளுக்கு ஆர்வம் இருந்தது. இதன் காரணமாக நீதிமன்றங்களுக்கும் சென்று பார்த்திருக்கிறாள். இப்போது படப்பிடிப்பில் பல இயற்கைக்கு மாறான விஷயங்கள். ஜீரணிக்க சிரமமாக இருந்தது. உயர்நீதிமன்றத்தில் நடப்பதான காட்சியில் குறுக்கு விசாரணைகள். 'ஆர்டர் ஆர்டர்' என்று எந்த நீதிபதியும் மேஜையில் சுத்தியால் தட்டியதில்லை. நீதிபதி நடிகர் அடிக்கடி அப்படித் தட்டினார். வழக்கறிஞர் அங்குமிங்கும் நடந்து கொண்டே வசனம் பேசுவதும், 'இந்தப் பாயிண்ட்டைக் குறித்துக் கொள்ளுங்கள் மை லார்ட்' என்று கேட்பதும் நீதிமன்ற அவமதிப்பாகவே நிஜத்தில் எடுத்துக் கொள்ளப்படும். ஆனால் திரையில் அவை காலங்காலமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட மரபு! நல்லவேளை எனக்கு டாக்டர் பாத்திரத்தைக் கொடுத்துத் தொலைக்கவில்லை இவர்கள்!

படப்பிடிப்பு முடிந்தபோது சோர்வாக இருந்தது. அதுவும் தீவிர மனச்சோர்வு. 'பேக்கப்' என்ற வார்த்தைகள் பாலைவன நீர்த்துளிகளாகக் காதில் விழுந்தன.

'என்னையும் ஆனந்த்தையும் சேர்த்து வைக்க ராம்ஷேகர் சார் முயற்சிப்பாரா? அது வெற்றியடையுமா? என்னதான் ராம்ஷேகர் தனக்குத் தந்தையைவிட மேலானவர் என்றாலும் அவரது பேச்சை இந்த விஷயத்தில் ஆனந்த் ஏற்றுக் கொள்வானா?'

'கார் ரெடிம்மா' என்று ஒருவன் அறிவிக்க, சிவப்ரியா எழுந்தபோது மணி சங்கரின் குரல் உரத்துக் கேட்டது. எதிரே தலைகவிழ்ந்தபடி வேணு. 'உன் எல்லையை மீறாதே வேணு. அப்படி மீறினால் என் யூனிட்டிலே நீ வேணாம். சிவப்ரியாவைப் பற்றி ஏதோ நீ தப்பாப் பேசினது எனக்குத் தெரியாதுன்னு நினைச்சுக் காதே. இது மாதிரி தப்பை நீ செய்றது இதுவே கடைசி தடவையா இருக்கட்டும்'. கத்திவிட்டு மணிசங்கர் நகர்ந்துவிட்டார். இந்த விஷயம் எப்படி இவர் காதுகளை எட்டியது என்று சிவப்ரியா யோசித்துக் கொண்டிருந்தபோதே, வேணுவின் வெறுப்புப் பார்வை அவள்மீது விழுந்தது. 'எனக்கும் காலம் வரும். அப்போ கவனிச்சுக்கிறேன்' என்ற விரோத எச்சரிக்கை அதில் தெளிவாகவே புலப்பட்டது.

'நீங்க பார்த்து முடிவெடுத்த பெண்ணையே நான் கல்யாணம் செய்துக்கிறேம்ப்பா' என்று ஆனந்த் கூற, அவனது அப்பா உற்சாகத்துடன் தன் நண்பரைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். 'உன் பெண்ணைக் கல்யாணம் செய்துக்க ஆனந்த் சம்மதிச்சுட்டான். அடுத்த வாரம் நிச்சயதார்த்தம் வச்சுக்கலாமா?' என்று வினவினார்.

(தொடரும்)



# கல்லணையில் விரிசல்!

கரிகாலன் கட்டிய கல்லணையில் விரிசல்கள் ஏற்பட்டுள்ளதால் தஞ்சை விவசாயிகள் பெரும் கவலைக்குள்ளாகியிருக்கிறார்கள்.

கல்லணையில் முப்பத்தியிரண்டு வளைவுகள் உள்ளன. இதில் திருவானைக்காவல் வழியாக கல்லணைப் பகுதிக்குத் தண்ணீர் வந்து சேரும் இடத்தில் அணையின் கீழே ஜெய வீர ஆஞ்சநேயர் கோயில் அமைந்துள்ளது. அங்கிருந்து பதினெட்டு வளைவுகள் கொண்டது அணைப்பகுதி. பதின்மூன்றாவது வளைவின் உட்பகுதியில் கீழ்மேலாக தென்புறமும், வடபுறமும் விரிசல்கள் காணப்படுகின்றன. பதினாறு, ப்தினேழு, பதினெட்டாவது வளைவுகளின் உட்புறங்களில் சுண்ணாம்புக் காரைகள் பெயர்ந்து விழுந்து செங்கற்கள் வெளியே தெரிகின்றன. அதிலும் பதினெட்டாவது வளைவில் அதிக அளவில் சுண்ணாம்புக் காரை உதிர்ந்து போயுள்ளது.

மணற்போக்கி எனக் குறிப்பிடப்படும் இந்த வளைவுகளில் அதிகமாகவே விரிசல்கள் தென்படுகின்றன. தென்னாற்காடு மாவட்டத்தின் பெரும்பகுதி விவசாய நிலங்களுக்கும், சீர்காழி பகுதி விளைநிலங்களுக்கும் பாசனத்திற்காகத் தண்ணீர் திறந்து விடப்படும் அணைப் பகுதியில்தான் இந்த விரிசல். அணையின் வேறு சில பகுதிகளில் காரை பெயர்ந்து போய் செங்கற்கள் வெளித் தெரிந்து அபாயகரமாய்க் காட்சியளிக்கின்றது.

காவிரி வடிநில அமைப்பு வாயிலாக ஏறத்தாழ ஐந்து லட்சம் ஏக்கர் விளைநிலங்கள் பாசன வசதி பெற்று வருகின்றன. அணைக்கு ஏதேனும் விபரீதம் நேர்ந்துவிட்டால் இந்த விளைநிலங்கள் பாசன வசதியின்றி முற்றிலும் பாதிக்கப்பட்டு விடும். பழமையான இந்த அணையை உரிய நேரத்தில் உடனடியாகச் செப்பனிட நடவடிக்கை எடுக்கப்பட வேண்டுமென இப்பகுதி விவசாயிகள் விரும்புகிறார்கள்.

தேர்தல் நெருங்கி வரும் பரபரப்பான இச் சூழலில், கூட்டணி விரிசல்களை விட்டு விட்டு இந்த விரிசல்களையும் கண்டு கொள்ளுமா தமிழக அரசு?

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# சோனியா என்ற குழந்தை!

'Please! please go to your seat!' - இது யாருடைய வாடிக்கையான வாசகம் என்று கேட்டால், மதிப்புக்குரிய லோக்சபா சபாநாயகர் பாலயோகியினுடையது என்று பாமரன் கூடப் பதில் சொல்லி விடுவான். சுமார் இரண்டு வருட காலமாக வேறொன்றும் செய்ய அறியாதிருந்தவர், சென்ற வாரம் வெகு உருப்படியான பணியொன்று செய்தார். அது, பிரதமர் வாஜ்பாயையும் எதிர்க்கட்சித் தலைவர் சோனியாகாந்தியையும் சந்திக்க வைத்து, பட்ஜெட் கூட்டம் சுமுகமாக நடக்கும்படி சமரசம் செய்ததுதான். A good Samaritan.



தூர்தர்ஷனில் இந்தச் சந்திப்பைக் காட்டினார்கள்.

சோபாவின் மத்தியில் பாலயோகி. அவருக்கு வலப்புறம் வாஜ்பாய். இடப்புறம் சோனியா. இந்த சீரியஸான காட்சியில் ஒரு சிரிப்பான அம்சமும் இடம் பெற்றிருந்தது: சாப்பிட அடம் பிடிக்கும் குழந்தை மாதிரி சோனியாஜி உம்மென்று மறுபக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்! Nothing can be gained by being negative என்பதை அறியாத குழந்தை, பாவம்.

தேர்தல் வந்துவிட்டால் எல்லா அசிங்கங்களும் அரங்கேறுவது சகஜம்தான். ஆனால் விஜய் நிருபர் புரசைத் தொகுதியில் கண்ட பேட்டி அநாகரிகத்தின் உச்சம்.

ஒரு வாக்காளர், 'நான் த.மா.கா.விலேதான் இருந்தேன். சிதம்பரம் வெளியே வந்திட்டாரில்லே? அதனாலே நானும் வந்திட்டேன்' என்றார்.

நிருபர் விடாமல், 'ஏன்? மூப்பனார் இல்லையா?' என்று கேட்டார்.

"மூப்பனார் ஒரு தலைவரா? அவருக்குப் பேசவே வரலே. வாயைத் திறந்தா வொய் வொய்னு இழுத்துக்கிட்டுப் போவுது' என்று பரிகாசம் பண்ணியதோடு தன் வாயைக் கோணிக் காட்டினார்.

அந்த ஆள்தான் நிதானம் இழந்து அப்படிப் பேசினாரென்றால் விஜய் டீவி அதை ஒளிபரப்பியிருக்கலாமா? கண்டதைக் கண்டவாறு காட்டுவது தங்கள் கடமை என்று அவர்கள் சொல்லக்



ரிமோட்

வினோத்

கூடும். ஆனால் பெர்னார்ட் ஷா, 'when a stupid man is doing something he is ashamed of, he always declares it is his duty என்று சொல்லியிருக்கிறார்.

**த**னது மாநிலத்தில் சர்வதேச விமான நிலையம் அமைக்காதது குறித்து மத்திய அரசைக் குறை கூறி ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார் அந்தக் கர்னாடக அமைச்சர் (சன் நியூஸ்). இந்த மனிதரை எங்கேயோ பார்த்திருக்கிறோமே, எங்கே எங்கே என்று மண்டையை உடைத்துக் கொண்ட போது திடீரென்று ஞாபகம் வந்தது.

ஆ! நம்ம கார்கே! ராஜ்குமார் – வீரப்பன் நூறு நாள் நாடகம் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது தினம் தினம் திருமுகம் காட்டிக் கொண்டிருந்தாரே, அதே மல்லிகார்ஜுன கார்கேதான்!

இன்னொரு வரக் கூடாத ஞாபகமும் வந்தது. வீரப்பனைப் பிடிக்கப் போனார்கள்? தெரியவில்லை. ஆனால் வீரப்பன் ஹாயாக இருப்பது மட்டும் நிச்சயம். அவனைப் பொறுத்த மட்டில் every day above ground is a great day!

**வ**ர வர டீவி தொடர்களில் 'பிராமணாள்' கதைகளும் மடிசார் அம்மாமிகளும் அதிகமாக ஆக்கிரமிப்பு செய்கிறார்கள் என்று புள்ளி விவரம் கொடுத்திருக்கிறது ஒரு தினசரி. Tradition is the trend என்று இதற்குச் சமாதானம் செய்து கொள்ளலாம். ஆனால் சம்பந்தப்பட்ட நடிகர்கள் பிராமண பாஷையைச் சரியாய் உச்சரிப்பதில்லை என்கிற குறை கூறப்பட்டிருந்தது அந்தக் கட்டுரையில்.

உச்சரிப்பு இருக்கட்டும். உரையாடல்களும் வழக்கொழிந்தவையாக இருக்க வேண்டுமா? Cosmopoliton life காரணமாக 'எங்காத்துலே' ஒங்காத்துலே' குறைந்துவிட்டது. 'என் வீட்டிலே உங்க வீட்டிலே'தான். 'நேக்கு நோக்கு' இல்லவே இல்லை. எங்காவது குக்கிராமத்து அக்கிரகாரத்திலே இருக்குமோ என்னவோ. பின்னே ஏன் இதையெல்லாம் நுழைத்துத் தாங்களும் அவஸ்தைப்பட்டு, பார்க்கிறவர்களுக்கும் அவஸ்தை தர வேண்டும்?



''ஏங்க... வரவர நம்ம பையன் யார் பேச்சையும் கேக்கமாட்டேங்கறான்.''

''சரிவிடு... உன்னை மாதிரியே ஒரு பொண்ணைப் பாத்து அவனுக்குக் கட்டி வெச்சா மாறிட்டுபோறான்...'

– குமார்ஜி



''சமையல்காரர் மளிகைக் கடைக் காரரைப் பார்த்து என்ன திட்டுறார்?''

''உன் பருப்பு என்கிட்டே வேகாதுன்னு சொல்றார்!''

– பாளை பசும்பொன்



''உங்க முகத்தில் விழுந்திருக்கிற சுருக்கம் கூட ஒருவிதமான கவர்ச்சியைத்தான் தருது உங்களுக்கு!''

''போதும் மீனாட்சி! பென்ஷன் தினத் துக்குப் பென்ஷன் தினம் நீ இப்படி எதை யாவது சொல்றதைக்கேட்டு காது புளிச்சுப் போச்சு!''

– உ. ராஜாஜி

இந்த வாரமும் சூப்பர்மார்க்கெட்ல முதல் டிஸ்ப்ளே 'இலக்கியச் சிந்தனை' தொடர்பானதுதான். 'நாற்று'ங்கற பேர்ல 2000ம் ஆண்டின் சிறந்த சிறுகதைகள் தொகுப்பை இலக்கியச் சிந்தனை- வானதி கூட்டணி வெளியிட்டிருக்கு. தர்டி ஒன் இயர்ஸா பிரியாம பயனுள்ள காரியம் பண்ணிட்டிருக்கற இந்தக் கூட்டணிக்கு முதலில் ஜே! (கவனிங்க, 'ஜெ' இல்லை, ஜே!)

"கமிங் டு இ புக்...' விதை, நாற்று மற்றும் மனிதர்கள்'ன்ற தலைப்புல அம்பை எழுதி யிருக்கற முன்னுரையில சிறுகதைக்கான டெஃபனிஷன் ரொம்ப அழகா அமைஞ்சி ருக்கு :

> கதைகளின் தேர்வு, அவற்றின் ஊற்றுக் கண்ணின் ஆழத்தின், அதன் இயல்பின் தன்மையைப் பொறுத்து நிகழ்கிறது. அந்த ஊற்றுக்கண்ணின் ரகசி யங்களைத் தன்னுள் பொதிந்து கொண்டு

# சுமி சூப்பர் மார்க்கெட்

• க.சீ. சிவகுமார்

வருகிறது ஒரு சிறப்பான கதை.

போகிற போக்கிலே அம்பை வெகுஜன பத்திரிகைகளை மறக்காம குட்டியிருக்காங்கன்னாலும் அவங்களோட இந்த டெஃபனிஷன் ரொம்ப அக்சப்டபிளாயிருக்கு. அதாவது சிறு கதைக்கு, வகுக்கப்பட்ட இலக்கணம்னு இருக்க முடியாது; 'பிடிக்குள் அடங்காத பட்டுப் பூச்சி மாதிரி பல தளங்களைச் சுற்றிவிட்டு இலேசாக அமர்ந்து கொள்கிறது'ன்றார்.

2000 ஆண்டின் 12 சிறந்த கதைகளாக 'இலக்கியச் சிந்தனை' தேர்ந்தெடுத்ததுல அப்படிப்பட்ட பட்டர்ஃப்ளை ஸ்டோரீஸ் அஞ்சுதான்னு பட்டியல் போட்டிருக்கார் அம்பை. சோ. தர்மனின் 'மருந்து', ஆர். சூடாமணியின் 'கடற்கரையில் ஒரு புதுவித ஜோடி', க.சீ. சிவகுமாரின் 'நாற்று', சி.எம். முத்துவின் மரத்துண்டும் சில மனிதர்களும்', ப. ஜீவ காருண்யன் எழுதின 'வேட்டைக்குத் தப்பிய விதைகள்'. (இதிலே முத்து கதை கல்கி யிலயும் மற்றவை இந்தியா டுடேயிலயும் பப்ளிஷ் ஆனவை)

இந்த அஞ்சு கதைகளையும் சேர்ந்தாப்புல ஒரே மூச்சுல படிச்சுப் பார்த்தா அம்பையோட டெஃபனிஷனுக்கு என்ன அர்த்தம்னு முயற்சியில்லாம புரியும். அதுவும் சிவகுமாரோட 'நாற்று' படிச்சுட்டு ஒரு சொட்டாவது கண்ணீர் விடாதவன் மனுஷனாவேயிருக்க முடியாது. அண்மைக்காலத்துல நவீனமும் ஆத்மார்த்தமும் நல்ல தமிழும் ஒரு ஸ்ட்ராங் காரக்டரும் கலந்த இப்படிப்பட்ட ஃப்ரெஷ் ஸ்டைல்ல எழுதுறவங்க வேற யாராவது உண்டா...? சந்தேகம்தான். அட்லீஸ்ட், 'நாற்று'ல இந்த குவாலிடீஸ் நிறைஞ்சிருக்கு. அதை 2000 வருஷத்து மிகச் சிறந்த கதையா அம்பை செலக்ட் பண்ணிருக்கறது நோ சர்ப்ரைஸ்.

முப்பது ரூபாய்க்கு அஞ்சு வெரிகுட் ஷார்ட் ஸ்டோரீ ஸும் ஏழு ஷார்ட் ஸ்டோரீஸும்

• பிரபஞ்சன்

• ஜெயகாந்தன்



# பட்டர்ஃப்ளை ஸ்டோரீஸ்!

படிக்கலாம்னா நல்ல பார்கெயின்தானே! ('நாற்று' - வானதி, 13, தீனதயாளு தெரு, சென்னை - 17)

கவிதா பதிப்பகம் ஜெயகாந்தனோட கம்ப்ளீட் ஷார்ட் ஸ்டோரீஸைத் தொகுத்துப் போடப் போறாங்க - இரண்டு புக்கா - 1824 பேஜஸ்! 800 ருபீஸ்! பணம் கட்டி முன்பதிவு பண்ணிக் கிட்டா இருநூறு ருபா தள்ளுபடியாம்! (கவிதா பப்ளிகேஷன், 8, மாசிலாமணி தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

இந்த முயற்சியை அறிமுகப் படுத்தவே ஒரு விழா நடந்தது ஃபிலிம் சேம்பர்ல... ஹவுஸ் ஃபுல்!

எல்லாருமே நல்லா பேசினாங்க. தான் முழுசா ஏத்துக்காத ஆரம்ப கால கதைகள் கூட தொகுப்புல விடாம இடம்பிடிச்சுருக்குன்னு சொன்னார் ஜெயகாந்தன். அப்படிப் பட்ட கதைகள் 'தலைபிரட்டைகள்'ன்னார் - அதாவது டாட்போல்ஸ். தலைபிரட்டையிலேயிருந்துதானே தவளை முழுசா வளர்ச்சி அடைஞ்சு வரும்னார்.

சுமாரான கதைகளைத் தொகுப்புல சேர்க்க எப்பவுமே பிரபலங்கள் யோசிப்பாங்க. ஆனா லைஃப் டைம் ஒர்க்ன்றபோது அதுல எல்லாத்தையும் சேர்க்கறதுதான் நியாயம்ன்றது ஒரு பக்கம். இட் வில் ஆல்ஸோ பி என் ஹானெஸ்ட் அன்ட் அக்யூரேட் ஹிஸ்டாரிகல் ரெகார்ட்.

இந்த நிகழ்ச்சியில ஹைலைட் பிரபஞ்சனோட பங்கேற்புதான். ஜெயகாந்தன் முன்னுரைகளை அவர் மேடையில வாசிச்சபோது ஏற்ற - இறக்கம், நிறுத்தம்னு அழகா கொடுத்து எழுத்தாளரோட மனசை அப்படியே படம் பிடிச்சுட்டார். பாம்பின் கால் பாம்பறியும்...?

பிரபஞ்சனோட ஒரு முக்கிய தொகுப்பும் சீக்கிரம் வரப் போகுது. கலைஞன் பதிப்பகம் வெளியீடா ஜெயகாந்தன் ரீடர் - அதாவது அவரோட செலக்டட் வொர்க்ஸ் தொகுப்பு வெளியாச்சு. அதே மாதிரி அசோகமித்ரன், சுந்தரராமசாமி லா.ச.ரா., கி. ராஜநாராயணன் எழுத்துக்களையும் தகுந்த ஆட்களைக் கொண்டு தொகுக்கச் செய்து வெளியிட்டிருக்காங்க. இந்த வரிசைல இனி வரப் போறது பிரபஞ்சனோட வொர்க்ஸ். தொகுப்பாளரா பிரபஞ்சனே தேர்ந்தெடுத்திருக்கறது தமயந்தியை. இந்தத் தொகுப்பிலே பிரபஞ்சன் தனக்குத்தானே கேள்விகள் கேட்டுப் பதில் சொல்லிக்கற மாதிரி ஒரு டிஃபரன்டான செக்‌ஷனும் வருமாம்.

செயின் பறிப்பு நடந்தா பேப்பர்ல நியூஸ் போடறாங்களே... ஷி வாஸ் ரிலீவ்ட் அஃப் ஹர் செயின்னு ஏன் போடறாங்கன்னு ஒரு கேள்வி. நான் இங்லீஷ் நிறைய யூஸ் பண்றதனால எனக்குப் பதில் தெரிஞ்சுருக்கும்னு நினைச்சு கேட்டிருக்கார் ஒரு வாசகர். ரிலீஃப்ன்றது நிவாரணம், தீர்ந்த கவலை, அப்படிங்கற சென்ஸ்லதானே வருது...? வரவேண்டும்னு கேட்கறார்.

ஆபீஸ்ல ஒருத்தர் ரெஸிக்னேஷன் கொடுத்தா உடனே வீட்டுக்குப் போய்ட முடியாது; ரிலீவிங் ஆர்டர் வரணும்னு விதி உண்டு தெரியுமில்லே...

ஆக, 'ரிலீவ்'ன்ற வொர்ட் நீக்குதல் அல்லது பிரிப்பதுன்ற அர்த்தத்துலயும் வரலாம். எல்லாம் யூஸேஜ், கான்டெக்ஸ்டைப் பொறுத்ததுதான் - தமிழ்ல பாருங்களேன்... தேளும் கொட்டும், பாலும் கொட்டும், முரசும் கொட்டும்!

இப்போ நீ கொட்றதை நிறுத்து சுமின்றீங்களா.... ஓ.கே. இதோட ஐ ரிலீவ் யூ... அதாவது இந்த வாரத்தைப் பொறுத்தவரை...!

— சுமி



"என்னால 12 இஞ்ச் பிட்ஸாவை ஒரே ஆளா சாப்பிட முடியும்... ப்பா... அதோட டேஸ்ட் இருக்கே ஃபன்டாஸ்டிக்... மொறுமொறுன்னு பன், அதுமேல மைல்ட் மசாலா வாசனையோட பேபிகார்ன்... அதுக்கு மேல், பாதி உருகியும் உருகாமலும் சிறகு சிறகா சீஸ்... கெச்அப்பைத் தொட்டுக் கிட்டு கொதிக்கக் கொதிக்க பிட்ஸா ஒரு வாய்... சில்லுனு, ஐஸ் மிதக்கும் பெப்ஸி ஒரு வாய்... ஆஹா" என்று

# பிட்ஸா, கோக் நோ ப்ராப்ளம்!

கண்கள் கனவில் மிதக்க 15 வயது கிருஷ்ணா விளக்கும் போது, நமக்கே சற்று தடுமாறித்தான் போகிறது.

"பிட்ஸா-ஹட் என்னோட ஃபேவரிட் டேடிங் ஜாயிண்ட். ஆஊன்னா கர்ல்-பிரண்டை அழைச்சுக்கிட்டு வந்திடுவேன்!" என்று பிட்ஸாவைக் காதலோடு கலக்கிறார் கம்ப்யூட்டர் என்ஜினியர் பட்நாயக்.

"வாரத்தில் நான்கு நாட்கள் இங்கே ஆஜராகலேன்னா எனக்குத் தூக்கமாத்திரைப் போட்டாக்கூட தூக்கம் வராது." என்று சிரிக்கிறார் ப.ஆர்.பட்டேல்.

பிட்ஸா காஸ்ட்லியான விஷயம் ஆயிற்றே எப்படி மேனேஜ் பண்ணுறீங்க?

"ஃபிரண்ட்ஸோட வர்றதுனாலே ஷேர் பண்ணிக்கிறோம், நோ ப்ராப்ளம்!" என்று தோளை ஸ்டைலாகக் குலுக்குகிறார்



• ராதிகா பனிராஜ்

கல்லூரி மாணவர் யோகேஷ்.

பிட்ஸா உடம்புக்குக் கெடுதல் இல்லையா?

"தினமுமா சாப்பிடுறோம்? சினிமா இல்லேன்னா அவுட்டிங் போகும்போதுதானே. வாரத்திலே இரண்டு மூணு தடவை சாப்பிடறதுலே ஒண்ணும் உடம்புக்கு வந்திடாது" என்று நம்பிக்கையாகப் பேசுகிறார் ஷாலினி.

இப்படி மாய்ந்து மாய்ந்து கூல்டிரிங்க் குடிக்கிறீர்களே...?

"கூல்டிரிங்க் இல்லாமல் பிட்சாவா - ஐய்யே, நினைச்சுப்பார்க்கவே கொடுரமா இருக்கு!" என்று உணர்ச்சி வசப்படுகிறார் கார்த்திக்.



• ஷாலினி

"பிட்ஸா, பிட்ஸான்னு வெந்ததையும் வேகாததையும் தின்னு உடம்பைக் பாழ் பண்ணிக்கிறதுகள்... உடம்பு வேறே 'புஸ்'ன்னு பலூன் கணக்கா ஊதிண்டே போறது... சொன்னாக் கேட்டாத்தானே... என்ன



• கிருஷ்ணா

ஆனாலும் நம்ப இட்லி, தோசை மாதிரி வருமா? என்று புலம்பும் பெருசுகளின் ஆதங்கத்தை எடுத்துக் கொண்டு டயடீஷியன் ராதிகா பனிராஜிடம் போனோம்.

• யோகேஷ்

"பிட்ஸா சாப்பிடாதே. கோக் சாப்பிடாதே. அதைச் சாப்பிடாதே. இதைச் சாப்பிடாதே என்று உபதேசம் பண்ணுவது சுலபம். ஆனால் நடைமுறை என்று ஒன்று இருக்கிறது.

"கணக்கில்லாத சர்வதேச டீ.வி. சானல்கள், அவற்றில் வரும் விளம்பரங்கள். இவற்றின் மூலம் வெளிநாட்டில் வசிக்கும் மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பார்த்து நாமும் நம்முடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக் கொள்ளவில்லையா?

"குக்கிங் ரேஞ்ஜ், மைக்ரோவேவ் என்று சர்வதேச மாடல்களாகப் பார்த்து பார்த்து வாங்கவில்லையா? நம்முடைய வாழ்க்கை முறையை டீ.வி. எப்படி பாதித்திருக்கிறதோ



• பட்டேல்



• பட்நாயக்



• கார்த்திக்

அதுபோல் குழந்தைகளின் உணவுப் பழக்கங்களையும் அது பாதித்திருக்கிறது. பிட்ஸாவும், பர்கரும், கோக்கும் ஃபாஷனாகிப் போன கதை இதுதான். இந்த யதார்த்தமான கண்ணோட்டத்துக்கு நம்மை நாம் பழக்கிக் கொள்ள வேண்டும்.

"உடல்நல விஷயத்துக்கு வருவோம். ஒரு பதார்த்தத்தை உணவாக உட்கொள்ளும் போது பிராக்ஸிமேட் பிரின்ஸிபில்ஸ் என்று சொல்லப்படும் கார்போஹைட்ரேட் என்ற மாவுச் சத்து, ஃபேட் என்ற கொழுப்புச் சத்து, ப்ரோட்டீன் என்ற புரதச் சத்து மூன்றுமே குறைந்தபட்ச அளவில் இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். அது முக்கியம். இல்லாவிட்டால் nutritional deficiency, அதாவது சத்துப் பற்றாக்குறை ஏற்பட்டுவிடும்.

"பிட்ஸாவை எடுத்துக் கொள்ளுங்கள். அதனுடைய சேர்மானம் என்ன? மைதா, சீஸ், காய்கறி / சிக்கன், தக்காளி சாஸ். இந்த காம்பினேஷனில் எல்லா சத்துக்களும் வந்து விடுகின்றன. ஆகையால் அதை உட்கொள்ளும்போது சத்து பற்றாக்குறை ஏற்படுவதற்கு வழியே இல்லை. இதை என்னால் உறுதியாகச் சொல்ல முடியும். அதோடு, மேற்கொண்டு கேடு விளைவிக்கக்கூடிய தன்மை மேற்படி சொன்ன எந்தப் பொருளுக்கும் கிடையாது.

"சண்டே டைம்ஸ் என்ற பத்திரிகை நடத்தியிருக்கும் ஆய்வில் பெற்றோர்கள்

என்ன சொல்லியிருக்கிறார்கள் தெரியுமா? “பிள்ளைகள், வீட்டில் சாப்பிடாமல் படுத்தும் பொழுது நாங்களே முன்வந்து அவர்களை ஃபாஸ்ட்-ஃபூட் ரெஸ்டாரண்டுகளுக்கு அழைத்துச் சென்றுவிடுவோம் அவர்கள் வயிறு நிறையச் சாப்பிட்டால் போதும் என்று!” ... இதற்கு என்ன சொல்கிறீர்கள்?

“காம்பிளான் விளம்பரம் வந்த பொழுது எல்லா டயடீஷியன்களும் எதிர்ப்பு தெரிவித்தார்கள். ‘100 கிராம் காம்பிளான் சாப்பிட்டால்தான் இவர்கள் விளம்பரப் படுத்தும் அத்தனை சத்துக்களும் கிடைக்கும். ஆனால், ஒரு தம்ளர் பாலில் 100 கிராம் காம்பிளான் கலப்பது என்பது எப்படி சாத்தியம்?’ என்று கேட்டார்கள். உண்மைதான். ஆனால் எட்டுமாதக் குழந்தையின் தாய் என்ற முறையில் சொல்கிறேன், என் குழந்தையை ஒரு தம்ளர் பால் குடிக்க வைப்பதற்குள் போதும் போதும் என்றாகி விடுகிறது. காம்பிளான் கலப்பதால் என் குழந்தையால் ஒரு தம்ளர் பாலையும் குடித்துவிட முடிகிறது என்றால், காம்பிளான், விளம்பரப்படுத்தப் பட்ட சத்தைக் கொடுத்தாலும் பரவாயில்லை, கொடுக்காவிட்டாலும் பரவாயில்லை, அந்த ஒரு தம்ளர் பாலால் கிடைக்கும் சத்தே போதும்.

“அடுத்தது கோக். கோக் குடித்தால் புற்றுநோய் வரும் என்று அமளிதுமளிப் பட்டது. ஆனால், எதுவுமே அளவை மீறினால்தான் காரஸினோஜெனிக் ஆகிறது. அதாவது, புற்றுநோய் ஏற்படுத்தும் தன்மையைப் பெறுகின்றது.

“அமெரிக்காவோடு ஒப்பிடும்பொழுது நம்முடைய குழந்தைகள் குடிக்கும் கோக் ஒன்றுமே இல்லை. அவர்கள் விக்கல் வந்தால்கூட, தேடிப்போய் ‘கோக் கேன்’, ஐ உடைப்பார்களே தவிர எதிரில் இருக்கும் தண்ணீரைக் குடிக்கமாட்டார்கள்.

“ஆனால் இங்கே, 300 மிலி கோக்கை ஒரு ஆளாக நம்மால் சாப்பிடமுடிவதில்லை. ஒன்று, பகிர்ந்துகொள்கிறோம் அல்லது மீதம் வைத்துவிடுகிறோம். அதனால் பயப்பட வேண்டிய தேவையே இல்லை.

“இன்னொரு விஷயம். வெளியே செல்லும் போது எங்காவது தண்ணீரைத் தைரியமாகச் சாப்பிடமுடிகிறதா? சொல்லுங்கள்? அப்படி இருக்கும் பொழுது பழச்சாறை வாங்கிக் குடியுங்கள் என்று சொல்ல நமக்கு எப்படித் தோன்றும்?

"மினரல் வாட்டரைச் சாப்பிடச் சொல்லலாம் என்றால் 'போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள்' என்று ஒரு பக்கம் பயமுறுத்துகிறார்கள். மினரல் வாட்டர் செய்யப்படும் முறையே தவறு என்று இன்னொரு பக்கம் ஒரே போடாக போடுகிறார்கள். ஆகையால், பெப்ஸி, கோக் தான் சுகாதாரத் தீர்வு என்று தோன்றுவது இயற்கை. காரணம், அவற்றைக் கார்பனேஷன் செய்யும்பொழுது எல்லா கிருமிகளும் அழிந்து விடுகின்றன.

"அப்படி என்றால் பிட்ஸாவும் கோக்கும் கெடுதலே இல்லை என்கிறீர்களா?

"பிட்ஸாவை அளவுக்கு அதிகமாக உட்கொள்ளும்போது உடல் பெருக்கிறது. உடல் பருமனால் ஏற்படும் பிரச்னைகள் ஆரம்பிக்கின்றன - உண்மைதான். கோக் என்பது 'எம்ப்டி - காலரி' உணவு. அதாவது, எந்தச் சத்தையும் தராமல் காலரிகளை ஏற்றுகின்ற ஒன்று. அதுவும் உண்மைதான்.

"ஆனால் அதற்காக 'இரண்டையும் தொட்ட விரலால் தொடக் கூடாது' என்று 144 போடாதீர்கள். காரணம், வேண்டாம், வேண்டாம் என்று சொல்லச் சொல்ல, இன்னும் இன்னும் என்று சாப்பிடத் தோன்றும்.

"வேண்டியதை, கூடக் குறையச் சாப்பிடுங்கள். ஆனால் ஏதாவது ஒரு உடற்பயிற்சியை விடாமல் செய்யுங்கள் என்று சொல்லிப்பாருங்கள் குழந்தைகளிடம். இந்த அறிவுரையைக் கடைபிடிப்பது எளிது.

"உடற்பயிற்சி என்பது வெறும் எக்ஸர்ஸைஸாக இருக்க வேண்டும் என்பதில்லை. கிரிக்கெட்டாக இருக்கலாம். டென்னிஸாக இருக்கலாம், யோகாவாக இருக்கலாம். எம்.டி.வியில் வரும் டிஸ்கோவும் ராப்பும் தான் பிடிக்கின்றன என்றால், அவற்றைச் சொல்லித்தரக்கூட பள்ளிகள் வந்துவிட்டன - அங்கே போகலாம்.

"பிடித்ததைச் சாப்பிட்ட திருப்தி, பிடித்ததைச் சாப்பிட்டதனால் உடல் கெட்டுப் போய்விடாமல் பார்த்துக் கொண்ட திருப்தி இரண்டும் கிடைக்கும்!"

என்று விளக்கிவிட்டு நமக்கு கோக் தந்து உபசரித்தார் ராதிகா பனிராஜ்!

**- கிருஷ் / அப்பு**

படங்கள் : **ஜரிஸ், ராஜன்**

முப்பது கால்ஃப் பந்தயங்களில் வெற்றி வாகை சூடியிருக்கிறார் பாக்-ஸெ-ரி. சமீபத்திய வெற்றிக்கனி 'லாங்ஸ் ட்ரக்ஸ் சாலன்ஜ்' சர்வதேச கால்ஃப் போட்டியில்.

தென் கொரியாவின் 'பெருமைச் சின்னமான' இவர் இந்த நிலைக்கு வந்ததற்கு இவரது அப்பாதான் காரணம். ஆனால் மகளைத் தயார்ப்படுத்த அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் மிக பயங்கரமானவை.

இந்தத் தந்தை நிழலுலகத் தாதாக்களுடன் தொடர்பு கொண்டிருந்தவர். ஒருமுறை எதிர்க் கோஷ்டியினரோடு நடந்த தகராறில் இவரது முதுகில் கத்திக்குத்து. அதற்குப் பிறகுதான் தம் குடும்பத்தில் கவனம் செலுத்த வேண்டும் என்று முடிவெடுத்தார்.

# ஓட ஓட விரட்டிய அப்பா!



பாக்-ஸெ-ரி மீது முதல் கவனம். இரண்டு சகோதரிகளுக்கு நடுவே பிறந்த பாக், சிறு வயதிலேயே வேகமாக ஓடுவார். தினமும் பதினைந்து மாடிக் கட்டடம் ஒன்றை வேகமாக ஓடிக் கடக்க வேண்டும் என்பது தந்தை இட்ட கட்டளை - ஒருமுறை அல்ல மூன்று முறை. பத்து வயதானவுடன் மகளை அழைத்துக் கொண்டு தினமும் தமது தந்தையின் சமாதி உள்ள இடுகாட்டிற்குச் செல்வார். அங்கு ஆயிரம் முறை அவள் ஓட வேண்டும். அந்த இடத்தில் ஓடினால் தாத்தாவின் ஆசியும் பேத்திக்குக் கிடைக்கும் என்பது தந்தையின் அசாத்திய நம்பிக்கை!

இந்த அகர முயற்சிகள் போதாதென்று வேறொரு கொடுமையான காரியத்தையும் செய்தார் அந்த அப்பா. தெருநாய்களைக் கொண்டு மகளைத் துரத்த வைப்பாராம்! தவறிப் போய்த் தெருநாய் மகளைப் பிடித்து விட்டால், அந்தப் பீதி போதாதென்று தாம் வேறு மகளைப் பெரிதும் கடிந்து கொள்வாராம் இந்தக் குரூரமான தந்தை!

'எதிலுமே நான் முதலாவதாக வர வேண்டும் என்ற வெறி என் அப்பாவுக்கு. ஆனால் மனிதர்கள் இயந்திரங்கள் இல்லையே. சில சமயம் கால்ஃப் விளையாட்டில் ஏதாவது தவறுகள் செய்துவிட்டால் 'நீ உன் மனத்தில் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய்?' என்று கத்துவார். பலமுறை என் அறையில் இதையெல்லாம் எண்ணிக் கதறியிருக்கிறேன்' என்று கூறுகிறார் இந்த வீராங்கனை.

கொடூரமான பயிற்சிகளை அளித்தாலும் 'எதிலும் வெற்றி வெறியும், தீவிர கட்டுப்பாடும் தேவை' என்ற அடிப்படை உண்மைகளை அப்பா அளித்ததை மகள் மறந்து விடவில்லை.

தேசிய அளவில் கால்ஃப் போட்டியில் சாதனை படைத்த பிறகு, புளோரிடா மாநிலத்துக்குச் சென்று அங்குள்ள பிரபல சர்வதேச கால்ஃப் பயிற்சியாளர் டேவிட் லெட்பீட்டரிடம் தீவிர பயிற்சி எடுத்துக் கொண்டார். தொடக்கத்தில் ஆங்கிலமே தெரியாததில் பல சிரமங்களை அனுபவித்திருக்கிறார். 'ஹி, ப்ராக்டிஸ், பைபை' ஆகிய வார்த்தைகளை மட்டுமே வைத்துக்கொண்டு ஆறு மாதங்கள் சமாளித்தாராம். பிறகு கொஞ்சம் கொஞ்சமாக ஆங்கிலம் வசப்பட்டிருக்கிறது. கூடவே சர்வதேச விருதுகளும், பட்டங்களும். இப்போதெல்லாம் இவரை 'டெண் டைகர் உட்' என்றே அழைக்கிறார்கள்!

— குல்லூ

# அதிசயங்கள் நிகழ்த்தும் அற்புத மருத்துவர்

## அறுவை சிகிச்சை இல்லாமலேயே இதய நோய் குணமான அதிசயம்!



முக்திரியாபேகம், அந்தோனி பிள்ளை தெரு, கிழக்கு தாம்பரம், சென்னை – 59.

எனக்கு இதயத்தில் அடைப்பும் வலியும் அடிக்கடி வந்ததால் நான் சில ஆண்டுகளாக மயக்கம் மற்றும் உடல்பலவீனத்தால் அவதியுற்றேன். இதனால் சென்னையில் உள்ள ஒரு பிரபல மருத்துவ மனைக்கு சென்று சிகிச்சை பெற்றேன். ஆனால் அங்கு என்னை சோதனை செய்து என் இதயத்தில் ஒரு மேஜர் ஆ·பரேசன் செய்ய வேண்டும் என்று கூறிவிட்டார்கள். இதனால் என் மனம் மிகவும் வேதனைப்பட்டு சில நண்பர்கள் மூலம் **ரப்பானி வைத்யசாலா** சென்றேன். இங்கு எனக்கு நல்ல சிகிச்சை கிடைத்ததின் மூலம் என் நோய் படிப்படியாக இப்போது குறைந்துவிட்டது. நான் இப்போது மகிழ்ச்சியாக இருக்கிறேன்.

## மலட்டுத் தன்மை என்பதே இல்லாமல் போச்சு!



குழந்தை இல்லை என்று நாங்கள் ஏறாத ஆஸ்பத்திரி வாசல்கள் இல்லை. பிறகு பலரின் ஆலோசனையைக் கேட்டு ரப்பானி வைத்தியசாலாவிற்கு வந்து தொடர்ந்து மருந்து சாப்பிட்டதில் குழந்தை பெற்று தனது மன மகிழ்ச்சியை அனைவருக்கும் தெரிவிக்கின்றனர். சென்னை தேனாம்பேட்டையைச் சேர்ந்த ஜெயசங்கர்–மாரியம்மாள் தம்பதி.

## மருந்தில்லை என்ற சோரியாஸிஸ் மாயமாய் மறைந்து போச்சு!



நான் கடந்த சில வருடங்களாக உடம்பில் அரிப்பு ஏற்பட்டு சோரியாசிஸ் என்ற நோயாலும், கடுமையான மூட்டு வலியாலும் பாதிக்கப்பட்டேன். பல சிகிச்சைகளும் எனக்கு பலன் தராமல் ரப்பானி வைத்தியசாலாவில் காண்பித்தேன். தொடர்ச்சியாக சில மாதங்கள் அங்கு பெற்ற சிகிச்சையின் பலனாக என் பிரச்சனைகள் அனைத்தும் தீர்ந்தது தெரிவிக்கிறார் திருமதி பத்மா ஸ்வாமிநாதன். ரெய்ன் சிச் அபார்ட்மெண்ட்ஸ், மௌனசாமி மடம் தெரு, வெங்கடபுரம், சென்னை – 53.

## கர்ப்பப்பை ஆபரேஷன் என்ற பேச்சுக்கே இடமில்லை என்றாச்சு!





வயிற்று வலிக்காக சென்னையில் உள்ள ஒரு பெரிய ஆஸ்பத்திரியில் 3 ஆண்டு வைத்தியம் பார்த்தபின் கர்ப்பப்பையை எடுத்துவிடச் சொன்னார்கள். ரப்பானி வைத்தியசாலாவில் 3 மாதம் மருந்து சாப்பிட்டதில் சரியாப் போச்சு. கர்ப்பப்பையை எடுக்க தேவையில்லை என்று அதே ஆஸ்பத்திரியில் சொல்லிவிட்டார்கள் என்கிறார் போரூர், அண்ணாசாலையைச் சேர்ந்த கோவிந்தராஜின் மனைவி **G.** செல்வி.

## பல ஆண்டுகளாக மூட்டுவலியால் அவதிப்பட்டவர் முகம் மலர்ந்த காட்சி!



கடந்த பத்து ஆண்டாக கை, கால், இடுப்பு, மூட்டுவலிகளில் கடுமையான வலியினால் பாதிக்கப்பட்ட நிலையில் பல மருத்துவர்களிடம் காண்பித்தும் ஆபரேஷன்தான் முடிவு என்று கூறினார்கள். என்ன செய்யலாம் என்று நான் நினைத்த வேளையில் ஏற்கெனவே பாதிக்கப்பட்டு குணமடைந்த ஒரு நண்பரின் ஆலோசனைப்படி ரப்பானி வைத்தியசாலை **டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்** அவர்களிடம் சென்று மருந்து சாப்பிட்டதில் இன்று 10 ஆண்டுகளுக்கு முன் இருந்ததைவிட உடல் வலுவாகவும் மன நிம்மதியாகவும், எல்லா சங்கடங்களும் தீர்ந்து நிம்மதியாக வாழ்கிறேன் என்று தெரிவிக்கிறார். **D.** வசந்தா, 4–வது குறுக்குத் தெரு, சாலிகிராமம், சென்னை.

**மேலும் கை கால் வாதம், மூளை வளர்ச்சி குறைவு, லிவர் பெயிலியர், மூலம், நரம்புத் தளர்ச்சி, ஆண்மைக் குறைவு, யானைக்கால் வியாதி, காக்காய் வலிப்பு போன்ற சகல வியாதிகளுக்கும் சிறந்த சிகிச்சை அளிக்கப்படுகிறது.)**

மாதந்தோறும்
Dr. சையத் சத்தாரின்
யுனானி மருத்துவ மாத
இதழ் கடைகளில் கேட்டு
வாங்குங்கள்

டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்
ரப்பானி வைத்ய சாலா
73/1, டாக்டர் பெசன்ட் ரோடு,
மீர்சாகிப்பேட்டை மார்க்கெட் அருகில்,
இராயப்பேட்டை, சென்னை – 600 014.
போன்: 8510969, 8410874



சிதம்பரம் பிளான்..?

**பா**ரதீய ஜனதா தலைவர் எஸ்.கிருபாநிதி போட்டியிடும் மானாமதுரை (தனி) தொகுதியில், அவரை எதிர்த்து த.மா.கா.வின் துணைத் தலைவர்களில் ஒருவரான கே. பாரமலை போட்டியிடுகிறார். இவர் 1984ல் இத் தொகுதியிலிருந்து எம்.எல்.ஏ.வாகத் தேர்ந்து எடுக்கப்பட்டவர். அதற்குப் பிறகு தி.மு.க., அ.தி.மு.க., இந்திய கம்யூனிஸ்ட் கட்சிகள் வெற்றிப் பெற்றுள்ளன.

கிருபாநிதி இத்தொகுதிக்குச் சிறிதும் தொடர்பில்லாத புதியவர். பாரமலை இத் தொகுதியிலுள்ள திருப்புவனத்தைச் சார்ந்தவர் என்றாலும் தற்போது சென்னை வாசியாகிவிட்டார். 15 ஆண்டுகளுக்குப் பிறகு இத்தொகுதிக்கு வந்திருப்பதால் மக்கள் மத்தியில் இருவரும் புது முகங்களாகத் தெரிகின்றனர்.

இந்நிலையில் மானாமதுரையைச் சேர்ந்த டாக்டர் எஸ்.செல்வராஜ் திடீரென்று சுயேச்சையாகப் போட்டியிடுகிறார். இவர் மானாமதுரை நகரில் அறிமுகமானவர். பல்வேறு சமூக அமைப்புகளில் உறுப்பினராகவும் தலைவராகவும் இருந்து கடந்த பத்து ஆண்டுகளாக சமூகப் பணிகள் செய்து வருகிறார். இவருக்கு மானாமதுரை ரஜினிமன்றம் ஆதரவு அளித்துள்ளது. செல்வராஜ் ஏற்கெனவே த.மா.கா.வின் மாவட்டத் துணைத் தலைவராக இருந்தவர். த.மா.கா. ஜனநாயகப்பேரவைக்குத் தாவி அதிலிருந்து விலகி, சுயேச்சையாகப் போட்டியிடுகிறார்.

தொகுதியின் கிராமப் புறங்களில் இவருக்கு அறிமுகம் குறைவாக இருந்தாலும், மானாமதுரை நகரில் உள்ளூர்க்காரர் என்ற வரவேற்பு மக்களிடையே இருக்கிறது.

கணிசமான அளவு இவர் வாக்குகளைப் பிரிப்பார் என்ற நிலையில் அது பாரதீய ஜனதாவின்



## தொகுதி ரவுண்ட்ஸ்

வெற்றி வாய்ப்புக்கு வழிவகுக்கும் என்கிறார்கள்.

அ.தி.மு.க.வினரின் சுறுசுறுப்பான தேர்தல் பணிகள் பாரமலைக்குப் பலம் சேர்த்துக் கொண்டிருக்கிறது.

கிருபாநிதியை நேரடியாக ஆதரிப்பதற்குப் பதிலாக, செல்வராஜ் சுயேட்சையாக நின்று த.மா.கா. வாக்குகளைப் பிரித்து பலவீனப்படுத்துவதன் மூலம் கிருபாநிதிக்கு வெற்றி வாய்ப்புத் தேடலாம் என்பது ப. சிதம்பரத்தின் செயல்திட்டமாம்... என மக்கள் பேசிக் கொள்கிறார்கள்.

ஆனால் தமக்கும் சிதம்பரத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்று மறுக்கிறார் டாக்டர் செல்வராஜ்.

**பணபலம்தான் முடிவு செய்யுமாம்!**

# புதுமுகம் பழைய

**அ**.தி.மு.க.வின் சார்பில் போட்டியிடும் வ.து.நடராஜன் முக்குலத்தோர் சமுதாயத்தைச் சேர்ந்தவர். முன்னாள் அமைச்சர் கண்ணப்பன் யாதவர் சமுதாயத்தைச் சேர்ந்தவர். இருவருமே தங்கள் சமுதாயத்தினர் வாக்குகள் தங்களுக்கு முழுமையாகக் கிடைக்கும் என்று நம்புகின்றனர்.

இளையான்குடி தொகுதியில் கணிசமான அளவு இஸ்லாமியர்களின் வாக்குகள் வேறு உள்ளன. இந்தத் தொகுதியிலுள்ள ஜமாத் அமைப்புகள் அ.தி.மு.க.வின் வேட்பாளரை ஆதரிக்கும்படி இரகசியமாக முடிவு

செய்துள்ளதாகக் கூறுகிறார்கள். கண்ணப்பன் அமைச்சராக இருந்த காலத்தில் இளையான்குடி இஸ்லாமியர்களுக்குச் சில பணிகள் செய்து கொடுத்திருப்பதால் குறிப்பிட்ட அளவு வாக்குகள் தமக்குக் கிடைக்கும் என்று நம்புகிறார்.

முன்னாள் அமைச்சர் தென்னவன், கண்ணப்பனுக்கு ஆதரவாக முக்குலத்தோர் வாக்குகளைப் பிரிக்கவும், முன்னாள் அமைச்சர் தமிழ்க்குடிமகன்,

* டாக்டர் செல்வராஜ்



* கண்ணப்பன்





* டாக்டர் கிருபாநிதி

ழகம்!

வ.து. நடராஜனுக்கு ஆதரவாக யாதவர் வாக்குகளைப் பிரிக்கவும் செயல்பட்டுக் கொண்டிருப்பதாகப் பேசிக் கொள்கிறார்கள்.

கண்ணப்பனுக்குச் சின்னம் எதுவும் ஒதுக்கப்படாத நிலையில் பல வண்ணங்களில் சுவர் விளம்பரங்கள் சின்னம் வரையும் இடத்தை வெற்றிடமாக வைத்துக் கொண்டு தொகுதி முழுவதும் எழுதப்பட்டுவிட்டன.

மக்கள் தமிழ் தேசம் கட்சியின் ஊழியர் கூட்டத்திற்கே சுமார் 200 வாகனங்களில் வலம் வந்த கண்ணப்பனைக் கண்டு தொகுதி எதிர்க் கட்சிகள் மிரண்டு போயுள்ளன. ம.தி.மு.க.வும் தனது வேட்பாளரை நிறுத்தியுள்ளது. இத்தொகுதியின் வெற்றியைப் பண பலம்தான் முடிவு செய்யும் என்கின்றனர் நடுநிலை வாக்காளர்கள்.

### தி.மு.க.வின் நம்பிக்கை!

ராமநாதபுரம் தொகுதியில், தி.மு.க. வேட்பாளரான அமைச்சர் இரகுமான்கானும், அ.தி.மு.க. வேட்பாளர் அன்வர் ராஜாவும் இஸ்லாமியர்கள் என்பதால் இஸ்லாமியர்களின் வாக்கு யாருக்கு என்ற நிலை எழுந்துள்ளது.

இரு கட்சிகளிலுமே உட்கட்சிக் கோஷ்டிப் பூசல்கள் தலைத்தூக்கியுள்ளன. பிரசாரம் மந்தமாகவே இருக்கிறது.

இராமநாதபுரத்தில் பிறந்தவர்; அங்கேயே இருப்பவர் என்பதால் அமைச்சர் ரகுமான்கானைவிட அன்வர் ராஜாவுக்கே வாய்ப்பு அதிகம் இருப்பதாகக் கூறப்படுகிறது.

இருந்தாலும், "இரகுமான்கான் அமைச்சராக இருந்து பல்வேறு நலத்திட்டப் பணிகளைத் தொகுதிகளில் செய்திருக்கிறார். அந்தத் திட்டங்கள் அவரை ஜெயிக்க வைக்கும் என்பதில் சந்தேகமில்லை" என்று உறுதியாக நம்புகிறது தி.மு.க. அணி.

- சிங்கார வடிவேல்.

# கற்பூர மூளை

கலைஞர் கதாநாயகனாக நடித்த 'உதய சூரியன்' நாடகம் மிகுந்த வரவேற்பைப் பெற்ற ஒன்று. குறுகிய காலத்திலேயே இருபத்தைந்து முறைகளுக்கு மேல் மேடை ஏறிய அந்நாடகத்தில், தொடர்ந்து என்னால் நடிக்க முடியாமல் போய்விட்டது. காரணம், எனக்கு நிறைய சினிமா வாய்ப்புகள் வந்து கொண்டிருந்ததுதான்.

பிறகு 'உதய சூரியன்', 'காகிதப்பூ' என்று பெயர் மாற்றப்பட்டு, நடிக்கப்பட்டது. (அப்போது, கலைஞருடன் நடித்தவர் தான் ராஜாத்தி அம்மாள்.)

கலைஞர் பற்றிய இன்னொரு சம்பவமும் என்னால் மறக்க முடியாது. 'விடை கொடு தாயே' என்ற நாடகம் சிவகங்கை பகுதியில் கல்லல் என்ற ஊரில் ஏற்பாடாகி இருந்தது. அதற்குத் தலைமை தாங்க அழைக்கப்பட்டிருந்தவர் கலைஞர்தான். நாடகம் பார்க்க செட்டி நாட்டைச் சேர்ந்த பலரும் அன்று வந்திருக்கிறார்கள். நாடகம் நடக்கிறபோது அவர்கள் தங்களுக்குள், "இதோ நடிக்கிற மனோரமா, நம்ம செட்டி நாட்டுப் பெண்தான் தெரியுமா? என்று குறிப்பிட்டு, என் நடிப்பை காட்சிக்குக் காட்சி ரசித்துப் பாராட்டிக் கொண்டிருந்திருக்கின்றார்கள். அவர்கள் அப்படிப் பேசுவதைக் கலைஞரும் கேட்டிருக்கிறார்.



மேடையில் அவர் பேச வந்தபோது, "பார்வையாளர்களில் ஒருவராக அமர்ந்து நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். செட்டி நாட்டுப் பிரமுகர் பலரும், மனோரமா தங்களது ஊரைச் சேர்ந்தவர் என்று ரொம்பப் பெருமைபட்டுக் கொண்டார்கள். இதுபோலவே என்னாலும், மனோரமா எங்கள் ஊரைச் சேர்ந்தவர் என்று பெருமையாய்க் குறிப்பிடமுடியும். காரணம், மனோரமாவின் அம்மா பிறந்ததும், மனோரமா பிறந்ததும் திருவாரூர் பக்கத்தில்தான். எனவே, மனோரமாவை எங்கள் ஊரைச் சேர்ந்தவர் என்று சொல்ல நானும் பெருமைப்பட்டுக் கொள்ள முடியும்" என்றார்.




ஜெயலலிதாவுடன் நான் நடித்த முதல் படம் 'கலாட்டா கல்யாணம்' என்பதாக நினைவு. அந்தப் படத்தின் ஷூட்டிங்கில் அழகான இளம் பெண்ணாக நான் ஜெயலலிதாவைச் சந்தித்தபோது, என் நினைவுகள் பின்னோக்கிச் சென்றன. நடிகர் வி. கோபாலகிருஷ்ணனின் நாடகக் குழுவில் நான் அப்போது நடித்துக் கொண்டிருந்தேன். ராஜா அண்ணாமலை மன்றத்தில் ஒரு நாள் மாலை ஒரு நாடகம். பெயர் நினைவுக்கு வரவில்லை. நான் மேக் அப் போட்டுக் கொண்டிருந்த சமயத்தில், நாடகம் பார்க்க வந்திருந்த நடிகை சந்தியா என்னைப் பார்ப்பதற்கு வந்தார். அவருடன் கூட ஒரு பத்து, பன்னிரண்டு வயதுப் பெண்ணையும் அழைத்துக் கொண்டு வந்திருந்தார். அந்தப் பெண்ணை, தன்னுடைய மகள் என்று அறிமுகப்படுத்தினார். அந்தச் சிறுமியைப் பார்த்தேன். இத்தனை சிவப்பாக, அழகாகக் கூட ஒரு பெண் இருக்க முடியுமா? என்று ஆச்சரியப்பட்டுப் போனேன். தங்க விக்கிரகம்போல இருந்த சிறுமி ஜெயலலிதாவை நான் முதன் முதலாகப் பார்த்தது என் நினைவுக்கு வந்தது. அன்றைய அழகுக்கு இன்னும் மெருகு ஊட்டியது போல இருந்தார் ஜெயலலிதா.

ஆச்சி மனோரமா

# ஜெயலலிதாவுக்கு!



'கலாட்டா கல்யாணம்' படத்தில் நான்கு சகோதரிகள். நான் மூத்த அக்கா. அதன்பின் ஜோதிலட்சுமி, மூன்றாவது ஜெயலலிதா. கடைசி தங்கை சச்சு. இதற்குப் பிறகு நாங்கள் நிறைய படங்களில் சேர்ந்து நடித்திருக்கிறோம். பிரேமலு, பின்னெலு என்ற தெலுங்கு படத்தில்கூட நாங்கள் சேர்ந்து நடித்திருக்கிறோம். நாகேஸ்வரராவ் ஹீரோ. ஜெயலலிதா ஹீரோயின். நான் ஜெயலலிதாவின் அம்மாவாக நடித்தேன். ஒரு ஆங்கிலோ இந்தியப் பெண் மணி கதாபாத்திரம் அது. கான்வென்ட்டில் படித்த ஜெயலலிதாவுடன், ரொம்ப படிக்காத நான் ஆங்கிலோ இந்திய மாதுவாக நடித்தது சுவாரசியமான அனுபவம்தான்.

**நா**டகங்களில் நான் பிசியாக இருந்த நாட்களில், தினம் வெவ்வேறு நாடகங்களில் நடிக்க வேண்டியிருக்கும். அன்றைய தினம் நாடகம் முடிந்தவுடன், மறுநாள் நாடகத்துக்கான வசன பாடத்தைக் கொடுப்பார்கள். வசனம் ஏற்கெனவே படித்தது தான் என்றாலும் கூட, துளியும் வசனத் தடுமாற்றமில்லாமல், மேடையில் நடிப்பதற்கு இடைவிடாத பயிற்சி அவசியம். நான் எந்த பாடத்தைக் கொடுத்தாலும் சரி. அதை ஓரிரு தடவை படித்தால் போதும், எளிதில் ரசித்துக் கொண்டு, மனப்பாடம் செய்து விடுவேன். எப்படி இத்தனைச் சீக்கிரமாக, வசனங்களை நீ மனப்பாடம் செய்து விடுகிறாய்? என்று மற்றவர்கள் என்னை ரொம்ப ஆச்சரியமாய்க் கேட்பார்கள். ஆனால், இந்த வசனமனப்பாட விஷயத்தில், என்னை மிகவும் ஆச்சரியப்படுத்துவார் ஜெயலலிதா.

எனக்கு ஜெயலலிதாவை ரொம்பப் பிடிக்கும். அவருக்கும் என் மேல் ரொம்ப பிரியம். ஷூட்டிங்கில், நானும், அவரும் உட்கார்ந்து ஏதாவது பேசிக் கொண்டே இருப்போம். படத்தின் உதவி இயக்குனர், அடுத்து

எடுக்கப்படவிருக்கும் காட்சிக்குரிய வசனங்களை எடுத்துக் கொண்டு வருவார். ஒன்றரை, ரெண்டுபக்கம் வசனம் அவருக்கு இருக்கும். உதவி டைரக்டரையே விட்டு, வசனத்தை ஒரு தடவை படிக்கச் சொல்லுவார். சில விநாடிகள் கண்களை மூடிக் கொண்டு இருப்பார். சில வசனங் களைக் குறிப்பிட்டு, இது இப்படித்தானே! அது சரிதானே! என்று கேட்டுக் கொள்ளுவார். அவ்வளவுதான். காட்சியைப் படம்பிடிக்கும் முன்பு, டைரக்டர் ரிகர்சல் பார்க்கிறபோது, சரியானபடி, வசனம் பேசிவிடுவார். நான் ஆச்சரியப்பட்டுப் போவேன். அப்படியொரு கற்பூர மூளை ஜெயலலிதாவுக்கு.

**வ**சனம் தான் என்று இல்லை; டான்ஸ் என்றாலும் அப்படித்தான். இரண்டு பேரும் பேசிக் கொண்டிருக்கிறபோது, டான்ஸ் ஒத்திகை என்று நான் எழுந்தால், ஜெய லலிதாவோ, டான்ஸ்தானே! இருங்க போக லாம்!'' என்பார். நான் உடனே, "உங்களுக் கென்ன, டான்ஸ் மாஸ்டர் ஆடிக்காட்டி னால், அதை கப்பென்று பிடித்துக் கொண்டு, பிரமாதமாக ஆடிவிடுவீர்கள். ஆனால் நான் ஒத்திகை பார்த்து, ஓ.கே. ஆக வேண்டாமா? என்பேன். நான் பார்த்துப் பார்த்து வியந்த திறமைசாலி அவர்!

**கா**லையில் மேக் அப் போட்டுக் கொண்டு, ஷூட்டிங்கிற்கு வந்தார் என்றால், மாலை, ஷூட்டிங் முடிந்து புறப்பட்டுப் போகிறவரை, அந்த மேக்அப் துளியும் கலையாமல், அப்படியே இருக்கும். ஹேர் ஸ்டைலும் அப்படித்தான். துளியும் கலையாது.

ஷூட்டிங்கில், அவருக்கு ஒர்க் இல்லை யென்றால், ஏதாவது ஒரு புத்தகம் படித்துக் கொண்டிருப்பார். போயஸ் கார்டனில் அவருடைய வீட்டுக்கு, அப்போதெல்லாம் நான் அடிக்கடி போவேன். வீட்டில் ஒரு பெரிய அறை நிறைய புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். எந்த ஒரு விஷ யத்தைப் பற்றியும் அவரால் பேச முடியும். நான் அவர் வீட்டுக்குப் போகிறபோது, என் மகன் பூபதியையும் அழைத்துக் கொண்டு போவது உண்டு. அவனிடம் தன் லைப்ரரியிலிருந்து புத்தகங்களை எடுத்துக் கொடுத்து, 'படித்துப்பார்' என்பார். அந்த லைப்ரரியைப் பார்க்கிறபோது, இத்தனை புத்தகங்களைப் படித்த புத்திசாலியான பெண் ஜெயலலிதா நமக்கு சிநேகிதியாக இருக்கிறாரே என்று ரொம்ப பெருமைப் பட்டுக் கொள்ளுவேன்.

இன்றளவும், தினமும் காலையில் எழுந்த வுடன், நான் முகம் கழுவிக் கொள்ளுகிற போது, தவறாமல் ஜெயலலிதாவை நினைத்துக் கொள்ளுகிறேன். இது கடு களவும் பொய் இல்லாத நிஜம். ஆம்! ஒரு தடவை, அவருடன் பேசிக் கொண்டிருந்த போது, காலையில் எழுந்தவுடன், முகம் கழுவிக் கொள்ளுகிறபோது கண்களை எப்படி கழுவ வேண்டும் என்று அவர் சொல்லிக் கொடுத்தார். கையில் தண்ணீரை எடுத்து, கண்களைச் சுற்றிலும் தெளித்து, விரல்களால் தடவி... அதை எனக்குச் செய்து கொள்ளத்தான் தெரிகிறதேயொழிய, வார்த்தையால் விளக்கத் தெரியவில்லை. தொடர்ந்து மேக்அப் போடுவது, அதிக பவரான வெளிச்சமான ஷூட்டிங் சூழ்நிலை, தொடர்ந்து நடிப்பின் காரணமாக ஏற்படும் சோர்வு இதுபோன்றவற்றுக்கு அது ஒரு நல்ல ரிலீஃப். அது மட்டுமில்லை. இத்தனை வயசிலும் நான் கண்ணாடி




"அரசியலுக்கு வர்றதுக்குப் பதிலா வக்கீலாப் போயிருக்கலாம் நான்!"

"ஏங்க?"

"முப்பது கோடி சுருட்டிய ஊழல் வழக்கில் இதுவரை என் வக்கீலுக்கு மட்டும் 27 கோடி ஃபீஸா அழுதிருக்கேன்!"

- உ. ராஜாஜி

அணியாமல், நியூஸ் பேப்பர் படிக்கிறேன் என்றால், அதற்கு நான் கடை பிடிக்கிற இந்த முறைதான் காரணம் என்றும் நினைக் கிறேன்.

மனத்தில் ஒன்றை நினைத்து விட்டார் என்றால், அதை எப்படியும் சாதித்துவிட வேண்டும் என்ற துடிப்பு அவருக்கு உண்டு. அதே சமயத்தில், அவரைப் பற்றி யாராவது தவறாகப் பேசிவிட்டாலோ, அவமானப் படுத்தும்படியாக நடந்து கொண்டு விட்டாலோ அவர் பொறுத்துக் கொள்ள மாட்டார்.

ஒரு தடவை, ஒரு நடனக்காட்சியை எடுத்துக் கொண்டிருந்தார்கள். அந்தப் படத்திற்கு டான்ஸ் மாஸ்டராகப் பணி யாற்றியவர் கொஞ்சம் திமிர் பிடித்த ஆசாமி. ஒரு பாடலுக்கான நடன மூவ் மெண்ட்களை கம்போஸ் செய்து, அதை அப்படத்தின் கதாநாயகியான ஜெயலலிதா வுக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந் தார். ஒற்றைக்காலில் நின்று கொண்டு, இன்னொரு காலை வளைத்து, சுழன்று ஆடும்படியாக ஒரு மூவ்மெண்ட்.

டான்ஸ் மாஸ்டர், அதைச் செய்து காட்டி, ஜெயலலிதாவையும் அதேபோல ஆடச் சொன்னபோது, முயற்சி செய்து பார்த்த அவர், சற்று சிரமப்பட்டார். "இந்த மூவ்மெண்ட் வேண்டாம்! மாற்றிவிடுங்கள்!" என்றார். இதைக் கேட்டவுடன் டான்ஸ் மாஸ்டர், நக்கலாக ஒரு பார்வை பார்த்து விட்டு, 'உங்களுக்கு ஆட வரலைன்னு சொல்லுங்க' என்றார் கிண்டலான குரலில். ஜெயலலிதாவுக்குக் கோபம் வந்து விட்டது.

"எனக்கு ஆட வரவில்லை என்பதால், மூவமெண்ட்டை நான் மாற்றச் சொல்ல வில்லை. நீங்கள் பாண்ட் போட்டுக் கொண்டிருப்பதால், ஒரு காலை வளைத்து சுழன்று ஆட சுலபமாக முடிகிறது. நான் அணிந்திருக்கும் காஸ்ட்யூம் பாவாடை. இதை அணிந்து கொண்டு, அப்படி ஆடி னால் சரிப்படாது. எனவேதான் மாற்றச் சொன்னேன்" என்றார் ஜெயலலிதா.

'ஆடமுடியாததற்கு இப்படி ஒரு விளக்கமா? என்கிறார் போல அவரைப் பார்த்தார் அந்த டான்ஸ் மாஸ்டர். அதை கவனித்த ஜெயலலிதா, "கொஞ்சம் இருங்கள்" என்று சொல்லிவிட்டுப் போய், சில நிமிடங்களில் திரும்பி வந்தார். தாம் ஏற்கெனவே அணிந்திருந்த பாவாடைக்குப் பதிலாக, சுழன்று ஆடுவதற்குச் சௌகரிய





" 'முப்பது நாளில் வீரப்பனைப் பிடிக்கலாம்'ன்னு நீங்க எழுதின புது புத்தகம் சேல்ஸ்ல தூள் பறக்குதே. என்ன காரணம்?"

"புத்தகத்துக்கு முன்னுரை வீரப்பன் எழுதினது தான் காரணம்ங்க!"

- கே.ஜி.எஸ். கோவிந்தன்

மான உடைக்கு அவர் மாறி இருந்தார். 'இப்போது பாருங்கள்!' என்று சொல்லி விட்டு, டான்ஸ் மாஸ்டர் செய்து காட்டிய, அதே மூவ்மெண்ட்டை வெகு அற்புதமாக, ஆடிக் காட்டினார். அப்போது டான்ஸ் மாஸ்டரின் முகத்தைப் பார்க்க வேண்டுமே!

தமிழ்த் திரையுலகில் எத்தனையோ நடிகைகள் இருந்திருக்கிறார்கள்; இருக் கிறார்கள். ஆனால் இவர்கள் எவருக்குமே கிடைக்காத, தமிழக முதலமைச்சர்கள் நான்கு பேருடன் நடிக்கும் அரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்ததில் பெரும் சந்தோஷம். அண்மையில் சன் டீ.வி.யில் ஒளிபரப்பாகும் கோடீஸ்வரன் நிகழ்ச்சியில்கூட நான்கு முதலமைச்சர்களுடன் நடித்த நடிகை கே.ஆர். விஜயா, சரோஜா தேவி, சாவித்திரி, மனோரமா இவர்களில் யார் என்று கேட்டபோது எனக்குச் சந்தோஷம். ஆனால் அந்த கேள்விக்கு மனோரமா என்ற சரியான பதில் அந்த போட்டியாளருக்குத் தெரிய வில்லை என்றபோது சின்ன ஏமாற்றம்!

(முற்றும்)

சந்திப்பு: எஸ். சந்திரமௌலி

பிராட்வே பஸ் நிலையத்தருகிலிருந்த பூக்கடைகளையெல்லாம் அப்புறப்படுத்தி விட்ட பிறகு, இப்போது அங்கே பூக்கள் அழுகிய நாற்றம் மட்டுமே மிஸ்ஸிங். மற்ற நாற்றங்கள் அப்படியே. இதைப் பற்றி எந்தச் சங்கடமுமில்லாமல் திட்டுத் திட்டாய்க் காய்ந்திருந்த இடங்களில் தக்காளியையும், உருளையையும் கூறுகட்டி வைத்துக் கொண்டு காத்திருக்கும், புகையிலை குதப்பும் கிழவிகள், ரோட்டோர சாக்கனா கடைகள், அதில் மாற்றிமாற்றி வந்து தின்று கொண்டிருக்கும் திண்டு திண்டு மனிதர்கள்...



முண்டாசு கட்டிய மூட்டைத் தூக்கிகள். நிர்வாணங்களாய்த் திரியும் அவர்களின் வாரிசுகள். இதற்கிடையில் கடைசி நிமிஷம் வரைக்கும் தத்தம் ஜோலியைப் பார்த்துவிட்டுப் பஸ்களைப் பிடிக்க ஓடும் பயணிகள்.

"என்னது 89 ஜி போயிடுச்சா! எப்படி? 4.10 தான் அவன் டைமு. 3.45 தானய்யா ஆவுது. எப்படி போவலாம்?"

"தோ பார்றா ரூல்ஸு. ஆங்.. பஸ்ஸு ரொம்பிட்ச்சிப் பூட்டான் போயேன் ஹக்காங்."

"சார் சார்! டைம் பாஸிங் புக் சார்! ரஜினி, மந்த்ரா ப்னோ அப் அஞ்சே ரூபா சார்! டைம் பாஸிங் புக் சார்!"

பழைய பேப்பர் கடையில் எடை போட்டு வாங்கியதை தூசி தட்டி அதையும் ஒருத்தன் காசு பண்ணிக் கொண்டிருந்தான். அட்டையில் வாஜ்பாயும் ஜெயலலிதாவும் கையை உயர்த்தி சிரித்துக் கொண்டிருப்பதில் அதன் தொன்மைத் தெரிந்தது. இந்தச் சிங்காரச் சென்னையில் எப்படியெல்லாம் தான் பிழைக்க முடிகிறது? வழக்கமாகவே இங்கே நெரிசல் அதிகம். அதிலும் நாளை முகூர்த்த நாள் வேறு. சனி-ஞாயிறு அரசு விடுமுறை நாள் என்பது இன்னொரு ப்ளஸ். பஸ் நிறுத்துவதில் ஏற்பட்ட தகராறில் இரண்டு டிரைவர்கள் ஆக்ரோஷமாக சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள்.கெட்ட வார்த்தைகள் தாய் மொழிபோல தொடர்ச்சியாக வந்து விழுந்து கொண்டிருந்தன.

"சார்... சார்! குடியாத்தம் பஸ் எப்ப சார்?"

சண்டையைப் பாதியில் நிறுத்திவிட்டு ஆத்திரமாய்த் திரும்பியவன்,

"இன்னிக்கு மழை பெய்யும்னு பேப்பர்ல போட்டிருக்கான்யா. அது மட்டுந்தான் தெரியும். படிச்சவன்தானே? போய்த் தேடேன். டிப்போவுல போய் விசாரி. அத்த வுட்டுட்டு எந்தாலிய ஏன்டா அறுக்கறே?"

கேட்டவன் பாதியிலேயே விட்டுவிட்டு அடுத்தவனைக் கேட்க ஓடிவிட்டான். எதிராளிக்கு இப்போது சிரிப்பு வந்துவிட "டென்ஷன் ஆவாதடா மச்சான்! வா ஒரு டீ அடிப்போம்'' வலுக்கட்டாயமாக அவனை இழுத்துச் சென்றான்.

மீஞ்சூர் பஸ் கிளம்ப ஆயத்தப்பட்டுக் கொண்டிருந்தது. டிரைவர் கீழே

# மூட்டை

செய்யாறு தி.தா. நாராயணன்

சிகரெட்டின் கடைசி வலிப்பிலிருந்தார். உள்ளே உட்கார்ந்திருந்த நான் அப்போது தான் அந்தப் பெரியவரை கவனித்தேன். மூட்டை தூக்கி ஒருத்தனுடன் மல்லுக் கட்டிக் கொண்டிருந்தார்.

"ஏம்பா இப்படிப் பேசறே? நானா உன்னை மூட்டையைத் தூக்கியாறச் சொல்லிக் கூப்பிட்டேன்? நீயேதான வந்து குடுக்கிறதைக் குடுன்னு வலுக்கட்டாயமாகத் தூக்கிகினே? பத்து ரூபாதான் குடுப்பேன்னு நான் அப்பவே சொல்லிட்டேன் ஆமா."

"நீ சொல்லிட்டா? நான் ஒத்துக்கினேனா?"

"சொன்னதுக்குச் சும்னு வந்து மூட்டையைத் தூக்கினா என்ன அர்த்தம்?"

"தூத்தெறி! இன்னா அர்த்தம்? கூலியை அங்க போய் பேசிக்கலாம்னு அர்த்தம். யோவ்! இன்னா... இன்னா தகராறு பண்றே? அம்பது எடு. இல்லேன்னா மவனே! இங்க நடக்கிறதே வேற!"

கிழவனுக்கு அதிர்ச்சியாகிவிட்டிருக்க வேண்டும்.

வாய் திறக்காமல் பேந்த பேந்த நின்றார். கையில் அவ்வளவு பணம் இல்லையோ என்னவோ, மேல் துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

"மூணு மரக்கா வேர்க் கடலை, அதுக்கே நூறு ரூபா இல்லையியா. ஊஹூம் பத்துக்கு மேல தர முடியாது. சுத்த கேப்மாறித் தனமாயில்ல இருக்குது?"

"ஆங்... நாங்க கேப்மாறிங்க, இவரு ஞாயஸ்தன். யோவ் பெருசு! இப்ப இன்னான்ற? ஆங்!"

இப்போது இரண்டு மூன்று 'பரட்டை'கள் வந்து சேர்த்து கொண்டன.

"பெருசு இன்னான்னுது மாமு?" வந்த ஒரு பரட்டைத்தலை கிழவரை நெட்டித் தள்ளியது. கிழவருக்கு ஆத்திரத்தில் மூச்சு வாங்கியது.

'டேய்! படுபாவி என்னையா தள்ற? நீ நாசமாப் போவடா. அல்பாயுசுல போவடா!"

அங்கே பேச்சுக்கள் கொஞ்சம் கொஞ்சமாய்த் தடித்து ஒரு சூடான கட்டத்தை நெருங்கிக் கொண்டிருப்பதாய்ப் பட்டது. கிழவரும் இப்போது ஆவேச கட்டத்திலிருந்தார்.

"பத்து ரூபாய்க்கு மேல ஒத்த காசு தர மாட்டேன். உங்களால ஆனதைப் பாருங்கடா. என்னடா இது அநியாயம்? அண்ணாமலை மன்றத் திருப்பத்திலிருந்து இங்க வர்றதுக்கு அம்பதா? நானே சுலுவாய்த் தூக்கியாந்திருப்பேன். அப்ப வந்து கெஞ்சிட்டு, இங்க வந்தப்புறம் கும்பலா சேர்ந்துக்குனு என்னையா தள்றீங்க? போலீஸ் ஸ்டேஷனுக்குப் போறேன் இரு."

"ச்சீ! துட்ட எடு! பெரிய போலீஸு!"

"டேய்! பெரியவரை ஏமாத்தறீங்களா? குடுக்கிறத வாங்கிப் போங்கப்பா. விட்டா முழுங்கிடுவீங்களே... திருட்டுப் பசங்க!" - உள்ளேயிருந்து அருபமாய் ஒரு குரல் வர இங்கே குப்பென்று பற்றிக் கொண்டது.

"ஏய்! யார்றா அவன் உள்ளே அரிச்சந்திரன்? டேய் மச்சான் நம்மளப் பார்த்து ஒரு கயித திருட்டுப் பசங்கன்றான்டா. பேமானி உள்ளேதான் கீறான். டேய்.. டேய்.. வுடாத அவனை... அப்படியே அமுக்கு."

நான்கைந்து முண்டாசுகள் தபதபவென்று உள்ளே ஏறின.

"த்தா! எவன்டா அவன்? த்தா! எவன்டா?" - பஸ்ஸில் நாங்கள் யாரும் மூச்சு காட்டவில்லை. கப்சிப். இறங்கும்போது அவர்களைத் திரும்பிப் பார்த்த ஓர் இளைஞனை இன்னாடா கயித?" என்று ஒரு அடிபோட்டுவிட்டுப் போனார்கள்.

"ஏய் கெயவா! இன்னா தமாஸ் காட்டிங்கிற? எடுய்யா" - கிழவனுக்கு இப்போது பயம் வந்துவிட தடதடவென்று ஆடினான். மூட்டைத் தூக்கியின் கையைப் பிடித்துக் கொண்டு கெஞ்ச ஆரம்பித்தான்.

"தம்பி! அவ்வளவு இல்லப்பா.. மீஞ்சூர் போவணும்பா. பேத்தி அங்க மாசமா

இருக்கா. அது, வேர்க்கள்ளன்னா உசர வுட்றுமேன்னு கொண்டு போறேம்பா. தம்பி! இந்தா பத்து ரூபா வெச்சிக்க. சோதிக்காதடா கண்ணு! இந்தா வாங்கிக்க."

"த்தா! இது ஆவாது. டேய் மணி! மூட்டையத்தூக்கு வுடு ஜூட்! துட்ட குடுத்துட்டு வாங்கிண்டுபோ கெயவா!" - ஒருத்தன் மூட்டையைத் தூக்கிக் கொண்டு நடந்தான். கிழவன் ஐயோ ஐயோ என்று அலற, எங்களுக்குக் கிழவனைப் பார்க்க பாவமாயிருந்தது. எதுவும் செய்ய திராணியில்லை. கிழவன் ஆத்திரம் தாளாமல் இப்போது அவர்களைக் கெட்ட வார்த்தைகளில் திட்ட ஆரம்பித்தான். என் பக்கத்திலிருந்த இளைஞன் ஆக்ரோஷமாகப் பொரிய ஆரம்பித்தான்.

"போலீஸ்லாம் என்னய்யா பண்ணுது? சே! லா அன்டு ஆர்டரே இங்கே சுத்தமா கெட்டுப் போயிடுச்சி சார். இவனுக ஒவ்வொருத்தனையும் நிக்க வெச்சி முட்டிக்கு முட்டி தட்டினாத்தான் சரிப்படும்."

கடைசி வாக்கியத்தைத் தனக்குள்ளே முணுமுணுப்பாய் முனகிவிட்டு அவர்களுக்குக் கேட்டுவிட்டிருக்குமோ என்று அவசர அவசரமாக எட்டிப் பார்த்தான். கிழே அவர்கள், பணத்துக்காக 'எட்றா... எட்றா...' என்று மாற்றி மாற்றி கிழவனைத் தள்ளினார்கள். அவனுடைய பலவீனமான கூச்சல் இங்கே யாரையும் அசைக்கவில்லை.

தாள முடியாமல் எழுந்தேன். கிழவன் கண்ணீர் தளும்ப பரிதாபமாய் நின்றிருந்தான். வேர்க்கடலை மூட்டை போன இடம் தெரியவில்லை. ஓ.கே! அவர்களிடம் நியாயம் கேட்கும் சக்தி எனக்கில்லை, அது முரட்டுப்படை, சமாதானமாகப் பேசி ஐம்பது ரூபாயை நானே கொடுத்து கிழவனை மீட்கத் தீர்மானித்துவிட்டேன். ஒரு நிமிஷம் மனசுக்குள் சீதா வந்து கண்ணை உருட்டிக் காட்டினாள். ஐம்பது ரூபாய் கொடுத்தது தெரிந்தால் கத்துவாள்.

கிழவனிடம் அவ்வளவு பணமில்லை, தெரிகிறது. மூட்டைத் தூக்கிகள் கும்பலாய் நின்று ஜேபியிலும் அடிமடியிலும் ஏதாவது பணம் வைத்திருக்கிறானா? என்று முரட்டுத்தனமாய் அவனிடம் செக் பண்ணிக் கொண்டிருந்தார்கள். அப்போது திடீரென்று அந்த பஸ்ஸின் முன் புறத்திலிருந்து கணீரென்று ஒரு குரல் கர்ஜிப்பாய் எழுந்தது.

"யோவ்! எய்ட் நாட் நைன்! ராஸ்கல்ஸ்- அந்தப் பொறுக்கிங்களை இப்படித் தள்ளுயா! போனாப் போவுதுனு விட்டா... துளுத்துப் போச்சு..."

எல்லோருடைய பார்வைகளும் அங்கே ஓட, டீஸன்ட்டாய் பேன்ட் ஷர்ட், தங்க நிற ஃப்ரேமில் ரேபான் கூலிங்கிளாஸ், ஒட்ட வெட்டிய தலைமுடி, கட்டுமஸ்தான கரணை கரணையான உடல் வாகு, எடுத்தெரிந்த பார்வை - இந்த கெட்டப்பில் ஓர் இளைஞர் உட்கார்ந்திருந்தார். பின்னால் உட்கார்ந்திருந்த எய்ட் நாட் நைன், அவரும் மஃப்டியிலிருந்தார். "எஸ் சார்!" என்று சொல்லிவிட்டு திபு திபுவென்று ஓடி, கிழவனைத் தள்ளித் தள்ளி விட்டுக் கொண்டிருந்த ஒரு பரட்டைத் தலையனை ஓங்கி பளீரென்று ஒரு அறைவிட்டார். டாய்...! என்று ஓடி வந்த இன்னொருத்தன் வயிற்றில் எட்டி ஒரு உதை, அவன் சுருண்டு விழுந்தான்.

"ஏய்! எல்லோரும் முன்ன போங்கடா! ஐயா கூப்பிட்றார் பார்! உம்.." அவர்களை நெட்டித் தள்ளினார்.

"பெரியவரே! நீங்களும் போங்க. உம்."

அவர்கள் தயங்கித் தயங்கி முன்னே போய் நின்றார்கள்.

"ஏய்! என்னா? ஒவ்வொருத்தனுக்கும் லாடங்கட்டணுமா? ஆங் ஏமாந்தவனா ஒரு கிழவன் மாட்டனா, கும்பலா கூடிக்கிட்டு அடிக்கச் சொல்லுதா? த்தெறி! இந்த ஏரியாவுல பெரிய ரவுடியாடா நீ? கூப்பிடாம ஆஜராயிட்ட?" பரட்டைத் தலையனை ஓங்கி ஒரு அறை விட்டார்.

"நூறு ரூபா தாங்காத வேர்க்கள்ளயை தூக்கிவர ஐம்பது ரூபா வேணுமா? டேய் பொறுக்கி! எவ்வளவு உதைச்சாலும் திருந்தவே மாட்டீங்களா? மூட்டைத் தூக்கியாத்

# மண்டபத்துக்கு வந்த இனிஷியல்!

ஸ்ரீரங்கம் காவிரிக்கரையில் அமைந்துள்ளது அம்மா மண்டபம். நதிக்கரையோர படித்துறைகளில் புகழ் பெற்றது இது. வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகள், அனைத்து மாநில பக்தர்கள் அனைவரும் பொங்கி வரும் பொன்னி நதியழகைக் கண்டு ரசிக்கும் இடம் இந்த மண்டபம். முன்னோர்களுக்குக் கிரியைகள் செய்ய விரும்புவோர்களில் ஒரு சாரார் தமிழகத்தில் எங்கு வசித்தாலும் இங்கு வந்துதான் காரியங்கள் செய்து விட்டுச் செல்கிறார்கள்.

துலாம் மாதமான ஐப்பசியில் பெருமாளுக்குத் தினந்தோறும் அதிகாலையில் அம்மா மண்டபத்திலிருந்துதான் புனித நீர் நிறைந்த பொற்குடத்தை கோயில் யானையான ஆண்டாள் சுமந்து செல்லும். இத்தனை பெருமைகள் பெற்ற அம்மா மண்டபம் சமீபமாய் நடைபெற்ற சம்ப்ரோட்சணத்திற்குப் பின்னர் வி.கே.என். அம்மா மண்டபம் எனப் பெயர் மாற்றம் பெற்றுவிட்டது.

நடந்தது இதுதான் : இதுவரை கதவுகள் ஏதுமின்றி திறந்தவெளி மண்டபமாக இருந்ததைச் சுற்றிலும் இரும்புக் கம்பிக் கதவுகள் பொருத்தக் கோயில் நிர்வாகம் முடிவு செய்தது. இதற்கென ஒரு நன்கொடையாளரை நாடியது. வி.கே.என். எனும் பெயரில் துவாக்குடியில் பல்வேறு பொறியியல் தொழிலகங்களை நடத்தி வருபவரும், தி.மு.க. பிரமுகருமான வி.கே.என். கண்ணப்பன் அதற்கு முன்வந்தார். ஒரு லட்சத்து எண்பதாயிரம் ரூபாய் செலவில் கிரில் கதவுகள் அமைக்கப்பட்டன. அவற்றில் ஐம்பது இடங்களுக்கும் மேலாக அந்த மூன்றெழுத்துகள் பொறிக்கப்




பட்டுள்ளன. மண்டபத்தின் முகப்புச் சுவரில் எழுதியிருப்பதையும், கிரில் கதவு வாசலில் பொறிக்கப்பட்டு இருப்பதையும் வாசிக்கும்போது வி.கே.என். அம்மா மண்டபம் என்றே படிக்க நேர்கிறது.

அம்மா மண்டபம் மிகப் பழமையானது. தனித்துவம் நிறைந்தது. அரங்கன் பக்தர்களின் மனத்தில் நிலைத்து நிற்பது. அதன் தனிப் பெயர் காப்பாற்றப்படுமா என வினவுகின்றனர் ஸ்ரீரங்கவாசிகள்.

**- இருள்நீக்கியான்.**

தவன் அதோ நிக்கறான் நீங்கள்லாம் யாருடா? சம்மன் இல்லாம ஆஜர். இந்த பிஸாத்துக்குப் பஞ்சாயத்தா?

"இல்லே சார்! கெயவன்..."

"டேய்! என்னா?" - சப் இன்ஸ்பெக்டர் விலுக்கென்று எழுந்துகொள்ள, எல்லோரும் ஒரு அடி பின்னால் ஜகா வாங்கினார்கள்.

"யோவ்! பெரியவரே! எவ்வளவு கூலிபேகன?"

"பத்து ரூபா சார்!"

"அவன்கிட்ட குடு, ஏய்! வாங்கு! ஏமாத்திப் பொழைக்காதீங்கடா."

"ஹுக்கும்! ஏமாத்திதான் மாட மாளிகை கட்டி வெச்சிருக்கமே பார்க்கல? எனக்கு வாணாம் சார்! சும்மா செய்ததா இருக்கும்."

இன்ஸ்பெக்டர் கை வேகமாய் நீளவும் அவன் சட்டென்று குனிந்து கொண்டான். பின்பு முன்னே வந்து வேண்டா வெறுப்பாய் பத்து ரூபாயை வாங்கிக் கொண்டு விலகினான். சற்றுத் தள்ளி நின்றிருந்த பாண்டி பஸ்ஸுக்குப் பின்புறமிருந்து மறைந்த வேர்க்கடலை மூட்டையைத் தூக்கி வந்து கிழவன் காலடியில் போட்டார் எயிட் நாட் நைன்.

மூட்டையைத் தூக்கி பஸ்ஸில் ஏற்ற முயன்ற கிழவனுக்குத் திக்கென்றது. பாதிக்குப் பாதி எடை குறைந்து மெலிந்து போயிருந்தது கடலை மூட்டை.

"ஏமாத்திப்புட்டாங்க திருட்டுப் பயலுங்க..." முணுமுணுத்தபடி மூட்டையை நகர்த்தினார் அவர்.

'ஏட்டு'க்கும் 'இன்ஸ்பெக்டரு'க்குமிடையே நடந்த பார்வை பரிமாற்றம், பஸ்ஸுக்குள் இருந்த எனக்குத் தெரிந்தது.



• கே. என். நேரு

# வெல்வாரா நேரு?



• கே. துரை



• விவேகானந்தன்

திருச்சி ஒன்றாவது சட்டமன்றத் தொகுதி. தீப்பெட்டி அளவில் தம்மாத் துண்டுத் தொகுதி. ஒன்னே கால் லட்சம் வாக்காளர்கள். மாநகராட்சி அந்தஸ்தினால் நகரின் நெருக்கடியான சந்து பொந்துகளில்கூட அருமையான சாலை வசதி. குடிநீர் வசதி. சோடியம் விளக்குகளின் ஜொலிக்கும் ஒளி. "இத்தனை வெளிச்சத்திலும் எங்கள் தொகுதி எம்.எல்.ஏ.வைத் தேடிக் கொண்டிருக்கிறோம்" என்கிறார்கள் தொகுதி வாக்காளர்கள். தற்போதைய தி.மு.க. சட்டமன்ற உறுப்பினரின் முக தரிசனம் அத்தனை எளிதில் கிடைப்பதில்லை. எம்.எல்.ஏ.வுக்கும் தொகுதி மக்களுக்கும் இடைப்பட்ட தொடர்பு அத்தனை பூஜ்யம்.

இத்தனை இடர்ப்பாடுகளுக்கு இடையே மும்முனைப் போட்டியில் தி.மு.க. சார்பில் பரணிகுமார், அ.தி.மு.க. கூட்டணி சார்பில் முஸ்லிம் லீக் வேட்பாளர், ம.தி.மு.க. சார்பில் மலர்மன்னன் ஆகியோர் களத்தில். பத்தாயிரம் இஸ்லாமிய வாக்குகளை மனத்தில் கொண்டு தேசிய லீக் கட்சிக்கு இத்தொகுதியை ஒதுக்கியுள்ளது அ.தி.மு.க. தொகுதியில் பரவலாக காங்கிரஸ் வாக்குகளும், அ.தி.மு.க. வாக்குகளும் சிதறிக் கிடந்தாலும், 'சிட்டிங் எம்.எல்.ஏ.' மீதான வெறுப்பை அ.தி.மு.க. கூட்டணியினர் எப்படிப் பயன்படுத்திக் கொள்ளப் போகிறார்கள் என்பதைப் பொறுத்தே வெற்றி வாய்ப்பு அமையும்.

இவர்களுக்கிடையே சொடுக்கிவிட்ட பம்பரமாகச் சுழன்று கொண்டிருப்பவர் ம.தி.மு.க. வேட்பாளர் மலர்மன்னன். 1996 தேர்தலில் இவர் மூவாயிரத்து சொச்சம் வாக்குகளே பெற்றிருந்தார் என்றாலும், தனது அணுகுமுறை, தொகுதிவாசிகளிடம் வாக்குச் சேகரிப்புத்திறன் மூலமாக முன்பைவிட கூடுதல் வாக்குகள் இவர் பெற நேர்ந்தால் அது நேரிடையாக தி.மு.க. வெற்றி வாய்ப்பைப் பாதிக்கும்.

தொகுதி வாசிகளின் மதிப்பீட்டில் இந்த முறை தி.மு.க. ஆட்சி குறித்து முதல் வகுப்பு மதிப்பெண்களுக்கு மேலே பெற்றிருந்தபோதும், பெரும்பான்மை வாக்காளர்களிடமும் சரி, தி.மு.க.வில் ஒரு பிரிவினரிடமும் சரி, தி.மு.க. வேட்பாளர் பற்றி நல்ல அபிப்ராயம் இல்லை. இது தி.மு.க.வுக்கு மைனஸாக இருக்கிறது. இதைச் சாதகமாக்கிக் கொள்ளும் முயற்சியில் அ.தி.மு.க. ஆனால், "தற்போதைய எம்.எல்.ஏ. மீது அதிருப்தி இருந்தாலும் அதற்காக தேர்தலில் விட்டுக் கொடுக்க முடியுமா? நாங்கள்தான் வெற்றி பெறுவோம்!" என்கிறார்கள் தி.மு.க.வினர்.

### அதுவல்ல பிரச்னை!

திருச்சி இரண்டாவது சட்டமன்றத் தொகுதி. திருச்சி மாநகராட்சியின் இருபத்திரண்டு வார்டுகளை உள்ளடக்கி, இரண்டு லட்சம் வாக்காளர்களைக் கொண்டது. கடந்த ஆண்டு நடைபெற்ற இடைத் தேர்தலில் வெற்றி பெற்ற அன்பில் பெரிய

• பிரின்ஸ் தங்கவேலுக்கு வந்த கூட்டம்

சாமியே மீண்டும் தி.மு.க. வேட்பாளர். அ.தி.மு.க. கூட்டணியில் காங்கிரஸ் சார்பில் பி.சி. செல்வராஜ். மதி.மு.க. சார்பில்தொழிற் சங்கத் தலைவர் கண்ணையன். இருந்தாலும் அ.தி.மு.க.வுக்கும் தி.மு.க.வுக்குந்தான் நேரடிப் போட்டி.

தி.மு.க. வேட்பாளரைப் பொறுத்தமட்டில் தொகுதி மக்களிடம் மரியாதை இருக்கிறது. "அ.தி.மு.க. காங்கிரஸ், த.மா.கா.வுக்குள் நடக்கும் கோஷ்டிப் பூசல் எங்களுக்கு நிச்சயம் வெற்றியைத் தேடித் தரும். இப்போது அதுவல்ல பிரச்னை. எத்தனை வாக்குகள் வித்தியாசத்தில் ஜெயிக்கிறோம் என்பதே பிரச்னை" என்கிறது தெம்பான தி.மு.க. வட்டாரம்.



• கே. என். சேகரன்



• பிரின்ஸ் தங்கவேல்

**பொய் சொல்ல விரும்பலை!**

இரண்டு லட்சத்து அறுபதாயிரம் வாக்காளர்களைக் கொண்ட திருவெறும்பூர் தொகுதி தற்போது சந்திப்பது நான்கு முனைப் போட்டியை.

தி.மு.க. வேட்பாளர் கே.என். சேகரன் - புது முகம். அ.தி.மு.க. கூட்டணியில் மார்க்சிஸ்ட் சார்பில் போட்டியிடும் டி.கே. ரெங்கராஜன் - தேர்தல் களம் பல கண்டவர். பொன்மலை ஒர்க்ஷாப், பாய்லர் ஆலை, துப்பாக்கித் தொழிற்சாலை மற்றும் சிறுசிறு தொழிலகங்கள் நிறைய அடங்கிய தொழிலாளர்கள் நிறைந்த தொகுதி இது என அரசியல் பார்வையாளர்களால் கணிக்கப்பட்ட போதும், கடந்த 1996 தேர்தலின்போது மதி.மு.க. கூட்டணியுடன் மார்க்சிஸ்ட் இணைந்து பெற்ற வாக்குகள் 11,500 மட்டுமே. தனிக் குடித்தனத்திற்குத் தள்ளப்பட்ட ம.தி.மு.க. தனித்துப் போட்டியிடுகிறது.

இவை ஒருபுறமிருக்க, தொகுதியின் தி.மு.க. எம்.எல்.ஏ. ஆன துரைக்கு சீட் தரப்படவில்லை என்றதும் கட்சியிலிருந்து விலகி சுயேச்சையாகப் போட்டியிடுகிறார். ஐந்து ஆண்டுகளாக தொகுதி மக்களை அனுசரித்துப் போன



வருக்கு லோக்கல் கட்சிக்காரர்களை அனுசரித்துப் போகத் தெரியாததன் பலன் இது என்கிறார்கள். "என்னால் இயன்ற அளவுக்குத் தொகுதி மக்களுக்கு நன்மைகள் செய்துள்ளேன். பதினெட்டு கோடி ரூபாய் செலவில் கூட்டுக் குடிநீர்த் திட்டத்தைச் செயல்படுத்தியிருக்கிறேன். இதில் எண்பது சதவீதப் பணிகள் முடிவடைந்து விட்டன. மீதமுள்ள வேலைகள் முழுமை பெற்றுவிட்டால் திருவெறும்பூர், துவாக்குடி, கூத்தைப்பார் பகுதி மக்களுக்குக் குடிநீர்த் தட்டுப்பாடே வராது. என்னால் ஒத்துப் போக முடியாத கட்சிக்காரர்களின் 'பிரஷரால்' எனக்குச் சீட் கிடைக்கவில்லை. அதனால் கட்சியிலிருந்து விலகி விட்டேன். இதனை வெளிப்படுத்தவே சுயேச்சையாக நிற்கிறேன். நான் வெற்றி பெறுவேன் என்று பொய் சொல்லவிரும்பவில்லை. மீண்டும் இங்கு தி.மு.க.தான் வெற்றி பெறும்!'' என்று வெளிப்படையாகப் பேசுகிறார் அவர்.

## ஜாதி பார்த்து அல்ல!

ஸ்ரீரங்கம் சட்டமன்றத் தொகுதி தி.மு.க. வென்ற இடம். தொகுதிப் பங்கீட்டில் பாரதிய ஜனதாவுக்கு ஒதுக்கப்பட, 'கௌரவத்துடன்' ஒதுங்கி வழிவிட்டவர் தி.மு.க.வின் தி.ப.மாயவன். இரண்டரை லட்சம் வாக்காளர்கள். ஸ்ரீரங்கம் நகரம், மணிகண்டம் ஒன்றியம், அந்தநல்லூர் ஒன்றியம் ஆகியன அடங்கிய கொஞ்சம் விஸ்தாரமான தொகுதி.

பாரதிய ஜனதாவைப் பகைத்துக் கொள்ள விரும்பாத ம.தி.மு.க.வின் உபயத்தால் இங்கு இருமுனைப் போட்டி. தி.மு.க. தலைமையிலான பாரதிய ஜனதா வேட்பாளர் சௌந்தரபாண்டியன். அ.தி.மு.க. வேட்பாளர் கே.கே. பாலசுப்ரமணியன். சட்டமன்றத் தேர்தல் களம் இருவருக்கும் புதிது. தாமரையா? இரட்டை இலையா? என்பதுதான் போட்டி.

அ.தி.மு.க. வேட்பாளர் முத்தரையர் சமூகத்தைச் சேர்ந்தவர். பாரதிய ஜனதா வேட்பாளர் முத்தரையர் அல்லாதவர். தொகுதியில் கணிசமான வாக்கு வங்கி முத்தரையர் இனத்திடம் இருக்கின்றது. ஸ்ரீரங்கம் நகரம் தவிர்த்து ஏனைய இரு ஒன்றியங்களும் கிராமங்கள் நிறைந்தவை. கிராமத்தின் நிரந்தர இரட்டை இலை வாக்குகள், முத்தரையர் இன வாக்குகள் எல்லாம் சேர்ந்து அ.தி.மு.க.வுக்கு வெற்றியைத் தேடித்தரும் என்கிறார்கள் அ.தி.மு.க.வினர். "ஜாதி பார்த்து அல்ல. நல்லவரைப் பார்த்தும் நல்லது செய்பவரைப் பார்த்துதான் மக்கள் வாக்களிப்பார்கள். இச்சூழலில் நாங்கள் வெற்றிபெறப் போவது உறுதி" என்கிறார்கள் பா.ஜ.க.வினர்.






## வேறு கணக்கு!

முசிறி தொகுதி சந்திப்பது மிகக் கடுமையான நான்குமுனைப் போட்டியை. கடுமையாக்கி இருப்பவர் பிரின்ஸ் தங்கவேல். இரண்டு முறை அ.தி.மு.க. எம்.எல்.ஏ.வாக இதே தொகுதியில் வெற்றி பெற்றவர். சீட் கிடைக்காததால் சுயேச்சையாகப் போட்டியிடுகிறார் ஏராளமான அ.தி.மு.க. ஆதரவாளர்களின் உற்சாகத்தினால்.

அ.தி.மு.க.வின் அதிகாரபூர்வ வேட்பாளராக மனுதாக்கல் செய்திருந்த ரேவதி பத்மநாபன் சில குறைபாடுகளால் கட்சித் தலைமையினால் நிராகரிக்கப்பட்டு மல்லிகா சின்னச்சாமி என்பவர் தற்போது அ.தி.மு.க. வேட்பாளராகப் போட்டியிடுகிறார். முன் பொருமுறை தோல்வியைத் தழுவிய அனுபவம் அவருக்கு இருக்கிறது.

ம.தி.மு.க. வேட்பாளராகக் களத்தில் குதித்திருப்பவர் கினியநல்லூர் நடராசன். 1996 தேர்தலில் இங்கு ம.தி.மு.க. தனித்து நின்று இருபத்தியோராயிரம் வாக்குகள் பெற்றிருந்தது. இவருக்கும் 'தொடர் தோல்வி' அனுபவங்கள் உண்டு.

தி.மு.க.வின் சிட்டிங் எம்.எல்.ஏ.வை ஓரங்கட்டிவிட்டு தற்போது தி.மு.க. சார்பில் களத்தில் நிற்பவர் விவேகானந்தன். சட்டமன்றத் தேர்தலுக்குப் புதுமுகம். மற்ற மூவரும் பழைய முகம்.

சாதி ஓட்டுகளின் பிரதிபலிப்பு இங்கும் உண்டு என்கிறார்கள் தொகுதிவாசிகள். தொகுதியில் பெரும்பான்மையோர் முத்தரையர்கள். அடுத்து பிள்ளைமார். இதில் வேடிக்கை என்னவென்றால் அ.தி.மு.க. - ம.தி.மு.க. - சுயேச்சை (அ.தி.மு.க. அதிருப்தி) வேட்பாளர்கள் மூவரும் முத்தரையர் இனத்தவர்களே.

1996 தவிர அதிக முறை அ.தி.மு.க.வே வெற்றி பெற்ற இத்தொகுதியில் அ.தி.மு.க. அதிருப்தி (சுயேச்சை) வேட்பாளராக பிரின்ஸ் தங்கவேல் போட்டியிடுவதால் யாருக்கு வெற்றி என்பது தீர்மானிக்க முடியாததாக உள்ளது. வேட்பு மனு தாக்கலின் முன்பாக அண்ணா சிலைக்கு மாலை போட்டபோது பிரின்ஸ் தங்கவேலின் ஆதரவாளர்கள் பெருங்கூட்டமாக திரண்டு நின்றதை முசிறிவாசிகள் இன்னமும் முணுமுணுக்கிறார்கள். கட்சியின் எண்பது சதவீத நிர்வாகிகள் அவருக்கு ஆதரவாகச் செயல்பட்டு வருகிறார்கள்.

இந்நிலையில், தி.மு.க.வினர் போடும் கணக்கே வேறாக இருக்கின்றது. முத்தரையர்கள் வாக்குகளை அந்த மூன்று வேட்பாளர்களும் பிரித்துக் கொள்ள, தொகுதியின் நிலையான தி.மு.க. வாக்குகள் ப்ளஸ் பிள்ளைமார் வாக்குகள் ஒன்றிணைந்து தமது வேட்பாளரை வெற்றி பெறச் செய்து விடும் என்கிறார்கள். யார் போடும் கணக்கு நிஜமாகும் என்பது தெரியவில்லை.

## நெருக்கடியில் நேரு!

தி.மு.க. அமைச்சர் நேரு இங்கு நிற்பாரா, வேறு தொகுதி மாறுவாரா?... அமைச்சர் நேருவின் ப்ளஸ்களும் மைனஸ்களும் இந்தக் குழப்பத்தை லால்குடி தொகுதியினர் மத்தியில் ஏற்படுத்தியிருந்தது.

சுமார் எண்பதுக்கும் மேற்பட்ட கிராமங்களையும் அதனுள்ளே ஒரு லட்சத்து எண்பத்திநாலாயிரம் வாக்காளர்களையும் கொண்டது லால்குடி தொகுதி. அதிகபட்ச சதவீதமாய் உடையார் இன வாக்குகள். அடுத்து முத்தரையர் இன வாக்குகள். ம.தி.மு.க. சார்பில் நிறுத்தப்பட்டிருக்கும் சி. ஆதனன் உடையார் இனத்தைச் சேர்ந்தவர். அ.தி.மு.க. சார்பில் போட்டியிடும் எஸ்.எம்.பாலன் முத்தரையர் இனம். அமைச்சர் கே. என். நேரு இரண்டு முறை இங்கு வெற்றி பெற்றது அவர்மீது தொகுதி மக்கள் வைத்திருந்த அபிமானமே என்கின்றனர் தொகுதிவாசிகள்.

சமீபத்தில் தி.மு.க. தொண்டர் ஒருவரை அவரது சாதிப் பெயரை இழிவாகச் சொல்லி ஏசியதாக வெளிப்பட்ட சம்பவம் அமைச்சர்






''மாப்பிள்ளை மெகாசீரியல்ல நடிக்கறார்...''

''அப்ப பர்மணண்ட் ஜாப்ல இருக்கார்னு சொல்லுங்க.''

- குமார்ஜி

நேருவை முத்தரையர் இன விரோதியாகச் சித்திரித்துள்ளது. அரசின் பல நலத்திட்டங்களைத் தொகுதிக்குள் கொண்டு வந்திருந்தபோதிலும், அமைச்சரின் கடுஞ்சொல் பிரயோகங்கள், தடாலடிப் பேச்சுகள், சில வரம்பு மீறிய செயல்கள் ஆகியன அழிக்க இயலாத கரும்புள்ளிகளாகவே தெரிகின்றன.

விவசாயிகளின் அதிருப்தியும் நேருவுக்கு எதிராகத் திரும்பியுள்ளது. சமீபத்தில் அறுவடை செய்த நெல்லை நியாயமான விலைக்கு வியாபாரிகளிடம் விற்க முடியாமல் போனதைத் தவிப்புடன் கூறுகிறார்கள் விவசாயிகள். 'இந்த விலைக்கு நாங்க நெல்லு போட்றதுனால ஒரு ஏக்கருக்கு ஐயாயிரம் ரூபா நட்டமாவுதுங்க!" எனச் சொல்கிறார்கள். இதனைக் கட்டுப்படுத்தாதது உணவு அமைச்சரின் மெத்தனம் எனக் கூறுகிறார்கள் அவர்கள்.

தி.மு.க., அ.தி.மு.க., ம.தி.மு.க. ஆகிய மூன்று திராவிடக் கட்சிகளின் வேட்பாளர்களுக்கு இடையே களத்தில் இன்னொரு இளைஞர் குதித்துள்ளார். புள்ளம்பாடி ஒன்றிய ரஜினி ரசிகர் மன்ற துணைச் செயலாளர் சகாதேவன் என்னும் இளைஞர்! 'எப்பிடியும் ஐயாயிரம் ஓட்டு வாங்கிடுவோம்ங்க. இது நேருவோட வெற்றியைத் தாங்க பாதிக்கும்" என்று சொல்கிறார்கள் ரஜினி ரசிகர் மன்றத்தினர்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# பத்ரி



படிக்காமல் ஊரைச் சுற்றும் 'ஜொள்' கூட்டணியின் தலைவனான விஜய்யும் அவருடைய அப்பாவும் இன்பத்தமிழன் - தாமரைக் கனி. 'டஸ்புஸ்' மோனலைக் காதலிக்க, விஜய். 'டப்பு' பார்ட்டி வேஷம் போட, ஒரு கட்டத்தில் வேஷம் கலைந்து காதல் மண்ணைக் கவ்வுகிறது. பலன், பூமிகாவின் ஒருதலைக்காதல் மனுதாக்கலை ஏற்றுக் கொண்டு, அதே சமயம், கால் உடைந்த அண்ணனின் 'பாக்ஸிங் சாம்பியன் கனவை' நிறைவேற்றி அப்பாவிடம் இழந்த டெபாஸிட்டை மீண்டும் பெறுகிறார் விஜய்.

பாதி படத்துக்கு விஜய் - விவேக் அண்ட் பார்ட்டி சைட் அடிப்பதையும் பெருமூச்சு விடுவதையும் பார்க்கச் சொல்லிக் கட்டாயப் படுத்துகிறார்கள். டி.வி. விளம்பரதாரர் புகழ் 'டெலிஃபோன்' காட்சி உட்பட சில ஸீன்களை ரசிக்க முடிகிறது என்றாலும் அதற்காக இப்படியா? அதுவும் மோனலை எல்லோரும் ஈ மொய்ப்பது போல் மொய்த்து ஈஷிக் கொள்ளும் காட்சி... குமட்டிக் கொண்டு வருகிறது.

போதாதற்குச் 'சிவகவி'யை மிஞ்சிவிடும் போலிருக்கிறது பாட்டு எண்ணிக்கை. பலன், பழநிபாரதியின் வரிகளிலோ ரமணாவின் இசையிலோ கவனம் போகவில்லை.

வர வர, விஜய், நிறைய ஹோம்-வொர்க் பண்ணி நடிக்கிறார், ஆடுகிறார் என்பது பளிச் சென்று தெரிகிறது. குட்!

பாக்ஸிங் செய்ய விஜய் ட்ரெயினிங் எடுக்கும் காட்சிகள் எல்லாம் ஓ.கே. ஆனால் போட்டியின் ரெஃப்ரீ இப்படியா தேர்தல் பிரசார லௌட்ஸ்பீக்கர் கணக்கில் 'ஆர் யு ஓ.கே?' என்று போட்டியாளர்களிடம் கத்துவார்? அன்ரியலிஸ்டிக்!

படத்தின் மற்ற அம்சங்களோடு ஒப்பிடும் போது ஆத்மார்த்தமான காதலை அழகாக வெளிப்படுத்தும் பூமிகாவுடைய ப்ளெஸன்ட்டான முகமும் அடக்கமான நடிப்பும் லட்சக் கணக்கான வோட்டு வித்தியாசத்தில் ஜெயிக்கின்றன.

மோனலின் செயற்கையான பட்டும் படாத நடிப்பு அவருடைய 'கோணல்' கேரக்டருக்கு யதேஷ்டம் என்றாலும் உடன் பிறவா, ச்சே, உடன்பிறந்த சகோதரிகளின் ராசி தொடர வேண்டுமானால், அதிரடி நடவடிக்கையாக, அவர் தன்னுடைய பெர்ஃபார்மன்ஸை ரிப்பேர் செய்து கொள்வது நல்லது!

— கிருஷ்ணா சிதம்பரம்

● ஆவரேஜ்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

# சேமிப்பு கணக்கின் வசதி, வைப்புத்தொகையின் வட்டி, கட்டணமின்றி விபத்து மற்றும் மருத்துவ காப்பீட்டு வசதி




வானவில் சேமிப்புக் கணக்கின் சிறப்பம்சங்கள் :

- சேமிப்புக் கணக்கிலிருந்து தானாகவே வைப்பு கணக்கிற்கு மாற்றும் வசதி
- தேவையின்போது பணம் எடுத்துக்கொள்ள வைப்புக்கணக்கிலிருந்து சேமிப்பு கணக்கிற்கு மாற்றிக்கொள்ள வசதி
- வைப்பு கணக்கில் பணம் எடுக்கும்போது வட்டி இழப்பை தவிர்க்க சிறப்பு வசதி (கடைசியில் போட்டது முதலில் எடுப்பது)
- ரூ. 2 லட்சத்திற்கான விபத்து காப்பீட்டுத் திட்டம் இலவசமாக
- விபத்தினால் ஏற்படும் மருத்துவ செலவிற்கு ரூ. 20,000/- வரை இலவச காப்பீடு
- கட்டணம் ஏதுமின்றி வெளியூர் காசோலை* வசூல் செய்து கொள்ளும் வசதி
- கட்டணமின்றி வரைவோலை(DD)* பெற்றுக்கொள்ளும் வசதி

* வங்கி விதிகளுக்குட்பட்டது.

மேலும் விபரங்களுக்கு உங்கள் அருகில் உள்ள கணிப்பொறிமயமாக்கப்பட்ட KVB கிளைகளை அணுகுங்கள்...




Since 1916

**தி கரூர் வைஸ்யா பேங்க் லிமிடெட்**

பதிவு மற்றும் மத்திய அலுவலகம், கரூர் - 639 001.

நாளும் நம்பிக்கை வளர்க்கும் வங்கி

A.D. நவநீதன்
சேர்மன்

இணையத் தொடர்புக்கு : www.kvb.co.in

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka



VSB/KK/2001/4